ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்த

# பெரியதிருவந்தாதி வ்யாக்யானம்

[ஸுதர்சனம் ஆசிரியரின் எளியநடை விவரணத்துடன் கூடியது]

[பதவுரையுடனும் அருப்பதவுரையுடனும் கூடியது.]

பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம்:—

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், ஸுதர்சனர்,

[ஆசிரியர் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"]

3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி 620 017.



ஸ்ரீ ரா. ஸ்ரீ கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.



விலை ரூ. 48] 1998 [தபாற்கூலி தனி

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத் க்ருஷ்ணஸூரயே நம:

# முதற்பதிப்பின் முகவுரை

"நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை என்பர் அவரவர்தம் ஏற்றத்தால் — அன்புடையோர் சாற்று திருநாமங்கள்" என்றார் மாமுனிகள் உபதேசரத்தினமாலையில். பெரியபெருமாள் பொங்கும்பரிவாலேபராங்குசனை நம்மாழ்வார் என்றே எப்போதும் அழைப்பர். திருவத்யயநோத்ஸவத்துக்கு வரும்படி ஆழ்வாருக்குத் திருமுகம் அனுப்பும்போதும் 'நம்மாழ்வார்' என்ற திருநாமமிட்டே அனுப்புவர். ஒரு சமயம் அர்ச்சையிலெழுந்தருளியிருக்கும் பெருமாளும் ஆழ்வாரும் யாத்ருச்சிகமாக ஓரிடத்தில் சந்தித்தபோது "நம்முடைய ஆழ்வார்! நம்மருகே வாரும்" என்று தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலே வைத்துக்கொண்டு முத்தின் சட்டையும் வட்டமணை முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்துத் தம்மையே ஒக்க அருள் செய்தார் என்கிற ஐதிஹ்யமும் உண்டு. "நஞ்சடகோபனைப் பாடினையோ என்று நம்பெருமான் விஞ்சியவாதரத்தால் கேட்ப" என்று கம்பநாட்டாழ்வார் பாடியிருக்கிறார். நாதமுனிகளும், அவரை யோகத்தினால் ஸாக்ஷாத்கரித்து த்வயம் முதலாகத் திருவாய்மொழியீருகவுள்ளவற்றை உபதேசம் பெற்றதினால் நம்மாழ்வார் என்று அபிமானித்தார். ஆளவந்தாரும் "ந: குலபதே:" [நம்முடைய குலபதியினுடைய] என்று அருளிச்செய்தார், இவைகளினால் இவருக்கு ப்ரபந்நஜநகூடஸ்தர் என்னும் திருநாமமும் வழங்கிவருகிறது. கொள்வாருமுண்டோ என்று படுகாடுகிடக்கும் க்ருபாதிசயத்தை உடையவன் கோயிலரங்கன், "பாடினான் அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்கிறபடி அருள்மாரியாக அருளிச்செயலமுதத்தைப் பொழிந்தவன் அருள்மாறன், "படைத்தான் கவி" என்று தம்மைத் தாமே பேசிக்கொண்டார் திருவாய்மொழியில், திருவிருத்தத்தில் "திருமாலவன் கவி" என்று தம் ப்ரபந்தத்தின் பெருமையையும் பாடினார்.

"நமோ வாசே யா சோதி₃தா யாச அநுதிதா (अनुदिता) தஸ்யை வாசே" என்று வேதபுருஷன், உதித்த வேதத்துக்கும் உதிக்கப்போகிற வேதத்துக்கும் நமஸ்காரம் செய்தான். தமிழ் மறை உதிக்கப்போவதைப் பண்டைமறை இப்படிப் பேசிற்று. ஸம்ஸ்க்ருதவேதமோ தான்தோன்றி. அடியற்றிருக்குமதே அதன் ஏற்றம், தான்தோன்றியாக இராமல் நம்மாழ்வாரால் தான்கு

பிரபந்தங்களாக அருளிச்செய்யப்பட்ட ஏற்றம் தமிழ்மறைக்கு உண்டு. "வேதம் தமிழ் செய்த மாறன்" என்றும், "ஸட₂ரே: உபநிஷத்₃ஸமுபக₃தமாத்ரபே₄தா₃:" என்றும் நாதமுனிகளும், "ஸ்வயம் ஸம்ஸ்க்ருதத்₃ராவிட₃வேத₃ ஸூக்தை:" என்று பட்டரும் இவை தமிழ் மறைகள் என்பதை அருளிச்செய்திருக்கிறார்கள். ஆசார்யர்கள் இதற்கு அபௌருஷேயத்வமும் உண்டென்று அபிப்ராயப்பட்டிருக்கிறார்கள். ஆழ்வார் மூலமாக இந்நான்கு ப்ரபந்தங்களும் உலகிற்கு வெளியிடப்பட்டபடியால் "குருகூர்ச் சடகோபன் பண்ணிய" என்று சொல்லத்தட்டில்லை. பண்டை வேதத்தைச் சிலரே அதிகரிக்கலாம். ஆழ்வார் அருளிச்செயல்களுக்கு ஆகாதாரில்லை. ஸம்ஸ்க்ருதவேதம் கல்லும் மண்ணும் கலந்த கட்டிப் பொன் போன்றது. இத்தமிழ் வேதம் பணிப்பொன் போன்றது. பண்டை மறையில், அந்தந்த அதிகாரிகளுக்குத் தகுந்தபடி ச்யேநயாகாதிகள், தேவதாந்தர ஸ்தோத்ரங்கள் முதலானவையும் இங்குமங்கும் காணப்படும். இப்பிரபந்தங்களிலோ பரப்₃ரஹ்மபூ₄தனான ச்ரிய:பதியின் ஸ்வரூப ரூப குணங்களைப் பேசும் பேரின்பம் விளைக்கும் பாசுரங்களே நிறைந்திருக்கும். மறந்தும் புறந்தொழா மாந்தர்கள் மனத்திற்குகந்ததான பரதத்வ நிர்ணயத்தைப் பராங்குசன் 'ஒ ஓ உலகினதியல்வே" முதலான பல பாசுரங்களில் பண்ணியிருக்கிறார். இக்காரணங்களால் இவருடைய ப்ரபந்தங்களே சுடர்மிகு சுருதி என்று ஆசார்யர்கள் அறுதியிட்டிருக்கிறார்கள்!

திருவாசிரியம் யஜுர்வேதஸாரம் என்றும், பெரிய திருவந்தாதி அதர்வண வேதஸாரம் என்றும் பெரியோர்களால் பேசப்படுகிறது. இவ்விரு ப்ரபந்தங்களுக்கும் பெரியவாச்சான்பிள்ளை யொருவரே வியாக்கியானம் செய்தருளியிருக்கிறார். அவருடைய வாசாமகோசரமான பெருமைகளில் சிறிது தம்மால் பலவிடங்களில் உணர்த்தப்பட்டது. "உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொரு நாள்" எனப்பட்ட ஆழ்வார் திருநக்ஷத்திர தினத்தன்று இவ்விரு ப்ரபந்தங்களும் வெளியானது ஆழ்வாருடைய க்ருபாபலமேயாகும்.

பராங்குச திருவவதாரஞு 5053

கர வருஷம்

வைகாசி விசாகம்.

இங்ஙனம்,

தொண்டரடிப்பொடி

தி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.

# இரண்டாவது பதிப்பின் முகவுரை

வேதம் தமிழ் செய்த மாறனான நம்மாழ்வார் ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்னும் நாலுவேதங்களின் ஸாரமாக முறையே திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி, பெரிய திருவந்தாதி ஆகிய நாலு திவ்ய ப்ரபந்தங்களை அருளிச்செய்தார். இவற்றில் ரிக்வேத விஷ்ணு ஸூக்தங்களை விளக்குவதாய் அமைந்தது நூறு பாட்டுக்கள் கொண்ட திருவிருத்தம்; ஏழு காண்டங் கொண்ட யஜுர் வேதத்தின் ஸாரமான நாராயணாநுவாகத்தை விளக்குவதாய் அமைந்தது ஏழுபாடல்கள் கொண்ட திருவாசிரியம். அதர்வண வேதத்தைச் சேர்ந்த முண்டகம் முதலான உபநிஷத்துக்களை விளக்குவதாய் அமைந்தது மூன்றாவது ப்ரபந்தமான இப்பெரிய திருவந்தாதி. ஆயிரம் ஶாகைகள் கொண்ட ஸாமவேதத்தின் ஸாரமான சாந்தோக்ய உபநிஷத்தை விளக்குவதாய் அமைந்தது ஆயிரம் பாடல்கள் கொண்ட திருவாய்மொழி. ரஹஸ்யத்ரய விவரணமாகவும் இந்த நாலு திவ்ய ப்ரபந்தங்களும் அமைந்தன. அஷ்டாக்ஷரத்தில் ப்ரணவத்தையும் நமஶ்ஶப்தத்தையும் விளக்குவது திருவிருத்தம்; 'நாராயணாய' என்னும் மூன்றாவது பதத்தை விளக்குவது திருவாசிரியம். சரம ஶ்லோகத்தை விளக்குவதாய் அமைந்தது இப்பெரிய திருவந்தாதி; த்வயத்தை விளக்குவதாக அமைந்தது தீர்க்க சரணாகதியான திருவாய்மொழி. "நெறிகாட்டி நீக்குதியோ? நின்பால் கருமா முறிமேனி காட்டுதியோ? என் செய்வான் எண்ணினாய் கண்ணனே!" [பெரிய திருவ 6] 'சீரார் மனத்தலை-வன்துன்பத்தை மாற்றினேன் வானோர் இனத்தலைவன் கண்ணனால் யான்" [பெரிய திருவ 25] முதலான பல பாட்டுக்களில் சரமஶ்லோகத்தையருளிய கண்ணனே தமக்கு உபாயம் என்று காட்டுவதன் மூலம் பெரிய திருவந்தாதியைச் சரம ஶ்லோக விவரணமாக ஆழ்வார் அமைத்திருக்கிறார் என்பது தெளிவு.

இவற்றில் திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய இரண்டு கிரந்தங்களும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்யானத்துடன் எந்தையாரால் கர வருடம் [1951] வைகாசி விசாகத்தில் வெளியிடப்பெற்றது, ஸ்ரீமுக வருடம் பங்குனி உத்தரத்தில் [1994] விவரணத்தோடு கூடிய திருவாசிரிய வியாக்யானம் நம்மால் வெளியிடப்பெற்றது. ஈச்வரவருடம் பங்குனி உத்தரத்தில் [10—4—98] இப்பெரிய திருவந்தாதி வ்யாக்யானம் விவரணத்துடன் வெளிவருகிறது. திருவிருத்தத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை, நம்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானங்கள் 'ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ' ஸ்தாபனத்தாரால்வெளியிடப்பட்டுள்ளது. "ஸ்ரீ ஸுதர்சனர் டிரஸ்ட்" ஆதரவில் வெளிவரும் பகவத் விஷயம் ஆறுபத்து முடிய வெளிவந்துள்ளது. மேல் பத்துக்களும் விரைவில் வெளிவர எம்பெருமானைப் பிரார்த்திக்கிறோம்.

தாஸன்,

ஈச்வர ஸூ — ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

பங்குனி உத்தரம் — ஆசிரியர்: 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்,

10—4—98 — 3 B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017



ஸ்ரீ:

# ப்ரமாண அநுக்ரமணிகை (அட்டவணை)

(ப்ரமாணமும் பக்கமும்)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

## தனியன் வ்யாக்யானம்

---

எம்பெருமானாரருளிச்செய்த

## பெரிய திருவந்தாதித் தனியன்

முந்துற்ற நெஞ்சே முயற்றி தரித்துரைத்து
வந்தித்து வாயார வாழ்த்தி‡ (யே) — சந்த
முருகூரும் சோலைசூழ் மொய்பூம் பொருநல்
குருகூரன் மாறன்பேர் கூறு.

பதவுரை:— முந்துற்ற நெஞ்சே — (ஆழ்வாரை ஆச்ரயிக்க என்னைக்காட்டிலும்) முன் செல்லும் மனமே!, முயற்றி- 'முயற்றி' என்று ஆரம்பித்துள்ள திவ்யப்ரபந்தத்தை, தரித்து—(புத்தியிலே) தரித்து, உரைத்து — (வாயாலே) சொல்லி, வந்தித்து — (ஆழ்வாரை) வணங்கி, வாயார வாழ்த்தி — வாய் ஓயுமளவும் மங்களாசாஸனம் பண்ணி, முருகு ஊரும் — தேன் பெருகும்படியான, சந்தம் சோலை — சந்தனமரங்களையுடைய சோலைகளாலே, சூழ் — சூழப்பட்டதாய், மொய் — நீர் நிறைந்ததும், பூ — அழகியதுமான, பொருநல் — தாம்ரபர்ணி நதியையுடையதான, குருகூரன் — திருநகரிக்கு ஸ்வாமியான, மாறன் பேர் கூறு — நம்மாழ்வாருடைய திருநாமத்தை அநுஸந்தித்துப் போரு.

---

‡ வாழ்த்தியே-என்றிருந்தால் வெண்டளைக்குப் பொருந்தும்.

அவ:— (முந்துற்ற நெஞ்சித்யாதி₃) இதுபெரிய திரு வந்தாதித் தனியனாகப் பெரியோர்களாலே அநுஸந்தி₄த்துக்கொண்டு போருமதாயிருக்கும்; ஆகையால் இதுவும் அந்த ஶப்₃த₃த்தை அநுவதி₃த்தாயிற்றிருப்பது. (முந்துற்ற நெஞ்சே முயற்றி தரித்து) "முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே" என்றது முன்பின்னாயிருக்கிறது.

வ்யா:— (முந்துற்ற நெஞ்சே) என்னிலும் ஆழ்வார் விஷயத்திலே முற்பட்டிருக்கிற மநஸ்ஸே! ஆழ்வார் திருவுள்ளம் ஆழ்வாரிலும் எம்பெருமான் திருவடிகளிலே முற்பட ஆழங்காற்பட்டிறேயிருப்பது. "என்னெஞ்சென்னை நின்னிடையேனல்லேனென்று நீங்கி — நாண்மலர்ப்பாதம்

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரிய திருவந்தாதித்

## தனியன் வ்யாக்யான விவரணம்

(ஸுதர்சனரின் திவ்யப்ரபந்தஸாரம்)

அவ:— எம்பெருமானார் அருளிச்செய்த இது பெரிய திருவந்தாதித் தனியனாகப் பெரியோர்கள் அனுஸந்திப்பதாய் இருக்கும். ஆகையால் இத்தனியனிலும் திருவந்தாதி முதற் பாட்டிலுள்ள சில ஶப்₃த₃ங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. "முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே" என்று ஆழ்வார் அருளியது "முந்துற்ற நெஞ்சே முயற்றி தரித்து" என்று முன் பின்னாய் வழங்கப்பட்டுள்ளது.

வ்யா:— (முந்துற்ற நெஞ்சே) என்னைக் காட்டிலும் ஆழ்வார் விஷயத்தில் முற்பட்டிருக்கும் மனமே! ஆழ்வார் எம்பெருமான் விஷயத்தில் அருளிச்செய்ததை இவர் ஆழ்வார் விஷயத்தில் அருளிச்செய்கிறார். ஆழ்வார் திருவுள்ளம் ஆழ்வாரைக்காட்டிலும் எம்பெருமான் திருவடிகளில் முற்பட்டுப்பட்டன்றோ இருப்பது, "என்னெஞ்சென்னை நின்னிடையேனல்லேனென்று நீங்கி நாண்மலர்ப்பாதமடைந்தது"

அடைந்தது'' என்றும், "என்னெஞ்சினூருமங்கேயொழிந்தார்'' ''என்னெஞ்சினரைக் கண்டாலென்னைச்சொல்லி'' என்றும், ''காருருவம் காண்டோறும் நெஞ்சோடும் கண்ணனூர் பேருருவென்றெம்மைப்பிரிந்து'' என்றும், ''தம்முடைய பின்னே திரிந்துழலும் சிந்தனையார்'' என்றும், ''என்னெஞ்சினர் தாமேட ணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்'' என்றும் முந்துற்ற நெஞ்சானபடியைத் தாமே முதலித்தருளினர்; அப்படியாயிற்று-ஆழ்வார் விஷயத்திலும் மதுரகவிப்ரப்ருதிகளான மஹாத்மாக்கள் மநஸ்ஸிருப்பது.

(முயற்றி தரித்து) "முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பை'' என்கிறபடியே உத்ஸாஹத்தையுடையையாய்; ''முயற்றி சுமந்து'' என்றத்தை "முயற்றி தரித்து'' என்கிறது. அன்றிக்கே, "முயற்றி'' என்கிற திவ்யப்ரபந்தத்தை

---

[திருவாய் 8-2-10] என்றும், "என்னெஞ்சினூருமங்கேயொழிந்தார்'' [திருவாய் 7-3-4] என்றும், ''என்னெஞ்சினரைக்கண்டாலென்னைச் சொல்லி'' [திருவிரு 30] என்றும், "காருருவம் காண்டோறும் நெஞ்சோடும் கண்ணனூர் பேருருவென்றெம்மைப்பிரிந்து'' [பெரிய திருவ 49] என்றும், ''தம்முடைய பின்னே திரிந்துழலும் சிந்தனையார்'' [பெரிய திருவ 50] என்றும், "என்னெஞ்சினர் தாமே யணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்''[பெரிய திருவ 7]என்றும் தம்முடைய நெஞ்சம் தம்மைக் காட்டிலும் முற்பட்டிருப்பதைத் தாமே அருளிச்செய்தார். அப்படியே ஆழ்வார் விஷயத்திலும் மதுரகவி முதலான மஹாத்மாக்களின் மனம் முற்பட்டிருக்கும்.

(முயற்றி தரித்து) ''முயல்கின்றேன் உன்றன் மொய்கழற்கன்பையே'' [கண்ணிநுண் 10]என்கிறபடியே உத்ஸாஹத்தை உடையையாய்; ''முயற்றி சுமந்து'' என்று அருளியதை "முயற்றி தரித்து'' என்கிறார். 'முயற்றி'யாவது-உத்ஸாஹம். (முயற்றி தரித்துரைத்து) அப்படியல்லாமல் 'முயற்றி' என்றது "முயற்றி'' என்று தொடங்கும் பெரிய திருவந்தாதியாய், அந்த திவ்யப்ரபந்தத்தை அறிவில் விலைகிற்கும்

பு3த்3தி4ஸ்த்த2மாம்படி த4ரித்து. பின்பு வாசிகமாக அநுஸந்தி4த்து என்றுமாம். (உரைத்து) "என்னிலைமையுரைத்து" என்னுமாபோலே, "இட்டமாமகிழ்மாலை தந்திடில் இந்தமாலையையெல்லாம் செப்பொத்த கொங்கைமேல் செழும் சந்தனக்குழம்பு பொறுக்குமோ ஆழ்வாரே" என்றாற்போலே என் தசையைச் சொல்லி. (வந்தித்து) திருவடி தொழுது. (முயற்றி தரித்துரைத்து வந்தித்து) ஸம்ப3ந்த4ாநுஸந்தா4நத்தோடே வந்தி3த்து—ப்ரப3ந்த4வக்தாவானவரை ப்ரணமம் பண்ணி. கருவண்ணம் முதலான அடையாளங்களைத் திருந்தக்கண்டு "இறங்கிநீர் தொழுதுபணியீர்" என்னுமாபோலே ஸகலகலாபூர்ணமான சந்த்3ரமண்ட3லம்போலே

---

படி தரித்து அதற்குப் பிறகு வாயாலே அநுஸந்தி4த்து என்றும் கொள்ளலாம். (உரைத்து) 'என்னிலைமை உரைத்து' [திருவாய் 6-8-1] என்னுமாபோலே. "இட்டமாமகிழ்மாலை தந்திடில் இந்த மாலையையெல்லாம் செப்பொத்த கொங்கைமேல் செழும் சந்தனக் குழம்பு பொறுக்குமோ ஆழ்வாரே" [ ] என்று ஆழ்வாரைக்குறித்து நாயகீபா4வத்தில் விரஹதாபத்தைச் சொன்னதுபோலே, என் பிரிவுத்துன்பத்தைச் சொல்லி என்று கருத்து. (வந்தித்து) ஆழ்வாருடைய திருவடிகளைத் தொழுது. (முயற்றி தரித்துரைத்து வந்தித்து) ஆழ்வாருக்கும் நமக்கும் முறையே உள்ள சேஷி சேஷபூ4தன் என்னும் ஸம்ப3ந்த4த்தை அநுஸந்தி4த்து வணங்கி. (வந்தித்து) பெரியதிருவந்தாதியாகிற திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்தவரை வணங்கி. (முயற்றி... வாயார வாழ்த்தி) "கருவண்ணம் செய்யவாய் செய்யகண் செய்யகை செய்யகால் செருவொண் சக்கரம் சங்கு அடையாளம் திருந்தக் கண்டே" [திருவாய் 6-1-7] என்றும், "இறங்கி நீர் தொழுது பணியீர்" [திருவாய் 6-1-3] என்றும் ஆழ்வார் எம்பெருமானுடைய அடையாளங்களை நன்கு கண்டு வணங்கும்படி தூதுவிட்டதுபோலே இவரும் "ஒண்ணுதல்" [திருவிரு 50] என்கிறபடியே எல்லாக் கலைகளும் நிறைந்த சந்த்3ரமண்ட3லம்போலேஇருப்பதாய், ஊர்த்4வ புண்

யிருப்பதாய், "ஒண்ணுதல்" என்று ஊர்த்₄வ புண்ட்₃ர மண்டி₃தமான திருமுகமண்டலத்தையும், நாட்கமழ் மகிழ் மாலை மார்வையும், ஜ்ஞாநமுத்₃ராமுத்₃ரிதமான திருக்கை மலரையும், பத்₃மாஸநோபவிஷ்டமான பத₃யுக₃ங்களையும் கண்டு தொழுது. அநந்தரம் (வாயார வாழ்த்தி) "அவன் புகழே வாயுபகாரம் கொண்ட வாய்ப்பு" "கண்ணன் தான் வாழ்த்துவதே கண்டாய் வழக்கு" "வாழ்த்தியவனடியை" "அடியேனுக்கும் போற்றுமினோ" என்கிறபடியே வாய் படைத்த ப்ரயோஜனம்பெற, (1) 'प्रत्यक्षे गुरवः स्तुत्याः' (ப்ரத்யக்ஷே கு₃ரவஸ் ஸ்துத்யா:) என்று நாவினால் நவிற்றின்ப மெய்தும்படி ஸ்தோத்ரம் பண்ணி.

---

ட்₃ரத்தாலே அலங்கரிக்கப்பட்டதான திருமுகமண்டலம். "நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன்" [திருவாய் 4-10-11] என்று அருளிச்செய்யப்பட்ட திருமார்பு, ஜ்ஞாநமுத்ரையோடு கூடிய ஹஸ்த பத்₃மம், பத்₃மாஸனத்தில் வீற்றிருக்கும் திருவடியிணை ஆகிய ஆழ்வாருடைய அடையாளங்களைக் கண்டு தொழுது; அதற்குப்பின் "அவன் புகழே வாயுபகாரம் கொண்ட வாய்ப்பு" [பெரிய திருவ 39] என்றும், "கண்ணன் தான் வாழ்த்துவதே கண்டாய் வழக்கு" [பெரிய திருவ 12] என்றும், "வாழ்த்தி அவனடியை" [பெரிய திருவ 84] என்றும், "அடியேனுக்கும் போற்றுமினோ" [திருவாய் 6—1—5] என்றும் ஆழ்வார் வாய்படைத்த பயன் பெறும்படி எம்பெருமானை வாயார வாழ்த்தியதுபோலே,

1\. ப்ரத்யக்ஷே கு₃ரவ: ஸ்துத்யா:

[ஆசார்யர்கள் நேரிலேயே துதிக்கத்தகுந்தவர்கள்] என்கிற படி மது₄ரகவியாழ்வார் "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" [கண்ணிநுண் 2] என்று ஆழ்வாரை நாவால் சொல்லி இன்ப மடைந்ததுபோலே ஆழ்வாரை வாய்படைத்த பயன் பெறும்படி துதித்து.

இனி, அவ்வளவில் நில்லாதே அவர் திருநாமத்தை இங்கே வந்து சொல்லுதல், அவர் ஸந்நிதியிலே சொல்லுதல் என்னும்படியைச்சொல்லுகிறது— (சந்தமுரு கூருமித்யர்தியாலே) (சந்தமுருகூரும் சோலைசூழ்) முருகு-தேன். "ஆரப்பொழில் தென்குருகை" என்கிற படியே மகரந்தப்ரவாஹத்தையுடைய சந்தநச்சோலை யாலே சூழப்பட்டிருப்பதாய். (மொய்பூம்பொருநல்) மொய் பூம் பொருநலாற்றையுடைய. (குருகூரன் மாறன் பேர் கூறு) ஸம்ருத்தமாய் ஸரஸமான நிர்மலஸலிலத்தை யுடைய திருப்பொருநல் தீரமான திருநகரிய(யில)ாழ்வார் திருநாமத்தை ஸத்தை பெறும்படி சொல்லு. (குருகூரன்

---

இனி, பாட்டின் எஞ்சிய பகுதியாலே, இப்படி வாயார வாழ்த்தியதோடு நில்லாமல், ஆழ்வாருடைய திருநாமத்தை யும் நாமிருக்குமிடத்திலிருந்தோ அல்லது ஆழ்வார் திரு முன்பே சென்றோ ஸங்கீர்த்தனம் செய்யும்படி நெஞ்சை நியமிக்கிறார். (சந்தமுருகூரும் சோலை சூழ்) "முருகூரும் சந்தம் சோலை சூழ்" என்று அந்வயித்துக்கொள்ளவேண்டும். 'முருகு' என்று தேனைக்குறிக்கும். 'சந்தம்' என்று சந்தனத் தைச் சொல்லும். "ஆரப்பொழில் தென் குருகை" [இராமாநுச 20] என்கிறபடியே தேன் வெள்ளமிடும் சந்தனச் சோலை யாலே சூழப்பட்டிருப்பதாய்; (மொய்பூம் பொருநல்) நீர் நிறைந்ததும் அழகியதுமான தாம்ரபர்ணி நதியை உடைய தாய். (மொய்பூம் பொருநல் குருகூரன் மாறன் பேர் கூறு) ஜலஸம்ருத்தியை உடையதாய், சுவை உடைய தெளிந்த நீரை உடையதான தாம்ரபர்ணி நதிக்கரையிலிருக்கும் ஆழ் வார் திருநகரியில் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார் திரு நாமத்தை ஸத்தை உண்டாம்படி சொல்லுவாயாக. (குரு

மாறன்பேர் கூறு) குருகூர்ச்சடகோபனென்று கூறு. "குருகூர்நகரான் .... மாறன்" "அடிக்கண்ணிசூடியமாறன்" "பைம்பூம் பொழில் சூழ் குருகூர்நகர் காரிமாறன் சடகோபன்" என்னுமிறே. "நான்கூறும்" என்று குருகூர்ச் சடகோபன், குடக்கூத்தவம்மானை, நாராயணன் நாமங்களைக் கூறினாற்போலே. "நாமம் பராங்குசன்" என்னும் படியான நாமத்தைக்கூறு, "நம் மாறன்" என்று பாடமாகில் நம்மாழ்வார் என்கிறது (பேர்கூறு) "பேரென்னை" என்று தாமும் பேசும்படியான பேரைககூறு. நாவெடல்

---

கூரன் மாறன் பேர் கூறு) குருகூர்ச் சடகோபன் என்று கூறுவாயாக, "நல்லார் நவில் குருகூர் நகரான் திருமால் திருப்பேர் வல்லாரடிக் கண்ணி சூடிய மாறன்" [திருவிரு100] "பைம்பூம்பொழில் சூழ் குருகூர் நகர் காரிமாறன் சடகோபன்" [ திருவாய் 4-5-11 ] என்று ஆழ்வாரே தம் திருநாமங்களை அருளிச்செய்தாரன்றே. (குருகூரன் மாறன் பேர் கூறு) "குருகூர்ச் சடகோபன்" [திருவாய் 2-5-11] என்று தம்மை அழைத்துக்கொண்ட நம்மாழ்வார் "நான் கூறும் கூற்றாவது இத்தனையே" [பெரிய திருவ 46] என்று தொடங்கி, "குடக்கூத்த வம்மானைக் கூறுதலே மேவி" [திருவாய் 2—5—11] என்றும், "சடகோபன் தெரிந்துரைத்த நாமங்களாயிரம்" [திருவாய் 5—9—11] "நாரயணன் நாமங்களே" [திருவாய் 5—9—10] என்பதிலாக எம்பெருமானுடைய நாமங்களைக் கூறியதுபோலே. "நாமம் பராங்குசனே" என்று புலவர்களால் சொல்லப்பட்ட நம்மாழ்வாரின் நாமங்களைக் கூறுவாயாக. "குருகூர் நம் மாறன்" என்று பாடமானால் குருகூரிலுள்ள நம்மாழ்வார் என்று பொருள்படுகிறது. (பேர் கூறு) "பேரென்னை" [திருவாய் 5—4—5] என்று தாமும் பேசும்படியான நம்மாழ்வார் பேரைக்கூறு. "குரு

லாம் கையெடுக்கும்படி கூறு. ''எண்டிசையுமறிய வியம்புகேன்'' என்னும்படி ப்ரஸித்₃த₄மாகச் சொல்லு. இத்தால்–(2) ''गुरोर्नाम सदा जपेत्'' (கு₃ரோர்நாம ஸதா₃ ஜபேத்) என்கிறபடியே ஆழ்வார் ப்ரப₃ந்த₄த்துக்கு முன்னே அவரது நாமமநுஸந்தே₄யமென்றதாயிற்று.

பெரியதிருவந்தாதித்தனியன் வ்யாக்யானம்
முற்றிற்று.
பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்

---

கூர்ச்சடகோபன்'' என்று சொன்னவுடன் நாடு முழுவதும் கை எடுத்துக் கும்பிடும்படி கூறு. ''எண்டிசையும் அறிய இயம்புகேன்'' [கண்ணிநுண் 7] என்னும்படி எல்லா திசைகளிலும் பரவும்படி சொல்லு. இத்தனியனால்

2. கு₃ருபாத₃ாம்பு₃ஜம் த்₄யாயேத் கு₃ரோர் நாம ஸதா₃ ஜபேத் ।
கு₃ருஸேவாம் ஸதா₃ குர்யாத் மோக்ஷப்ருதத்வாய கல்பதே ॥ [ப்ரபஞ்சஸாரம்]

[ஆசாரியரின் திருவடித்தாமரையை எப்போதும் தியானிக்க வேண்டும், ஆசார்யனின் திருநாமத்தை எப்போதும் ஜபிக்க வேண்டும்; குருகைங்கர்யத்தையே எப்போதும் செய்ய வேண்டும். இப்படிச்செய்பவன் மோக்ஷத்திற்குத் தகுந்தவனாகிறான்.] என்கிறபடியே ஆழ்வார் திவ்யப்ரபந்தத்தை அநுஸந்திப்பதற்கு முன் அவரது திருநாமம் அநுஸந்திக்கத்தக்கது என்று சொல்லப்பட்டதாயிற்று.

பெரியதிருவந்தாதித்தனியன்
வ்யாக்யான விவரணம் நிறைவுபெற்றது.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்த

# பெரியதிருவந்தாதி வ்யாக்யானம்

श्रीमत्कृष्णसमाह्वाय नमो यामुनसूनवे ।

यत्कटाक्षैकलक्ष्याणां सुलभः श्रीधरस्सदा ॥

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப₄: ஸ்ரீத₄ரஸ்ஸதா₃ ॥

### அவதாரிகை

ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகனான ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமாக "இமையோர் தலைவா" என்று பேசலாம்படி தன்னுடைய ஸ்வரூப ரூப கு₃ணங்களையும் விபூ₄திகளையும் காட்டிக்கொடுக்கக்கண்டு, தன்னை அநுப₄விக்கைக்கு அநுகூலமான தேசத்தையும், அநுகூலமான ஜ்ஞாநவ்ருத்த

---

## பெரியதிருவந்தாதி வ்யாக்யான விவரணம்

[ஸுதர்சனர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்]

அவ:- எல்லாக்கல்யாணகு₃ணங்களும் நிறைந்தவனாய் ஸர்வேஶ்வரனான எம்பெருமான், இவர் முதல் தி₃வ்யப்ரப₃ந்த₄மான திருவிருத்தத்தைத் தொடங்கும்போதே "இமையோர் தலைவா" [திருவிருத்தம் 1] என்று நித்யஸூரி நாயகனாய் இருக்கும் தனது பெருமையைப் பேசலாம்படி தன்னுடைய நிர்ஹேதுக கிருபையாலே தன் ஸ்வரூபத்தையும், ரூபத்தையும், கு₃ணங்களையும், நித்யவிபூ₄தி லீலாவிபூ₄தி என்னும் செல்வங்களையும் இவ்வாழ்வாருக்குக் காட்டிக் கொடுக்க, அவற்றைக் கண்டு, தன்னைப் பரிபூர்ணமாக அநுப₄விப்பதற்கு உதவி புரியும் நித்ய விபூ₄தியில் இருப்பவர்களாய், அதற்கு உதவி புரியும் அறிவு ஒழுக்கம் அப்ராக்ருதத் திருமேனி ஆகியவற்றை

தேஹங்களையுமுடையராய், ஸதாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகளையும் கண்டு, தமக்கு அவர்களோபாதி அவன் பக்கலுள்ள ப்ராப்தியையுமுணர்ந்து, இவ்வநுபவத்துக்கு ப்ரதிகூலமான ஜ்ஞாநவ்ருத்ததேஹங்களைத் தாம் உடையரா யிருக்கிறபடியையும், ப்ரதிகூலமான ஸம்ஸாரத்திலே தாம் இருக்கிறபடியையுமுணர்ந்து, "த்வதநுபவ விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்துத்தரவேணும்" என்றார் திருவிருத்தத்தில். a நூறுபாட்டுக்கும் aa இதுவே அர்த்த மாகவேணும். b "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்று உபக்ரமித்து, இதுகற்றவர்களுக்குப் பலமாக "அழுந்தார்

---

உடையவர்களாய், எப்போதும் தன்னை அனுபவிக்கும் நித்ய ஸூரிகளையும் கண்டு, தமக்கு அவர்களைப்போலே அவனை அனுபவிப்பதற்கு உரிமை இருப்பதையும் உணர்ந்து, இந்த அனுபவத்திற்குத் தடையான ஜ்ஞானத்தையும் ஒழுக்கத்தையும் உடம்பையும் உடையவராகத் தாமிருக்கிற படியையும், அநுபவத்திற்குத் தடையான லீலா விபூதியாகிற ஸம்ஸாரமண்டலத்திலே தாமிருக்கிறபடியையும் உணர்ந்து, "உன்னை அனுபவிப்பதற்குத் தடையான இந்த தேஹ ஸம்பந்தத்தை அறுத்துத்தரவேண்டும்" என்றார் திருவிருத் தத்தில். "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனியா முறாமை" [திரு விருத்தம் 1] என்று முதல் பாட்டில்தானே இந்த அர்த்தம் சொல்லப்பட்டது; நூறு பாட்டுக்கும் இதுவே அர்த்தமோ? எனில்: முதல் பாட்டில் "இந்நின்ற நீர்மை இனியாமுறாமை" என்று தொடங்கி, இத்திருவிருத்தத்தைக் கற்றவர்களுக்குப் பலத்தை அருளிச்செய்யும் நூறாவது பாட்டில் "அழுந்தார்

---

அரு:— a ப்ரக்ருதி ஸம்பந்த நிவ்ருத்தி மாத்ரமென்பா னென், பின்னேயுமர்த்தாந்தரங்களுமுண்டே. என்ன அருளிச்செய்கிறார் (நூறு பாட்டுக்கும்) இத்யாதி. aa b "இது வே" என்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச் செய்கிறார்

பிறப்பாம் பொல்லா வருவினை மாய வன் சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே'' என்று உபஸம்ஹரிக்கையாலும், ''அடியேன்செய்யும் விண்ணப்பம்''என்று உபக்ரமித்து''விண்ணப்பஞ்செய்த'' என்று தலைக்கட்டுகையாலும். c அபேக்ஷித்த போதே செய்யப்பெறாமையாற் பிறந்த ஆற்றாமையாலே சொல்லிற்றின நடுவிற்பாட்டுக்கள். d தான்நினைத்த கார்யங்கள் தலைக்கட்டுகைக்காக ஸ்ரீபீஷ்மர் ஶரதல்பராய்க் கிடக்க, அவரைக்கொண்டு நாட்டுக்கு த₄ர்மங்களைச்சொல்லுவித்தாற்போலே, ''இவரைக் கொண்டு திருவாய்மொழி பர்யந்தமாகப் பாடுவித்து நாட்டை வாழ்விக்கவேணும்''

---

பிறப்பாம் பொல்லா வருவினை, மாய வன் சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே'' [திருவிருத்தம் 100] என்று நிறைவு படுத்துகையாலும், ''அடியேன் செய்யும் விண்ணப்பமே'' என்று முதல் பாட்டில் தொடங்கி ''மாறன் விண்ணப்பம் செய்த'' என்று கடைசிப் பாட்டில் நிறைவுபடுத்துகையாலும் நூறுபாட்டுக்கும் இதுவே பொருள் என்பது தெளிவு. முதல் பாட்டில் 'தேஹத்தின் தொடர்பை அறுத்துத் தரவேண்டும்' என்று வேண்டியவுடன் எம்பெருமான் அதைச் செய்யப்பெறாமையால் உண்டான ஆற்றாமையாலே சொன்னவையே நடுவிலுள்ள பாட்டுக்களெல்லாம். முதற்பாட்டில் பிரார்த்தித்தவுடன் எம்பெருமான் ஏன் இவருடைய விருப்பத்தை நிறைவேற்றவில்லை? எனில்: ஸ்ரீபீ₄ஷ்மர் அம்புப் படுக்கையிலே படுத்திருக்கும்போது தான் ஸங்கல்பித்த த₄ர்ம ஸம்ஸ்தா₂பனமாகிற காரியத்தை நிறைவுபடுத்துவதற்காக அவரைக் கொண்டு உலகிற்குச் சில த₄ர்மங்களை வெளியிடுவித்தது போலே, இவரைக்கொண்டு திருவாய்மொழி ஈருக நாலுதிவ்ய ப்ரப₃ந்த₄ங்களைப் பாடும்படிசெய்து உலகை வாழ்விக்க வேண்டும் என்னும் காரணத்தாலே இவருடைய விருப்பத்தை

---

(இந் நின்ற • நீர்மை) இத்யாதி₃. c ஆத்₃யந்தமிதுவேயாளுல் நடுவில் ப்ரதிபாத்₃யமேதென்ன அருளிச்செய்கிருர் (அபேக்ஷித்த) இத்யாதி₃. d இத்தனை செல்லாமை

என்று இவரை வைத்துக்கொண்டிருந்தான். இவர்க்குத் தான் ஶேஷியாய் இவர் ஶேஷபூ₄தராய். விரோதி₄ நிவ்ருத்தி பண்ணுவானும் தானேயாகில், வைஷ்ணவர்களைத் தலைமக்களாகச் சொல்லுவானென்னென்னில்; வைஷ்ணவர்கள் இவனைப் பெறுகைக்கு உபகாரகர்களாகையாலும், ''பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேன்'' என்று பரத₃ஶையில் ப்ராப்யராகையாலும் (3) ' बोधयन्तः परस्परं'' (போ₃த₄யந்த: பரஸ்பரம்) என்று வ்ருத்தமான ஸம்ஶ்லேஷத்துக்கு உசாத்துணையாவர்களாகையாலும், வைஷ்ணவர்களைத் தலைமக்களாகச் சொல்லிற்று; திருவாசிரியத்தில் 6 தான் நினைத்த கார்யம்

உடனேயே நிறைவேற்றாமல் இவரை லீலாவிபூ₄தியிலே பல வருடங்கள் இருக்கச்செய்தான். "இவருக்குத் தான் தலைவனாய் இவர் தனக்கு அடியாராய், இவருடைய தடைகளைப் போக்குகின்றவனும் தானேயாகில் திருவிருத்தத்திலே இவனைத் தலைமகனாகச்சொல்லாமல் ஸ்ரீவைஷ்ணவர்களைத் தலைமக்களாக இவர் சொன்னதற்குக்கருத்து என்ன? எனில்: ஸ்ரீவைஷ்ணவர்கள் இவனைப் பெறுவதற்கு உதவி புரிபவராகையாலும், "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேன்" [பெரிய திருமொழி 7—4—4] என்று இவ்வுலகிலும் ஸ்ரீவைகுண்டத்திலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ப்ராப்யர்கள் (அடையத்தக்கவர்கள்) ஆகையாலும்,

3. மச்சித்தா மத்₃க₃தப்ராணா போ₃த₄யந்த: பரஸ்பரம் ।
கத₂யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥
[கீதை 10—9]

[என்னிடம் நிலைத்த மனத்தையுடையவர்களாய், என்னிடமே தங்கள் உயிரை வைத்தவர்களாய், (என்னுடைய கு₃ணங்களை) ஒருவருக்கொருவர் அறிவிப்பவர்களாய், என்னை எப்போதும் சொல்லிக்கொண்டிருப்பவர்களாய் ஸந்தோஷிக்கிறார்கள், ஆநந்திக்கிறார்கள்.] என்கிறபடியே எம்பெருமானோடு கலந்ததாலுண்டான அனுப₄வத்திற்கு ஒருவருக்கொருவர்

யுடையவரை வைப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (தான் நினைத்த கார்யங்கள்) இத்யாதி₃.

தலைக்கட்டுகைக்காக ப்ரக்ருதிஸம்பந்தமறுத்திலனாகிலும் நின்ற நிலையிற் காட்டில் சிறிது விசேஷம்பண்ணிக் கொடாவிடில் தரிக்குமவரல்லாமையாலே, ப்ரக்ருதிஸம்பந்தமற்றார் அநுபவிக்கும் தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை ப்ரக்ருதியோடேயிருக்கச் செய்தே அநுபவிக்கலாம்படி ஜ்ஞானவைஶத்யத்தைப் பண்ணிக்கொடுக்க அநுபவித்தார். திருவந்தாதியில் - இதர விஷயங்கள் அநுபவிக்கும்போது ஒன்றன்றிக்கே, அநுபவித்தாலும் "இன்னதநுபவித்தோம்" என்று சொல்லுகைக்குமொன்றன்றிக்கேயிருக்கும்; பகவத் விஷயம் - அநுபூதாம்ஶம் தோற்றுதே அநுபாவ்யாம்ஶம் பெருத்திருக்கும். ஆகை

---

ப்பச்சுத்துணையாய் இருப்பவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைத் தலைமக்களாகத் திருவிருத்தத்தில அருளிசெய்தார். இனி இரண்டாவது திவ்யப்ரபந்தமான திருவாசிரியத்தில் செய்தது என்ன? எனில்: இவரைக்கொண்டு நாலு திவ்யப்ரபந்தங்களை வெளியிடுவதற்காக இவருடைய தேஹஸம்பந்தத்தை அறுக்காவிடிலும், இவருக்கு முன்னிருந்த நிலையைக் காட்டிலும் சிறிது சிறப்பை உண்டாக்கவில்லையாகில் இவர் உயிர் தரிக்கமாட்டார் என்று அறிந்து, தேஹஸம்பந்தம் இல லாத நித்ய முக்தர்கள் அநுபவிக்கும் தன்னுடைய ஸ்வருபம், ரூபம், குணம், விபூதி ஆகியவற்றை இந்த ப்ரக்ருதி மண்டலத்தில் தேஹத்தோடே இருக்கும்போதே அநுபவிக்கலாம்படி இவருக்கு ஜ்ஞானத் தெளிவை உண்டாக்க, அவற்றை அநுபவித்தார் திருவாசிரியத்தில். இனி மூன்றாவது ப்ரபந்தமான பெரிய திருவந்தாதியில் இவர் அருளிச்செய்வது என்ன? எனில்: ப்ராக்ருதமான ஶப்தாதி விஷயங்கள் அநுபவிக்கும்போது சிறந்தவை என்று சொல்லத்தகுதியற்றவையாய், அநுபவித்தாலும் 'இன்னதை அநுபவித்தோம்' என்று அநுபவித்தவனாலும் சொல்லத் தகுதியற்றவையாய் இருக்கும்; பகவத்விஷயமோவெனில், அநுபவித்த அம்சமும் வர்ணனைக்கு அப்பாற்பட்டதாய்'

# பெரியதிருவந்தாதி

1 முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே!
இயற்றுவா யெம்மொடுநீ கூடி,—நயப்புடைய
நாவின் தொடைக்கிளவி யுட்பொதிவோம் நற்பூவைப்
பூவின்ற வண்ணன் புகழ்.

பதவுரை:— முயற்றி சுமந்து — (அடிமைசெய்கையிலே) உத்ஸாஹத்துடன் ஊன்றி, எழுந்து—கிளர்ந்து எழுந்து, முந்துற்ற நெஞ்சே—(என்னிலும்) முற்பட்ட நெஞ்சமே! நல்—விலக்ஷணமான, பூவைப் பூ ஈன்ற — காயாம்பூவிலே உள்ள, வண்ணன் — நிறத்தையுடைய ஸர்வேச்வரனுடைய, புகழ் - கல்யாணகுணங்களை, நயப்புடைய — நயமுடையதாயிருப்பதாய், நா ஈன்—நாவினால் உண்டாக்கப்

---

யாலே "முயற்றி சுமந்து" என்று தொடங்கி ஏதின்ற நிலையிலே "மொய்கழலே ஏத்தமுயல்" என்று தலைக்கட்டுகையாலே விஷயாநுரூபமாக அபி₄நிவேஶம் பெருகுகிறபடி சொல்லுகிறது.

---

அநுப₄விக்க வேண்டிய அம்சம் மிகப்பெரியதாய் இருக்கும். ஆகையாலே "முயற்றி சுமந்து" என்று எப்படித் தொடங்கினரோ அப்படியே "மொய்கழலே ஏத்த முயல்" என்று இந்த ப்ரப₃ந்த₄த்தை நிறைவு படுத்துகையாலே, இந்தத் திருவந்தாதியாலே ப₄க₃வத்₃விஷயத்தின் பெருமைக்குத் தக்கபடி அதை அநுப₄விக்கும் ஆர்வம் இவருக்குப் பெருகுகிறபடியைச் சொல்லுகிறது.

---

நின்ற நிலையாவது - முதல் தொடங்கி முடிய அநுப₄வியாநிற்கச்செய்தேயும் அபி₄நிவேஶம் பெருகி, "ஏத்த முயல்" என்று பின்னையும் உத்₃யோக₃மறுமல் நின்ற நிலை என்றபடி.

பட்ட தாய், தொடைக் கிளவியுள் — அழகிய ஸப்த ஸந்தர்ப் பங்களையுடையதான சொல்லினுள், பொதிவோம்—கொள் வோம்: எம்மொடு — என்னுடன், நீ கூடி—நீ சேர்ந்து, இஸ்ற்றுவாய் — துதிப்பாயாக.

---

அவ: — முதற்பாட்டில்; நெஞ்சுக்கு ஒரு நல்வார்த்தை a சொன்னற்போலே இது இவரையுங்கூடாதே முற்பட, "என்னையுங்கூட்டிக்கொண்டு போகவேணுங்காண்" என் கிறார்.

வ்யா: — (முயற்றி சுமந்து) அடிமை செய்கையிலே ஒருப்பட்டு b (4) 'अग्रेत तु महाभागः' (ப்ராகே₃வ து மஹா

---

1. அவ:— எம்பெருமானுக்கு வாசிக கைங்கர்யம் செய் வது பற்றித் தம் நெஞ்சுக்கு ஒரு நல்வார்த்தை சொன்ன வுடனே, அந்த நெஞ்சு இவரையும் கூட்டிக் கொள்ளாமல் தான் எம்பெருமானைத்தேடி முதலில் செல்லத் தொடங்கிற்று; அதைப்பார்த்து "என்னையும் கூட்டிக்கொண்டு போக வேணுங்காண்" என்கிறார்.

வ்யா:— (முயற்றி சுமந்து) பாட்டின் பிற்பகுதியில் சொல் லப்படும் வாசிக கைங்கர்யத்திலே உத்ஸாஹத்துடன் ஊன்றி; 'முயற்றி' என்னும் சொல் உத்ஸாஹத்தைக் குறிக்கும். இப் படி நெஞ்சானது ஆழ்வாரைக்காட்டிலும் முற்பட்டது—காட் டுக்குச் செல்லும்போது இளையபெருமாள் (லக்ஷ்மணன்) பெருமானுக்கு (ராமனுக்கு) முற்பட்டதுபோல் உள்ளது.

4. ப்ராகே₃வ து மஹாபா₄க₃: ஸௌமித்ரிர் மித்ரநந்த₃ந: ।
பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே₂ த்₃ருமசீரைரலங்க்ருத: ॥
[ரா. ஸு. 33-28]

[மஹாபா₄க்₃யவானும், அநுகூலர்களை உகப்பிப்பவனும், ஸுமித்ரா புத்ரனுமான லக்ஷ்மணன் தமயனுக்குப் பின்

---

அரு: — முதற்பாட்டு. a (சொன்னற்போலே) சொன்ன வுடனே. b நெஞ்சு அடிமையிலே ஒருப்பட்டது எப்படியிருக்

ப₄ரத₂:) பெருமாளுக்கு மரவுரி கொடுத்தன்றோ இளையபெருமாளுக்குக் கொடுத்தது; இவரை (4) 'प्रागेव' (ப்ராகே₃வ) என்பானென்னென்னில் c (5) "दीप्तमग्निमरण्यं वा यदि रामः प्रवेक्ष्यति। प्रविष्टं तत्र मां देवि॥" (தீ₃ப்தமக்₃நிமரண்யம் வா யதி₃ ராம: ப்ரவேக்ஷ்யதி। ப்ரவிஷ்டம் தத்ர மாம் தே₃வி) என்று இளையபெருமாளுக்கிருக்குப்படியாலே சொல்லிற்று. d பெருமாள் "பித்ருவசநபரிபாலநம் பண்ணவேணும்" என்று மரவுரி சாத்தினார்; அவருடுக்கப்புகுகிறாரென்று உடுத்தவர் படி, அதுவேறொன்றன்றோ என்கிறது.

---

செல்லுகைக்காக, முன்னமே மரவுரிகளால் அலங்கரித்துக் கொண்டான்.] என்று சொல்லப்பட்டதன்றோ. கைகேயி ஸ்ரீராமனுக்கு மரவுரி கொடுத்தபின்பன்றோ லக்ஷ்மணனுக்குக் கொடுத்தது. அப்படியிருக்க அவருக்கு முன்னால் இவர் மரவுரி சாத்திக்கொண்டார் என்று கூறலாமோ? எனில்:

5\. தீ₃ப்தமக்₃நிமரண்யம் வா யதி₃ ராம: ப்ரவேக்ஷ்யதி।
ப்ரவிஷ்டம் தத்ர மாம் தே₃வி த்வம் பூர்வமவதா₄ரய॥
[ரா. அ. 21-17]

[அம்மா! கொழுந்து விட்டெரியும் அக்₃னியினுள்ளாவது, காட்டினுள்ளாவது, ஸ்ரீராமபிரான் நுழைவாராகில், நான் முன்னமே அதனுள் நுழைந்திருப்பேன் என்று நீ அறிவாயாக.] என்று சொல்லப்படும் லக்ஷ்மணனுடைய ஸ்வபா₄வத்தை நினைத்துச் சொன்னதாகையாலே குறையில்லை. ஸ்ரீராமபிரான் "தந்தையின் வார்த்தையைக் காப்பாற்ற வேண்டும்" என்பதற்காக மரவுரி சாத்திக்கொண்டார். லக்ஷ்மணன் "ஸ்ரீராமன் மரவுரி உடுத்தப்போகிறான்" என்பதற்காக மரவுரி சாத்திக்கொள்கிறார். ஆகையால் இவர் உடுத்துவது தனிச்சிறப்புடையதன்றோ என்று கருத்து.

---

கிறதென்ன (ப்ராகே₃வ து) இத்யாதி₃. c ப்ரவேசிப்பராகில் என்று ப₄விஷ்யதாகவும், "ப்ரவிஷ்டம்" என்று அங்கே ப்ரவேசித்தேனாக அறி என்று பூ₄தமாகவும் சொன்ன இளையபெருமாள் நினைவைப்பற்ற என்றபடி. b₂, d 'து' ஶப்₃த₃த்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (பெருமாள்) இத்யாதி₃.

(4) ''महाभागः'' (மஹாப₄ாக₃:) (6) ''अहं सर्वं करिष्यामि'' (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று ப்ரதிஜ்ஞை பண்ணினபடியே எல்லா அடிமையும் செய்யலாம்படி திருவபிஷேகவிக்₄நம் பிறக்க ப₄ாக்₃யம்பண்ணினவர். (4) 'सौमित्रिः'' (ஸௌமித்ரி:) (7) ''सृष्टस्त्वं वनवासाय'' (ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய) என்று சொன்ன

---

6. ப₄வாம்ஸ்து ஸஹ வைதே₃ஹ்யா கி₃ரிஸாநுஷு ரம்ஸ்யதே।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்₃ரத: ஸ்வபதஶ்ச தே ॥
[ரா. அ. 31-25]

[நீர் வைதே₃ஹியுடன் கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும் தூங்கும்போதும் எல்லா அடிமைகளையும் செய்வேன்.] என்கிற படியே காட்டிலிருந்தபோது பலர் செய்துவந்த அடிமையையெல்லாம் காட்டில் இவர் ஒருவரே செய்யப்போகிறார். ஆகையாலே ஸ்ரீராமபிரான் முடிசூட்டிக்கொள்வதற்குத் தடை ஏற்பட்டது லக்ஷ்மணனுக்குப் பெரிய ப₄ாக்₃யமாயிற்று என்று கருத்து. அந்த (4) ஶ்லோகத்தில் 'ஸௌமித்ரி என்று லக்ஷ்மணனை ஸுமித்ரையின் பிள்ளையாகக் குறிப்பிட்டதால்,

7. ஸ்ருஷ்டஸ் த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே।
ராமே ப்ரமாத₃ம் மா கார்ஷீ: புத்ர ப்₄ராதரி க₃ச்ச₂தி ॥
[ரா. அ. 40-5]

[லக்ஷ்மணா! நீ வனவாஸத்திற்கென்றே ஸ்ருஷ்டிக்கப்பட்டவன். உன்னிடம் அன்பு பூண்டவனான ராமனிடம் நீ மிகவும் பிரியம் வைத்திருக்கிறாய். பிள்ளாய்! உன் அண்ணன் ராமன் நடந்து செல்லும்போது (அந்நடையழகிலீடுபட்டு, அவனுக்குத் தீங்குசெய்வோரை கவனியாமலிருக்கையாகிற) தவறைச் செய்துவிடாதே.] என்று சொன்ன ஸுமித்ரையின்

வள் வயிற்றிலே பிறந்தவர். (4) "मित्रनन्दनः" (மித்ர நந்த₃ந:) "பெருமாளைப் பிரியாதே அடிமை செய்யவேணும்" என்ற அநுகூலவர்க்க₃மெல்லாம் "நாம் செய்யப்பெற்றிலோமேயாகிலும் இளைய பெருமாள் எல்லா அடிமையுஞ் செய்யப்பெற்றுரிறே" என்னும்படி அநுகூலவர்க்க₃த்தை உகப்பிக்குமவர். (4) "पूर्वजस्यानुयात्रार्थे द्रुमचीरैरलङ्कृतः" (பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே₂ த்₃ருமசீரைரலங்க்ருத:) பெருமாள் பின்னேஸேவித்துப் போகைக்காக மரவுரி சாத்தி. அத்தாலே அலங்க்ருதரானவர். ே பெருமாள் அபி₄ஷேகம் தவிருகைக்கு மரவுரி சாத்தினுர்; இவர் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்துக்கு முடிசூடுகைக்கு மரவுரி சாத்தினுர்.

---

பின்னையாகையாலே இப்படி லக்ஷ்மணன் முறபட்டு நின்றது வியப்பல்ல என்று உணர்த்தப்படுகிறது. "மித்ரநந்த₃ந:" என்று லக்ஷ்மணனை 'அனுகூலர்களை உகப்பிப்பவன்' என்று சொன்னதால் "ஸ்ரீ ராமனுக்குப் பிரியாதிருந்து அடிமை செய்யவேணும் என்று நினைக்கும் அனுகூலர்களெல்லாம் 'நாம் அப்படி அடிமை செய்யப் பெறவில்லையானுலும் லக்ஷ்மணன் அப்படி அடிமைசெய்யப் பெற்ருனன்ருே' என்று உகக்கும்படி செப்பவர் என உணர்த்தப்படுகிறது. அந்த (4) ச்லோகத்தில் தமையனுக்குப் பின்தொடர்ந்து கைங்கர்யம் செய்வதற்காக மரவுரிகளால் அலங்கரித்துக் கொண்டார் என்று கூறப்பட்டது. ஸ்ரீராமன் முடிசூட்டிக்கொள்வது தடைபட்டதால் மரவுரி த₄ரித்துக்கொண்டார். இவர் அடிசூடும் அரசாகிற கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தில் முடிசூட்டிக் கொள்வதற்காக மரவுரி சாத்திக்கொண்டார் எனனும் கருத்து இதனுல் வெளிப்படுகிறது. (எழுந்து) கிளர்ந்தெழுந்ததாய். (முந்துற்ற நெஞ்சே)

---

ே தாபஸவேஷமாக மரவுரி சாத்துகை அலங்க்ருதமாமோவென்ன அருளிச்செய்கிருர் (பெருமாள் அபி₄ஷேகம்) இத்யாதி₃.

(எழுந்து)விஸ்த்ருதமாய். (முந்துற்ற நெஞ்சே)(8) "अग्रतस्ते गमिष्यामि" (அக்3ரதஸ்தே க3மிஷ்யாமி) என்னும்படியே முற்பட்ட நெஞ்சே! †(இயற்றுவாயெம்மொடு நீ கூடி) ‡க்ருதஜ்ஞமாக வேணுங்காண். பார்த்தபடி அழகிது; பிற்பட்ட என்னையும் கூட்டிக்கொண்டு போ, (நயப்புடைய) நீரும் நானுங்கூடிச் செய்யப்புகுகிறதென்னென்ன, அங்குத்தைக்கு அடிமை செய்வோமென்கிறார்—(நயப்புடைய) 'என்னால் தன்னைப்பதவியவின்கவிபாடிய' என்னுமாபோலே. கவிக்கு நயப்புடைமையாவது:— நாயகனுக்கு முன்பில்லாத

---

8. யதி3 த்வம் ப்ரஸ்தி2தோ து3ர்க3ம் வநமத்3யைவ ராக4வ |
அக்3ரதஸ்தே க3மிஷ்யாமி ம்ருத்3நந்தீ குஶகண்டகாந் ||

[ராகவரே! நீர் செல்லவரிதான வனத்திற்கு இன்றே புறப்பட்டீராகிலும், தர்ப்பைகளையும், முட்களையும் மிதித்து அழித்துக்கொண்டு நானும் உமக்கு முன்னால் செல்வேன்.] என்கிறபடியே எனக்கு முற்பட்ட நெஞ்சே! (இயற்றுவாய் எம்மொடு நீ கூடி) ப4க3வத்கைங்கர்யத்தைப் பற்றி உனக்கு உபதேசித்தவனே நானன்றோ; அந்த நன்றியை மறந்து நீ என்னை விட்டுச் செல்லலாமோ? நீ என்னிலும் முற்பட்டுக் கைங்கர்யம் செய்ய உத்ஸாஹம் கொண்டது அழகானதே; பிற்பட்ட என்னையும் கூட்டிக்கொண்டு போ. 'நாம் இருவரும் கூடி என்ன செய்யப்போகிறோம்?" என்று நெஞ்சு கேட்க, 'ப4க3வத் விஷயத்தில்வாசிககைங்கர்யம் செய்யப் போகிறோம்' என்று பதில் கூறுகிறார் மேலே. (நயப்புடைய) நயமுடைய; "என்னால் தன்னைப் பதவிய இன்கவி பாடிய" [திருவாய் 7-9-10] என்கிறபடியே பாடப்படுபவனுக்குச் சிறப்புண்டாக்கக் கூடியதாயிருக்கும் கவி. கவிக்கு நயப்புடைமையாவது—பாடப்படும் நாயகனுக்கு முன்பு இல்லாத

---

‡ [க்ருதஜ்ஞமாக] - என்னாலேயன்றோ உனக்கு இது உண்டாயிற்று, என்னை மறவாதேகொள் என்றபடி.
† "இயற்றுவாய்"-நடப்பாய்.

நீர்மை இக்கவியாலேயுண்டாகை, (நாவின்) நீயும் வேண்டாவென்கிறார். உத்பத்திக்கு, நீயும்வேண்டா நானும் வேண்டா; h நெஞ்சிலே ஊன்றி அநுப₄விக்கைக்கு நீயுண்டாகவமையும்; நெஞ்சின்றிக்கே கவிபாடப்போமோ? என்னில்; நெஞ்சினுடைய ஸ்தா₂நத்திலே ஸர்வேஶ்வரன் நின்று கவிபாடுவிக்குமென்று கருத்து. (தொடைக் i கிளவி) அழகிய ஸந்த₃ர்ப்ப₄த்தையுடைய சொல்லு; j நெஞ்சு கன்றிச்சொல்லாமையாலே சொல்லில் வெட்டிமையின்றிக்கேயிருக்கை, k (உட்பொதிவோம்) (9) ''யதோ வாசோ நிவர்த்தந்தே'' (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று வேதா₃ந்தங்

---

பெருமை இக்கவியாலே உண்டாகும்படியிருக்கை. (நாவின்) நாவினாலே உண்டாக்கப்பட்ட கவி. 'நெஞ்சே! இந்தக் கவியை உண்டாக்குவதற்கு நீயும் தேவையில்லை நானும் தேவையில்லை; நாவே போதும்' என்கிறார். 'இந்தக் கவியை நெஞ்சிலே ஊன்றி அனுபவிப்பதற்குத்தான் நீயும் நானும் இருக்கவேண்டும்' என்கிறார். நெஞ்சில்லாமல் கவிபாட முடியுமோ? எனில், நெஞ்சினிடத்திலே எம்பெருமான் இருந்து கவிபாடும்படி செய்வான் என்று கருத்து ''என்னால் தன்னைப் பாடிய'' என்றாரன்றோ. (தொடைக்கிளவி) அழகாகத்தொடுக்கப்பட்ட சொற்கள். நெஞ்சைச் சிரமப்படுத்திக் கவிபாடாமையாலே, சொற்களில் செயற்கையான கடினத்தன்மை இல்லாமலிருக்கும் கவி என்று கருத்து. (உட் பொதிவோம்)

9. யதோ வாசோ நிவர்த்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ।
ஆநந்த₃ம் ப்₃ரஹ்மணோ வித்₃வாந் । ந பி₃பே₄தி
குதஶ்சநேதி ॥

---

h நெஞ்சானது ''நான் வேண்டாவோ'' என்ன அருளிச்செய்கிறார் [நெஞ்சிலேயூன்றி] இத்யாதி₃. j கவிக்கழகேதென்ன அருளிச்செய்கிறார் [நெஞ்சுகன்றி] இத்யாதி₃. ''கிளவி'' சொல்லு. k, । உள் பொதிகை-

கள் வாச்யத்தையடைந்து நிலேதில்லாமையாலே மீளும்; இங்கு வாச்யம் ! வாசகத்தைவிட்டுப்போகமாட்டாது. (நற் பூவையித்யாதி₂) வாசகத்துக்கு எட்டுமதன்றென்கிறது. (நற் பூவை) உபமாநம் உபமேயத்துக்குப் போராமையாலே உபமாநத்தையும் சிக்ஷிக்கிறது. m (பூவீன்றவண்ணன்) n பூவைப்பூ காட்டுகிற நிறத்தையுடையவன். o பூவைப் பூவைக்காட்டுகிற நிறத்தையுடையவனென்றுமாம். (10) ''गोसदृशो गवयः गवयसदृशो गौः'' (கோ₃ஸத்₃ருஶோ க₃வய: க₃வய

---

[எந்த ப்₃ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்கு கள் (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ அந்தப் பரமாத்மாவின் ஆநந்த₃த்தை அறிந்தவன் எதனிடமும் பயப்படமாட்டான்.] என்கிறபடியே வேதா₃ந்தங்கள் இப் பரம் பொருளின் கு₃ணங்களைச் சொல்லப்புகுந்து சரியாகச் சொல்லமுடியாமையாலே மீள்கின்றன. இங்கு அப்பரம் பொருளின் கு₃ணங்களை இவர் தம் வாக்கில் அடக்கிவிடப் பார்க்கிறார். (நற்பூவைப் பூவீன்ற வண்ணன் புகழ்) சொல் லுக்குள் அடங்காதது-சொல்லப்படும் விஷயம் என்கிறார். (நற் பூவை) பூவைப்பூவாகிற உபமானம் எம்பெருமானுடைய திருமேனி நிறத்துக்கும், மணத்துக்கும், மென்மைக்கும் ஓர ளவுக்கு ஒக்குமேயொழிய, சிறிது நேரத்தில் வாடிவிடும் பூவைப்பூ நித்யமான பெருமைகளையுடைய எம்பெருமா னுடைய திருமேனிக்கு ஒவ்வாதாகையாலே 'நற்பூவை' என்று பூவைப்பூவுக்கு விசேஷணமிடுகிறார். (பூவீன்ற வண் ணன்) பூவைப்பூ காட்டுகிற நீல நிறத்தையுடையவன்' என்றோ, 'பூவைப்பூவைக்காட்டுகிற நீலநிறத்தை உடையவன்' என்றோ பொருள் கொள்ளலாம்.

10. கோ₃ஸத்₃ருஶோ க₃வய: க₃வயஸத்₃ருஶோ கௌ₃:

---

சொல்லுக்குள்ளே அடக்குகை. m. n. o ஈன்ற-பூவாதல், வண்ணமாதல்; பூ-வண்ணத்தைக்காட்டுதல், வண்ணம்- பூவைக்காட்டுதல். 1.

2. புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்
இகழ்வோம் மதிப்போம் மதியோம்— இகழோம், மற்
றெங்கண்மால் செங்கண்மால் சீறல்நீ தீவினையோம்
எங்கண்மால் கண்டா யிவை.

பதவுரை:— புகழ்வோம் — (உன்னைத்) துதித்தோமாகில், பழிப்போம் — (அது உன் கல்யாண குணங்களுக்குத் தகுதியாயிராதாகையால்) பழித்தவர்களாவோம்; புகழோம்— துதியோமாகில், பழியோம் — (உனது குணங்களுக்கு என் வாக்தோஷஸ்பர்சமில்லாமையால்) நிந்தியாதவர்களாவோம்; மற்று—மேலும், மதிப்போம் — நினைத்தோமாகில், இகழ்வோம் — நிந்தித்தவர்களாவோம்; மதியோம் — நினையோமாகில், இகழோம் — நிந்தியாதவர்களாவோம்; எங்கள் மால்— எங்கள் பக்கல் வ்யாமோஹத்தையுடையவனாய், செம் கண் மால் — சிவந்த திருக்கண்களையுடையவனாய், நீ—(அளவிடவொண்ணாத) நீ, சீறல்— கோபியாதே கொள்; இவை—உன் ஸ்தோத்திரத்தில் ஈடுபடுதல், விட்டுநீங்குதல் ஆகிய இவை, தீவினையோம்— கொடும்பாவிகளான, எங்கள் — எங்களுடைய, மால் கண்டாய் — மயக்கம்கிடாய்.

---

ஸத்ருஸோ கௌ) என்னுமாபோலே. (புகழ்) திவ்ய தேஹகுணங்களையும், திவ்யாத்மகுணங்களையும். (நற் பூவைப் பூவீன்றவண்ணன் புகழ் நயப்புடைய நாவின் தொடைக்கிளவியுட்பொதிவோம்.) 1.

---

['கவயம்' என்னும் மிருகம் மாட்டைப்போலுள்ளது; மாடு 'கவயம்' என்னும் மிருகத்தைப்போலுள்ளது.] என்றவிடத்திற்போலே இருபொருளிலும் உபமானமும் உபமேயமும் மாறியிருக்கின்றன. (புகழ்) அப்ராக்ருதமான திருமேனியின் குணங்களையும் ஜ்ஞாநாநந்தமயமான பரப்ரஹ்மஸ்வரூபத்திலுள்ள குணங்களையும். "நற்பூவைப் பூவீன்ற வண்ணன் புகழ் நயப்புடைய நாவீன் தொடைக்கிளவியுட் பொதிவோம்" என்று அந்வயம். 1

அவ:— இரண்டாம் பாட்டில்; (புகழ்வோம்) ''நாவின் தொடைக் கிளவியுட் பொதிவோம்'' என்று வாச்யத்தை விளாக்குலைகொள்ளக்கடவோமென்ற இவர் (9) ''யதோ வாசோ நிவர்த்தந்தே'' (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று வேதங்கள் நின்ற நிலைக்கும் உ அவ்வருகேயானார். (11) ''மஹ்யம் நமோஸ்து கவயே'' (மஹ்யம் நமோஸ்து கவயே) என்கிறார். கவி சொல்லுகையாவது-விஷயத்துக்குள்ளதுஞ்சொல்லி விஷயத்

---

2. அவ:— "நாவின் தொடைக்கிளவி உட்பொதிவோம்" என்று எம்பெருமானுடைய குணங்கள் முழுவதையும் பேசுவோம் என்று முதற்பாட்டில் பாரித்த இவர் 20—வது பக்கத்திலுள்ள 9 வது ப்ரமாணத்தின்படி சில குணங்களைச் சிறிது பேசி மீண்ட வேதங்கள் நின்ற நிலைக்கும் மேலே போய், பேசத்தொடங்கும்போதே "இது பேசுவதற்கு நிலமல்லாதது" என்று கைவாங்குகிறார்.

11. தத்வேத யஸ்ய மஹிமார்ணவஶீகராணு:
ஶக்யோ ந மாதுமபி ஶர்வபிதாமஹாத்₃யை: |
கர்த்தும் ததீ₃யமஹிமஸ்துதிமுத்₃யதாய
மஹ்யம் நமோ(அ)ஸ்து கவயே நிரபத்ரபாய ||
[ஸ்தோ-ர 7]

[எந்த எம்பிரானுடைய மஹிமைக்கடலில் ஒருதிவலையில் அணுவளவுங்கூட, சிவன் பிரமன் முதலியவர்களாலும் உள்ளபடி அளவிட முடியாததோ, அப்பெருமானுடைய பெருமையைப் பற்றிய துதியைச் செய்ய ஆரம்பித்திருப்பவனும், வெட்கமற்றவனும், கவியென்ற பெயர்கொண்டவனுமான எனக்கே நமஸ்காரம் செய்துகொள்ளவேண்டும்.] என்ற ஆளவந்தாரைப்போலே துதியில் நின்றும் மீளுகிறார். இப்படி மீள்

---

அரு:— இரண்டாம்பாட்டு, உ (அவ்வருகே) வேத₃ம் சில பேசி ''நிலமல்ல'' என்றது; இவர் உத்₃யோக₃த்திலே ''நிலமல்ல'' என்கிறாரென்றபடி.

துக்கில்லாததுமிட்டுச் சொல்லுகையிறே; உள்ளதொன்றுஞ் சொல்லப்போகாத விஷயத்திலே கவிபாடப்புக்க நமக்கு நமஸ்காரமென்னுமாபோலே. முற்பட இவர் புகழ இழிந்ததென்? இப்போது "பழி" என்று மீளுகிறதென்? என்னில்; இரண்டும் வஸ்துவைலக்ஷண்யத்தாலே. நல்லது கண்டால் "எனக்கு" என்னக்கடவது; வைலக்ஷண்யத்தை அநுஸந்தியா "அவனுக்கு அதிசயத்தைப்பண்ண" என்றிழிந்த தாம் தம் சொல்லாலே நிறங்கெடும்படி பண்ணுகிறோமென்று மீளுகிறார்.

---

வதற்குக் கருத்து பின்வருமாறு:— ஒரு விஷயத்தைக் கவி பாடுகையாவது—அந்த விஷயத்திற்கு உள்ள பெருமைகள் எல்லாம் சொல்லி, அதற்கு இல்லாத பெருமைகளையும் ஏறிட்டுச் சொல்லுவதேயாகும். ப்ரஹ்மவத்ஸ்விஷயமோவென்றால் உள்ள பெருமைகளையே சொல்லமுடியாததொன்று. அதனாலேயே ஆளவந்தார் "இதைக்கவிபாடப் புகுந்த எனக்கு முதலில் நமஸ்காரம்" என்று தம்மை இகழ்ந்துகொண்டு மீண்டார். முதல் பாட்டில் இவர் புகழத்தொடங்கியதற்கு என்ன காரணம்? இப்பொழுது புகழ்வதே பழிப்பதாகும் என்று சொல்லி இவர் மீள்வதற்கு என்ன காரணம்? எனில்: இரண்டுமே ப்ரஹ்மவத் விஷயத்தின் சிறப்பால் உண்டானது. நல்லதொரு விஷயத்தைக்கண்டால் 'எனக்கு' என்று அதை அநுபவிக்கப் புகுவது தக்கதே. அப்படியே துதிக்க இழிந்தவர் ப்ரஹ்மவத்ஸ்விஷயம் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதிருப்பதைக் கண்டவுடன், "எம்பெருமானைத் துதித்துச் சிறப்பை உண்டாக்க வேண்டுமென்று தொடங்கியது நம்துதியாலே அவனுக்குத் தாழ்வை உண்டாக்குவதாகவன்றோ முடிகிறது" என்று இங்கே மீள்வதும் பொருத்தமே.

வ்யா:— (புகழ்வோம் பழிப்போம்) அவ்விஷயத்தைப் புகழப் பார்த்தோமாகில் பழித்தோமாவோம். (புகழோம் பழியோம்) b ''புகழ்வோம்'' என்றதிலே இவ்வர்த்தஂம் ஸித்₃தி₄யாதோவென்னில்: அந்வயத்திற் காட்டில் வ்யதிரேகத்தாலே சொன்னால் அர்த்த₂த்துக்கு ஒரு ஸ்தை₂ர்யமுண்டென்று சொன்னார். c (இகழ்வோம் மதிப்போம்) நெஞ்சாலே நினைத்தோமாகில் அவ்வஸ்துவை இகழ்ந்தோமாவோம். (12) ''मनः पूर्वो वागुत्तरः'' (மந: பூர்வோ வாகு₃த்தர:) என்று மநஸ்ஸாலே நினைத்தத்தையன்றோ வாக்கு

---

வ்யா:— (புகழ்வோம் பழிப்போம்) ப₄க₃வத்₃விஷயத்தைப் புகழ்ந்தோமானால், உண்மையில் அதைப் பழித்தவர்களாகவே ஆகிறோம். (புகழோம் பழியோம்) அவனைப்புகழாமலிருந்தோமானால் அதுவே அவனைப் பழிக்காமல் இருந்ததாகும். "புகழ்வோம் பழிப்போம்'' என்றதனாலேயே இந்த அர்த்தஂம் கிடைக்காதோ? எனில்: அங்கு அந்வயத்தாலே (உடன்பாட்டாலே) சொன்னதைக்காட்டிலும், அதையே வ்யதிரேகத்தாலே (எதிர்மறையாலே) சொல்லுவது உறுதிப்படுத்தும் என்னும் காரணத்தாலே சொல்லுகிறது. ஆக, வாக்கைக்கொண்டு ப₄க₃வத்₃விஷயத்தில் இழிவது தகாது என்று காட்டினாராயிற்று. இனி அடுத்தபடியாக மனத்தைக் கொண்டும் ப₄க₃வத்₃விஷயத்தில் இழிவது தகாது என்று காட்டுகிறார்—(இகழ்வோம் மதிப்போம்) "மதிப்போம் இகழ்வோம்'' என்று அந்வயித்துக் கொள்ள வேண்டும். நெஞ்சாலே நினைத்தோமானால் ப₄க₃வத்₃விஷயத்தை இகழ்ந்தவர்களாகிறோம் என்று கருத்து.

12. மந: பூர்வோ வாகு₃த்தர: [தைத்- ஸம் 7-5-3]
[முதலில் மனஸ்ஸும் அடுத்தபடியாக வாக்கும் ப்ரவர்த்திக்கின்றன.] அதற்படியே, மனத்தாலே நினைத்ததையன்றோ வாக்

---

b 'புகழ்ந்தோமோ பழித்தோம்' என்றபோதே புகழாவிட்டால் பழிக்கவில்லையென்றது தன்னடையே வாராதோ, ஶாப்₃த₃மாகச்சொல்லவேணுமோ என்று ஶங்காபி₄ப்ராயம். c ''இகழ்வோம்-மதிப்போம்''—மதித்தோமோ இகழ்ந்தோமானோம்.

சொல்லுவதென்கிற ந்யாயத்தாலே ''புகழ்வோம் பழிப் போம்'' என்கிறத்தாலே ஸித்₃தி,யாதோவென்னில், நெஞ் சாலே நினைத்தபாபங்களுக்கே ப்ராயஶ்சித்தம்பண்ண வேண் டும்படியாலே நினைத்தோமாகிலும் அவ்வஸ்துவை அழித் தோமாவோமென்கிறார். (மதியோமிகழோம்) நினைத்திலோ மாகில் இகழ்ந்திலோமாவோம். (மற்று) என்கிறது– ''புகழோம்'' என்கிறதிற் காட்டில் ''இகழ்வோம்'' என்றதினுடைய பிரிவைக் காட்டுகிறது ௧ மற்றிகழ்வோம் என்றபடி. (எங்கண்மால்) இகழப்போகாதபடி தம்மு

---

காலே சொல்லுகிறோம்; ஆகையாலே "புகழ்வோம் பழிப்போம்'' என்று வாக்கின் செயலைச் சொன்னதாலேயே இந்த சொல் லப்படும் மனத்தின் செயலும் சொல்லப்பட்டதாகாதோ? எனில்; நெஞ்சாலே நினைத்த பாபங்களுக்கே ப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டியிருக்கையாலே, மனத்தாலே நினைத்தோமா னாலும் ப₄க₃வத்₃விஷயத்தை அழித்த பாபத்திற்கு உட்படு வோம் என்று காட்டுவதற்காகச் சொல்லுகிறார். (மதியோம் இகழோம்) ப₄க₃வத்₃விஷயத்தை மனத்தாலே நினைக்காமல் இருந்தோமானால், அதை இகழாமல் இருந்தவர்களாகிறோம். (மற்று) என்னும் சொல் முதல் அடியில் சொல்லப்பட்ட வாக்கின் செயலைக் காட்டிலும் இரண்டாவது அடியில் சொல்லப்பட்ட மனத்தின் செயல் வேறுபட்டது என்பதைக் காட்டுகிறது. இரண்டாவது அடியின் கடைசியில் உள்ள 'மற்று'' என்பதை அதன் முதலில் வைத்து "மற்று இகழ் வோம் மதிப்போம்'' என்று கூட்டிப்பொருள் கொள்ள வேண்டும். இவ்விரண்டு அடிகளில சொல்லப்பட்டதையும ''யஸ்யாமதம்'' என்று தொடங்கும் கேநோபநிஷத் [2-3] மந்திரத்தையும் உள்ளடக்கியே

---

௧ (மற்றிகழ்வோம்) என்றது வேறுயிருக்கிற, இரண்டாம் படியான இகழ்வோமென்றதைக் காட்டுகிறது.

னுடைய பக்கலிலே வ்யாமுக்₃த₄னானபடி. e (செங்கண்மால் எங்கண்மால்) (13) "यथा कप्यासं" (யதா₂ கப்யாஸம்) என்று ஶ்ருதிஸித்₃த₄மாய் ஐஶ்வர்யஸூசகமான கண்ணை உடையவனாய் அபரிச்சே₂த்₃யனானவன், என்பக்கலிலே வ்யாமுக்₃த₄னானான். f (சீறல்) g "நம் வைலக்ஷண்யத்தை அறியாதே, இவரிழிவதே" என்று தம் பக்கலிலே சீறினா

அமதம் மதம் மதமதா₂மதம் ஸ்துதம்
பரிநிந்தி₃தம் ப₄வதி நிந்தி₃தம ஸ்துதம் ।
இதி ரங்க₃ராஜமுத₃ஜூகு₄ஷத் த்ரயீ
ஸ்துமஹே வயம் கிமிதி தம ந ஶக்நும: ॥
[ ர-ஸ்த 1—13]

["பரம்பொருள் அறியமுடியாதது என்று நினைத்தால் அப்போது அறியப்பட்டதாகிறது. மேலும், பரம்பொருள் அறியக்கூடியது என்று நினைத்தால் அது அறியப்படாததாகிறது. பரம்பொருள் துதிக்கத்தக்கது என்று நினைத்தால் அது இகழப்பட்டதாகிறது. அது துதிக்கமுடியாதது என்று நினைத்தால் துதிக்கப்பட்டதாகிறது" என்று தென்மொழி வடமொழி வேதங்கள் முறையிடுகின்றன. அந்தப் பரம்பொருளான ஸ்ரீரங்க₃நாத₂னை அறிவிலிகளான நாம் என்னவென்று துதிக்க இழிகின்றோம்? துதிக்கவல்லோமல்லோம்] என்று ஸ்ரீபராசரபட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே அருளிச்செய்தார். (எங்கண் மால்) இகழக்கூடாதபடி எம்மிடத்திலே பெருங்காதல் கொண்டிருக்கும் பெருமான். "எம் கண் மால்" என்றும் பிரிக்கலாம். (செங்கண் மால் எங்கண் மால்)

13. தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ
[சாந் 1-6-7]

[(ஸூர்யமண்ட₃லத்தின் நடுவிலுள்ள) அப்புருஷனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இருகண்கள் உள.] என்று

e, f, g எங்கண்மாலானவன் செங்கண்மாலானானென்றாய், சிவப்பாலே சீற்றமாய் அவன் சீறுதேயிருக்கச் சீறினாக ப்₄ரமித்துச் சொல்லுகிறாராதல்;

னுகக்கொண்டு சீருதேகொள் என்கிருர். b அன்றியே, தாம் புகழப்புக்கவாறே பசியர் ''உண்ண'' என்று இலையகலப் படுக்குமாபோலே தன் குணங்களைக் கேட்கப் பாரிக்கப்புக, தாம் மாறினவாறே சீறினதுக்கு ''சீருதேகொள்'' என்று மாம். (தீவினையோம்) நீ உகந்தபடி பரிமாறப்போகாத பாவியோம். விஷயவைலக்ஷண்யமறியாதே புகழவிழிந்த பாவியோமென்றுமாம். (எங்கண்மால் கண்டாயிவை) வைலக்ஷண்யத்தைக் கண்டு இழிவது, ''அயோக்யன்'' என்று அகல்வதாகிறஇவை எங்களுடைய ப்ராந்திகளிறே. 2.

---

வேதங்களில் முழங்கப்படுவதால் இவனே ஸர்வேஶ்வரன் என்று காட்டித் தருவதான கண்ணை உடையவனும், எவரா லும் அளவிட முடியாதவன் என்னிடம் பெருங்காதல் கொண்டான். முதல் 'மால்' பெரியவன் என்றும், அடுத்த 'மால்' 'அன்புடையோன்' என்றும் பொருள்படும். (நீ சீறல்) நீ சீறி யருளாதே. (செங்கண்மால் சீறல்) "நம்முடைய பெருமையை அறியாமல் இவர் துதிக்கத்தொடங்குவதே!'' என்று தம்மி டம் சீறிக்கண் சிவந்ததாக நினைத்துச் சீறியருளாதே என் கிருர். அப்படியல்லாமல் முதல் பாட்டில் தாம் புகழப் புகுந் தவுடன், பெரும் பசியுள்ளவன் தன் பசிக்குத்தக்கபடி பெரிய இலையாக இட்டுக்கொண்டு உண்ணப்புகுவது போலே தன் குணங்களை செவியாரக் கேட்க எம்பெருமான் பாரிக் கப்புக. இவ்விரண்டாம் பாட்டில் தாம் துதிப்பதிலிருந்து மீண்டதற்குச் சீறியருளாதே என்கிறதாகவும் கொள்ளலாம். (தீவினையோம்) நீ உன் குணங்களைக் கேட்கப் பாரித்திருக்க, உன்செவியார உன்குணங்களைப் பாடக் கொடுத்துவைக் காத பாபத்தை உடையோம். இது "சீறல்'' என்பதின் இரண்டாவது பொருளுக்குச் சேர்ந்தது அல்லது. "சீறல்'' என்பதின் முதல் பொருளுக்குச்சேர உன் குணங்களின் பெருமை அறியாமல் உன்னைப் புகழத்தொடங்கும்படியான பாபத்தை உடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். (எங்கள் மால் கண்டாய் இவை) உன் சிறப்பைக்கண்டு துதிக்கத் தொடங்குவது, துதிக்கத் தகுதியில்லை என்று அகல்வது ஆகிய இரண்டுமே எங்களுடைய மயக்கத்தால் விளைவதன்றோ. மால்—மயக்கம். 2.

---

b அன்றிக்கே - பாட்டுக்கேட்கவிருந்தவன் பாடாவிட்ட வாறே சீறினுதல்.

3. இவையன்றே நல்ல விவையன்றே தீய
இவையென் றிவையறிவ னேலும்— இவையெல்லாம்
என்னு லடைப்புநீக் கொண்ணு திறையவனே
என்னல் செயற்பால தென்.

பதவுரை:— இவையன்றே நல்ல — தீனையாமையாகிற இவையன்ரே நல்லவை: இவையன்றே தீய — நினைத்தலாகிற இவையன்ரே தீயவை; என்று — என்கிற, இவை இவை — இந்த இந்தத் தன்மைகளை, அறிவனேலும் —அறிந்தேனேயாகிலும், இவையெல்லாம்— தீயவையும் நல்லவையுமாகிற இவ்வஸ்துக்களையெல்லாம், என்னுல்—, அடைப்பு நீக்கு — பற்றவும் விடவும், ஒண்ணது— முடியாது; இறையவனே— எம்பெருமானே! என்னுல் — அடியேனுல், செயற்பாலது என் — செய்யத்தகுந்தது என்ன இருக்கிறது?

அவ:— மூன்ரும் பாட்டில்; (இவை) ப்ராந்தியாலன்றிறே புகழவிழிந்தது ஜ்ஞாநத்தாலேயிறே;ஆனல் அடியிலே "நமக்கு நிலமன்று" என்று மீளவேண்டாவோவென்ன;

---

3. அவ:— முதல் பாட்டில் பகவத்விஷயத்தின் சிறப்பைக்கண்டு எம்பெருமானைத் துதிக்கத் தொடங்கினர். இரண்டாம் பாட்டில் 'அளவிடமுடியாத அந்த பகவத் விஷயத்தை, தகுதியற்ற நாம் துதிக்கத் தொடங்குவது சரியல்ல' என்று மீளத்தொடங்கி, எம்பெருமான் சிறுவதைப் பார்த்து "அடியேன் துதிக்கத்தொடங்கியதும் மறுபடி மீண்டதும் மயக்கத்தால் விளைந்தது" என்று கூறினர். முதல் பாட்டில் எம்பெருமானுடைய சிறப்பைக்கண்டு துதிக்கத் தொடங்கினரே யொழிய மயக்கத்தால் அல்ல. ஆனல் அப்போதே "மிகத்தாழ்ந்த நான் இந்த உயர்ந்த விஷயத்தைத் துதிப்பது தகாது" என்று மீண்டிருக்கவேண்டாமோ? எனில்: " 'எம்பெருமானை மனத்தாலும் வாயாலும் மிகத் தாழ்ந்த நாம் துதிக்காமலிருப்பதே நல்லது. துதித்தல் பழிப்பதேயாகும்; ஆகையால் தீயது' என்பதை எனக்கு எம் பெருமான் அசித்துக்கு இல்லாத அறிவைக் கொடுத்திருக்

3. இவையன்றே நல்ல விவையன்றே தீய
இவையென் றிவையறிவ னேலும்— இவையெல்லாம்
என்னு லடைப்புநீக் கொண்ணு திறையவனே
என்னால் செயற்பால தென்.

பதவுரை:— இவையன்றே நல்ல — நினையாமையாகிற இவையன்ரே நல்லவை: இவையன்றே தீய — நினைத்தலாகிற இவையன்ரே தீயவை; என்று — என்கிற, இவை இவை — இந்த இந்தத் தன்மைகளை, அறிவனேலும் —அறிந்தேனேயாகிலும், இவையெல்லாம்— தீயவையும் நல்லவையுமாகிற இவ்வஸ்துக்களையெல்லாம், என்னால்—, அடைப்பு நீக்கு — பற்றவும் விடவும், ஒண்ணது— முடியாது; இறையவனே— எம்பெருமானே! என்னால் — அடியேனால், செயற்பாலது என் — செய்யத்தகுந்தது என்ன இருக்கிறது?

அவ:— மூன்ரும் பாட்டில்; (இவை) ப்ராந்தியாலன்றிறே புகழவிழிந்தது ஜ்ஞானத்தாலேயிறே;ஆனல் அடியிலே "நமக்கு நிலமன்று" என்று மீளவேண்டாவோவென்ன;

---

3. அவ:— முதல் பாட்டில் பகவத் விஷயத்தின் சிறப்பைக்கண்டு எம்பெருமானைத் துதிக்கத் தொடங்கினர். இரண்டாம் பாட்டில் 'அளவிடமுடியாத அந்த பகவத் விஷயத்தை, தகுதியற்ற நாம் துதிக்கத் தொடங்குவது சரியல்ல' என்று மீளத்தொடங்கி, எம்பெருமான் சிறுவதைப் பார்த்து "அடியேன் துதிக்கத்தொடங்கியதும் மறுபடி மீண்டதும் மயக்கத்தால் விளைந்தது" என்று கூறினர். முதல் பாட்டில் எம்பெருமானுடைய சிறப்பைக்கண்டு துதிக்கத் தொடங்கினரே யொழிய மயக்கத்தால் அல்ல. ஆனல் அப்போதே "மிகத்தாழ்ந்த நான் இந்த உயர்ந்த விஷயத்தைத் துதிப்பது தகாது" என்று மீண்டிருக்கவேண்டாமோ? எனில்: " 'எம்பெருமானை மனத்தாலும் வாயாலும் மிகத்தாழ்ந்த நாம் துதிக்காமலிருப்பதே நல்லது. துதித்தல் பழிப்பதேயாகும்; ஆகையால் தீயது' என்பதை எனக்கு எம்பெருமான் அசித்துக்கு இல்லாத அறிவைக் கொடுத்திருக்

உ அசித்₃வ்யாவ்ருத்தியாலும், அர்த்த₂ாநுஸந்த₄ாநம் பண்ண க்ஷமனுக்கிவைக்கையாலும் "நன்று தீது" என்று அறிவன்; அசித்ஸம்ஸர்க்க₃த்தாலும், பாரதந்த்ர்யத்தாலும், சாபலத்தாலும் அநுஷ்ட்ட₂ாநக்ஷமனன்று.

வ்யா:— (இவையன்றே நல்ல) "புகழோம் பழியோம், மதியோமிகழோம்" என்கிற இவை நல்ல. (இவையன்றே தீய) "புகழ்வோம் பழிப்போம்" என்கிற இவை பொல்லாது. (இவையென்றிவையறிவனேலும்) இவையிப்படியென்று பரிச்சே₂தி₃த்தறிந்தேனேலும். (இவையெல்லாம்)

---

கையாலும், நன்மை தீமைகளை ஆராய வல்லவனும்படி செய்திருக்கையாலும் நான் அறிவேன். ஆனாலும் தே₃ஹ ஸம்ப₃ந்த₄த்தை உடையவனாயிருப்பதாலும், ஒன்றைக் கொள்ளுவதோ, தள்ளுவதோ எனக்கு அதீ₄னமல்லாதபடி பாரதந்த்ர்யமுடைமையாலும், ப₄க₃வத்₃விஷயத்தைத் துதித்தல்லது நில்லாதபடியான ஆசையுடையவனாகையாலும், நான் அறிந்ததற்குத் தக்கபடி துதியாமையாகிற அநுஷ்ட₂ானத்தைக் கொள்ளுவதற்கு இயலவில்லை" என்று கூறி இப்பாட்டில் துதியை மறுபடி தொடங்குகிறார்.

வ்யா:— (இவையன்றே நல்ல) (புகழோம் பழியோம், மதியோம் இகழோம்" என்று சொன்னபடியே வாயாலும் நெஞ்சாலும் துதிக்காமலிருப்பதே நல்லது. (இவையன்றே தீய) "புகழ்வோம் பழிப்போம் மதிப்போம் இகழ்வோம்" என்று சொன்னபடியே எம்பெருமானை வாயாலும் நெஞ்சாலும் துதிப்பது தீயது. (இவையென்று இவை அறிவனேலும்) இப்படி நன்மை தீமைகளை இவை இவை என்று அளவிட்டு அறிந்தேனாகிலும், (இவை எல்லாம்) அறிந்தபடி துதிப்பதைக் கைவிடுவது, துதியாமையைக் கைக்கொள்ளுவது

---

அரு:— மூன்றும்பாட்டு. § உ மூலத்திலே அர்த்த₂மாக்கி அறிகைக்கும், அறிந்தால் மீளப்போகாமைக்கும் ஹேது அருளிச்செய்கிறார் (அசித்₃வ்யாவ்ருத்தி) இத்யாதி₃. இவ்விடத்துக்குத்தரம்-கிட்டாமை நல்லது. கிட்டுகை தீயது.

---

§ இங்கு சில சொற்கள் செல்லரிக்கப்பட்டுள்ளன.

த்யாக₃ பரிக்₃ரஹாதி₃களெல்லாம். (என்னாலடைப்பு நீக் கொண்ணாது) என்னால் பரிக்₃ரஹிக்கவும் போகாது; த்யஜிக் கவும் போகாது. (இறையவனே) பரிக்₃ரஹிக்கவும் த்யஜிக்க வும் இது தன்னரசு நாடோ? (என்னாற்செயற்பாலதென்) b(14) "कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन" (கர்மண்யேவாதி₄ காரஸ்தே மா ப₂லேஷு கதா₃சந) (15) "मां नमस्कुरु" (மாம் நமஸ்குரு) என்று நீ அருளிச்செய்ய, என்னாற்செய்யப் படுவதுண்டோ? 3

---

முதலானவையெல்லாம். (என்னால் அடைப்பு நீக்கு ஒண்ணாது) நல்லது என்று நானறிந்த துதியாமையைக் கைக்கொள்வதும முடியாது; தீயது என்று நானறிந்த துதிப்பதைக் கை விடுவதும் இல்லாது; (இறையவனே) நான் ஒன்றைக் கைக் கொள்வதற்கும் ஒன்றைக் கைவிடுவதற்கும் எனக்கு ஸ்வாதந் த்ரியம் உண்டோ? ஸ்வாமியான நீயன்றோ இதைச்செய்ய வேண்டும். (என்னால் செயற பாலதென்)

14. கர்மண்யேவாதி₄காரஸ்தே மா ப₂லேஷு கதா₃சந [கீ₃தை 2-47]

[முமுக்ஷுவான உனக்கு நித்ய நைமித்திகாதி₃ கர்மங்களைச் செய்வதற்கே அதி₄காரம். ஒருபோதும் கர்மப₂லத்தில் அதி₄ காரமில்லை.]

15. மந்மநா ப₄வ மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு| மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே || [கீ₃தை 18-65]

[என்னிடத்தில் மனத்தை வைத்தவனாகவும், என்னுடையப₄க் தனாகவும்என்னை ஆராதி₄ப்பவனாகவும் ஆவாயாக;என்னை நமஸ் கரிப்பாயாக; என்னையே அடைவாய்; இது ஸத்யம், உனக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன். எனக்கு இனியனன்றோ நீ.] என்று ப₂லனில் பற்று வையாமல் உன்னை வணங்குவது, துதிப் பது முதலான காரியங்களைச் செய்யும்படி நீ அருளிச் செய்திருக்க, துதிப்பதிலிருந்து என்னால் கைவாங்க முடியுமோ? 3.

---

b அவனே பற்றுவிக்கிறவனும் விடுவிக்கிறவனுமொழிய இவனாற் செய்யத்தக்கதில்லையென்னுமத்தை அருளிச் செய்கிறார் (கர்மண்யேவாதி₄கார:) இத்யாதி₃. 3

4.என்னில் மிகுபுகழார் யாவரே, பின்னையும்மற்
றெண்ணில் மிகுபுகழேன் யானல்லால்— என்ன
கருஞ்சோதிக் கண்ணன் கடல்புரையும், சீலப்
பெருஞ்சோதிக் கென்னெஞ்சாட் பெற்று.

பதவுரை:— என்ன — என்னுடையவனாய், கரும் சோதி கண்ணன் — கரிய நிறத்தையுடைய க்ருஷ்ணனாய், கடல் புரையும் சீலம் — கடலை ஒத்திருக்கும் நீர்மையையுடையவனாய், பெரும் சோதிக்கு — பெரிய தேஜஸ்ஸையுடையவனான உனக்கு, என் நெஞ்சு — என்னுடைய மனஸ்ஸானது, ஆள் பெற்று — அடிமையாயிற்று: மற்று எண்ணில் — ஆராய்ந்து பார்த்தால், மிகு புகழேன் யான் அல்லால் — அதி₄கமான புகழையுடையவன் நானேயல்லது, பின்னையும் — அதற்குமேல், என்னில் — என்னைக்காட்டிலும், மிகு புகழார் — மேலான கீர்த்தியையுடையவர். யாவரே — வேறு யாருளர்?

---

அவ:— நாலாம்பாட்டில்; (என்னில்) '' 'நானணையில் அங்குத்தைக்கு அவத்₃யாவஹம்; அகலில் அங்குத்தைக்கு நிறமுண்டாம்' என்று நீர் சொன்னத்துக்கு a ஸ்த₂ாநமறிந்திலீர்; b ப்ரயோஜகத்தில் அழகிது; நீர் சொன்னபடியை c மாறி நிற்கவேணும்; நீர் அகன்றீராகில் அதி₄க்ருதாதி₄காரம் அவ்விஷயம்' என்று நம்மை நம்புவாரில்லை; நீர் பற்றினீராகில் 'இவர் பற்றின விஷயமெல்லார்க்கும் பற்றலாம்' என்று நம்மைப் பற்றுகையாலே நமக்கு நிறமுண்டாம்'' என்றருளிச்செய்யப் பற்றி ஹ்ருஷ்டராகிறார்.

---

அரு:— நாலாம்பாட்டு a ஸ்த₂ாநம்-நிலையாய், த்யாக₃ ஸ்வீகாரத்தினுடைய மர்மமறிந்திலீரென்றபடி; b (ப்ரயோஜகத்திலே) மேலெழப்பார்த்தால் அகலுகை நல்லதுபோலே தோற்றுமத்தனை. c (மாறிநிற்க) அகலாதிருக்க.

வ்யா: — d (என்னில் மிகுபுகழார் யாவரே) e என்னிற் காட்டில் மிக்க புகழையுடையாரெவரென்றுமாம். f ஆஶ்ரயத்தில் மிஞ்சின புகழையுடையார் எவரென்னவுமாம்.

---

4 அவ:— "'நான் பகவத்விஷயத்தைத் துதிக்கத் தொடங்கினால் அதற்குக் குற்றமாகும்; துதிக்காமல் நீங்கினால் அதற்குச் சிறப்புண்டாகும்' என்று நீர் சொன்ன விஷயத்தில் ஒரு முக்கியமான அம்சத்தை நீர் அறியவில்லை; நீர் சொன்னது மேலெழப் பார்க்கும்போது அழகாகத்தான் இருக்கிறது ஆனால் உட்புகுந்து ஆராய்ந்தால் நீர் சொன்னதற்கு நேர்மாறானதையே அநுஷ்டிக்கவேண்டும்; நீர் என்னைத் துதிக்காமல் அகன்றீராகில் 'ஆழ்வாரைக் காட்டிலும் சிறந்தவர்கள்தான் பகவத் விஷயத்தைப் பற்றலாம்' என்று எண்ணி எவனும் என்னிடம் வராமல் போய் விடுவான்; நீர் என்னைத் துதித்தீராகில் 'இவர் பற்றின பகவத் விஷயத்தை அனைவருமே பற்றலாம்' என்று பலரும் நம்மைப் பற்றுவார்கள்; ஆகையாலே, நீர் துதிப்பதால் நமக்குச் சிறப்புண்டாகும்" என்று எம்பெருமான் அருளிச்செய்ய, அவனை மேலும் துதிக்கத் தொடங்கி மகிழ்கிறார்.

வ்யா :— (என்னில் மிகு புகழார் யாவரே) 'என்னைக் காட்டிலும் மிகுந்த புகழை உடையவர் எவர்?' என்றும் பொருள் கொள்ளலாம்; அல்லது "என்றனளவன்றால் யானுடைய அன்பு" [இர. திருவ - 100] என்றவிடத்திற் போலே 'அணுவான என் ஸ்வரூபத்தை விஞ்சி விபுவாய்-எங்கும் பரவியதாய் இருப்பது என்னுடைய புகழ். இப்படிப்பட்ட புகழை உடையவர் வேறு எவர் உளர்?' என்றும்

---

d. e, f "என்னில்" விஶிஷ்டத்திலே என்னிற்காட்டிலில்லை யென்னுதல்; நிக்ருஷ்டத்திலே அணுவான ஆத்மாவிலும் விஞ்சினபுகழையுடையார் ஆரென்னுதல்.

g அலாபுத்தில் "சீலமில்லாச் சிறியனேலும் செய்வினையோ பெரிதால்" என்று சொல்லுமாபோலேயிறே பேற்றிலுஞ் சொல்லுவது. (பின்னையும் மற்றெண்ணில் மிகுபுகழேன்யா னல்லால்) ஆஶ்ரயத்திலடங்காத புகழையுடையேன் யானே யன்றோ? h (என்ன கருஞ்சோதியித்யாதி) தன் வடிவை எனக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணி கடலபுஙய் அளவி றந்த ஶீலத்தையுடைய ஸர்வேஶ்வரனுக்கு அதிஶயத்தைப்

---

பொருள் கொள்ளலாம். இந்த இரு பொருள்களிலும் சொன்ன அர்த்தத்தை உறுதிப்படுததுகிறார் மேலே— (பின்னையும் மற்றெண்ணில் மிகு புகழேன் யானல்லால்) ஆராய்ந்தால், ஸ்வரூபத்தில் அடங்காத புகழை உடையவன் என்னைத் தவிர வேறு யாருமில்லை. இனி இப்படித் தன்னைப் புகழ்ந்து கொள்ளும் ஆழ்வார் "சீலமில்லாச் சிறியனேலும் செய்வினையோ பெரிதால்" [திருவாய் 4-7-1] முதலான விடங்களில் தம்மை மிகத்தாழ்ந்தவராகச் சொல்லிக் கொள் வதின் கருத்து என்ன? எனில் — எம்பெருமானைப் பெருத போது பெருத வருத்தத்தாலே 'என்னைவிடப் பாவி எவருமில்லை' என்று சொலலுவதுபோலே, அவனைப் பெறற போது 'எனக்கு நிகரானவர் எவருமில்லை' என்று சொலலு கிறாரகையாலே குறையில்லை. இதற்குக் காரணததைக் கூறுகிறார் இனி. (என்ன கருஞ்சோதிக் கண்ணன் கடல் புரையும் சீலன் பெருஞ்சோதிக்கு என் நெஞ்சு ஆட்பெறறு) கரிய நிறத்தை உடைய கண்ணனுய், தன் வடிவை எனக்கு முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுத்து எளியனுகி, கடல்போல் அளவற்ற சீலகுணத்தை உடைய பரஞ்சோதி யாகிற ஸர்வேஶ்வரனுக்கு எனது நெஞ்சம் துதிப்பதன்

---

g இதுக்கு த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார் (அலாபுத்தில்) இத்யாதி. h "என்ன" என்னுடைய, கருஞ்சோதி. நெஞ் சானது ஆளாகப்பெற்று-பெறுகையாலே என்றபடி. 4.

5. பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தைநீ,
மற்றையா ராவாரும் நீபேசில்,—எற்றேயோ
மாயமா மாயவனே மாயமுலை வாய்வைத்த
நீயம் மா காட்டும் நெறி.

பதவுரை: — மாய — ஆச்சர்ய சக்தியையுடையவனே! அம் மா — என் ஸ்வாமியே!, பேசில் — (நீ செய்கின்ற உபகாரங்களைப்) பேசப்புக்கால், பெற்ற தாய் நீயே — ஈன்றெடுத்த தாயைப்போலே இனியதைச் செய்பவனும்

---

பண்ணைப்பெற்றிருக்கிற என்னிற் காட்டில் மிக்க புகழை யுடையாரார்? 4

---

மூலம் சிறப்பை விளைப்பதாயிற்றே; "என்னில் மிகு புகழார் யாவரே" என்று முற்பகுதியோடு கூட்டிப்பொருள் கொள்ள வேண்டும். "என்னுடைய கருஞ்சோதிக் கண்ணன்" என்கை யாலே தமக்கு வடிவழகை அநுபவிக்கக் கொடுத்து எளியனானபடியைச் சொல்லுகிறது. "கடல் புரையும் சீலன் பெருஞ்சோதி"என் றுயிரிக்கவேண்டும். "சீலன்" என்றது சீல குணத்தை உடையவன் என்றபடி. சீல குணமாவது — மிகப் பெரியவன் மிகத் தாழ்ந்தவர்களோடு புரையறப் (ஒன்றாகப்) பரிமாறும் தன்மை. இப்படிப் பரிமாறியவன் 'பரஞ்சோதி' என்று வேதங்களில் புகழப்படும் ஸர்வேச்வரன் என்பதை 'பெருஞ்சோதி' என்னும் பதத்தால் காட்டுகிறார். அன்றிக்கே

"ஈசன் வானவர்க்கென்பன் என்றால் — அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு?
நீசனேன் நிறைவொன்றுமிலேன் — என் கண்
பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே." [திருவாய் 3-3-4]

என்கிறபடியே தம்மிடம் பாசம் வைக்கையாலே பரஞ்சுடர்ச் சோதியானான் என்றும் கொள்ளலாம். 4.

நீயே; பிறப்பித்த தந்தை நீ — உண்டாக்கின தகப்பனைப் போல் நன்மையைச் செய்பவனும் நீயே; மற்றையார் ஆவாரும் நீ — (ஆத்மாவுக்கு நன்மையைச் செய்யுமவர் களான) மற்றுமுள்ள ஆசார்யர்களும் நீயே; மா மாய வலை மாய — பெரிதான வஞ்சனையையுடைய பூதனை முடியும்படி, முலை வாய் வைத்த — (அவளுடைய) முலையை வாயிலே வைத்தருளிய, நீ — ஸர்வேச்வரனான நீ. காட்டும் நெறி — (என் விரோதத்தைப் போக்குவதற்குக்) காண்பித்த வழி, எற்றேயோ — எவ்வளவு ஆச்சர்யமானது!

---

அவ:— ஐந்தாம் பாட்டில்; (பெற்ற) "அயோக்₃யன்" என்று அகன்று, (16) "असन्नेव स भवति" (அஸந்நேவ ஸ ப₄வதி) என்று முடியப்புக்க என்னை ஸத்தையுண்டாக்கினாய் என்கிறார்.

---

5. அவ :— "பகவத் விஷயத்தை அணுகுவதற்கு நமக்குத் தகுதியில்லை என்று அகன்று,

16. அஸந்நேவ ஸ ப₄வதி। அஸத் ப்₃ரஹ்மேதி வேத₃ சேத்।
அஸ்தி ப்₃ரஹ்மேதி சேத்₃ வேத₃।
ஸந்தமேநம் ததோ விது₃: ॥
[தைத்-ஆந 6]

[ப்₃ரஹ்மம் இல்லையென்று அறிந்தானாகில் அவன் இல்லாதவனாகவே ஆகிறான். ப்₃ரஹ்மம் இருக்கிறதென்று அறிந்தானாகில் அக்காரணத்தாலேயே இவனை இருக்கிறவனாக (நல்லோனாக) அறிகிறார்கள்.] என்கிறபடியே ஸ்வரூப நாசத்தை அடையத் துணிந்த எனக்கு அருள்புரிந்து ஸ்வரூபஸத்தை உண்டாம்படி செய்தாய்" என்று எம்பெருமானைக் குறித்துத் தம் நன்றியறிதலைக் காட்டுகிறார்.

வ்யா:— (பெற்றதாய் நீயே) ப்ரஜையுண்டாகைக்கு நோன்பு நோற்று, வயிற்றிலே த₄ரித்தால் ப்ரஜைக்குப் பாங்காக பே₄ாஜநஶயநாதி₃களை நியமித்து, பிறந்தால் அமேத்₄யப்ரஸ்ரவாதி₃களைத் தொட்டளைந்து, வளர்த்து, இதினுடைய ஹிதங்களையே சிந்திக்கும் தாயாவாயும் நீ. (பிறப்பித்த தந்தை நீ) ஒரு பாத்ரத்திலேயிட்டுவைக்குமவை போலே த₄ரிக்குமளவிறே இவளது; உத்பாத₃கன் பிதாவிறே. ஹிதமே சிந்தித்திருக்கும் பிதாவும் எனக்கு நீ. (மற்றையாராவாரும் நீ) (17) ''शरीरमेव मातापितरौ जनयतः'' (ஶரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:) என்று இருவருங்கூட, ஶரீரத்

---

வ்யா :— (பெற்றதாய் நீயே) குழந்தை உண்டாவதற்கு நோன்பு நோற்று வயிற்றிலே பத்து மாதம் தரிக்கும்போது குழந்தைக்குத் தக்கபடி தன்னுடைய ஆகாரம், சயநம் முதலானவற்றைக் கட்டுப்படுத்திக்கொண்டு, பிறந்த பிறகு குழந்தையின் மல மூத்ராதிகளைத் தொட்டு அளைந்து வளர்த்து, அக்குழந்தைக்கு நன்மைகளையே நினைக்கும் தாயாய் இருப்பவனும் நீயே. (பிறப்பித்த தந்தை நீ) ''மாதா ப₄ஸ்த்ரா பிது: புத்ர:'' [தாயானவள் புத்திரனைப் பத்து மாதம் இட்டு வைக்கும் பாத்ரம் போன்றவளே. பிள்ளை தந்தைக்கே உரியவன்] என்று சாஸ்திரங்களில் கூறியபடியே தாய் பிள்ளையைப் பத்துமாதம் இட்டு வைக்கும் பாத்ரம் என்றே கருதலாம்படி அவளைக் காட்டிலும் பலவகைகளில் குழந்தையிடம் உரிமை உள்ளவனுய், குழந்தையை உண்டாக்கினவனுய், குழந்தைக்கு இனியதைச் செய்யும் தாயைப்போலல்லாமல் அக்குழந்தைக்கு நன்மையையே நினைத்துச் செய்யும் தந்தையாயிருப்பவனும் எனக்கு நீயே ஆவாய். (மற்றையாராவாரும் நீ)

17. ஶரீரமேவ மாதாபிதரௌ ஜநயத: | ஸ ஹி வித்₃யாதஸ் தம் ஜநயதி | தச்ச்₂ரேஷ்ட₂ம் ஜந்ம [ஆப-ஸூ 1-1-6]

[தாய்தந்தையர்கள் சரீரத்தையே உண்டு பண்ணுகிறார்கள். ஆசார்யனே வித்யையினுல் அவனுடைய ஆத்மாவை உண்டு பண்ணுகிறுன். ஆத்மாவுக்குப் பிறப்பாகிய அதுவே மேலான பிறப்பு] என்கிறபடியே தாய் தந்தையர் இருவரும்கூட,

துக்கு உத்பாதகரித்தனையிறே; ஆத்மாவுக்கு நன்மை பார்க்கும் ஆசார்யனுவாயும் நீ. (பேசில்) நீ செய்யுமவை பேசப்புகாதிறே. (எற்றேயோ) என்னே! (மாய) ஆஸ்சர்ய ஶக்தியுக்தனே! a செய்யப்போகாதவையுஞ் செய்யுமவனே! b (மாமாயவனை இத்யாதி) மஹானான மாயத்தையுடைய பூதனைமுடிய முலையை வாயிலே வைத்த. c (நீயம்மா காட்

---

குழந்தையின் சரீரத்தை உண்டாக்குகிறார்களேயொழிய ஆத்மாவிற்கு நன்மை செய்யவில்லையே. ஆத்மாவுக்கு நன்மையையே சிந்திக்கும் ஆசாரியனுயிருப்பவனும் எனக்கு நீயே. "மற்றையார்" என்று தாய் தந்தையரைக்காட்டிலும் மிகச் சிறந்த ஆசார்யர்களைக் குறிக்கிறது. (பேசில்) நீ செய்யும் நன்மைகளைப் பேசமுடியாதன்றோ: ஓரளவுக்குப்பேசப் புகுந்தால். (எற்றேயோ) என்ன ஆச்சர்யம்! என்றேசொல்ல வேண்டியிருக்கிறது. (மாய) ஆச்சர்யமான சக்தியை உடையவனே! பிறரால் செய்ய இயலாதவற்றையும் செய்ய வல்லவனே! என்று கருத்து. தகுதியற்றவன் என்று அகன்ற தன்னையும் சேர்த்துக் கொண்டதை நினைத்துச் சொல்லுகிறார். (மாமாயவனை மாய முலை வாய்வைத்த) பெரிய வஞ்சனையையுடைய பூதனையின் விஷம் தடவிய முலையை அவள் அழியும்படியாக வாயிலே வைத்த. 'மாயவள்' என்று தாய் போல் வேஷமிட்டுக்கொண்டு முடிக்க வந்த ஆச்சர்யமான வஞ்சனை உடையவள் என்று காட்டுகிறார். 'மாய' என்றது அவள் முடியும்படியாக என்றபடி. (நீயம்மா காட்டும்நெறி எற்

---

அரு:— ஐந்தாம் பாட்டு. a (செய்யப்போகாதவை) அயோக்யனென்ற என்னை அகலாதபடி பண்ணுகை. b, c (மாமாயவனை மாய முலைவாய்வைத்த அம்மா நீ காட்டும் நெறி எற்றேயோ) என்றந்வயம். 5

6. நெறிகாட்டி நீக்குதியோ, நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ, மேனு—ளறியோமை
என்செய்வா னெண்ணினாய் கண்ணனே, ஈதுரையாய்
என்செய்தா லென்படோம் யாம்.

பதவுரை:— கண்ணனே — க்ருஷ்ணனாய் அவதரித்த என் ஸ்வாமியே!, நெறி காட்டி — (வேறு) உபாயங்களைக் காண்பித்து, நின்பால் நீக்குதியோ — உன்னிடமிருந்து (என்னை) நீங்கச்செய்வாயோ? (நின்பால்) கரு மா முறி மேனி — கரியதாய் மாந்தளிர் போன்றதான உன்னுடைய திருமேனியை, காட்டுதியோ — காண்பிப்பாயோ? மேல் நாள் — அநாதிகாலமாக, அறியோமை — அறிவிலியா யிருக்கும் எம்மை, என் செய்வான் எண்ணினாய் — என்ன செய்ய எண்ணியிருக்கிறாய்? ஈது உரையாய் — ["மா ஶுச:" (வருந்தாதே) என்னும்] வார்த்தையை எங்களுக்குச் சொல்லுவாயாக. என் செய்தால்— நீ என்ன நன்மைகளைச் செய்தாலும், யாம் என்படோம்—(எங்கள் கையில் எங்களைக் காட்டித்தந்தால்) எந்தத் துன்பத்தைத்தான் விளைத்துக்கொள்ளமாட்டோம்.

---

டும் நெறி எற்றேயோ) அயோக்யனென்றகன்ற என்னுடைய விரோதத்தைத் தவிர்த்தபடி பூதனையால் வந்த இடரை நீக்கினாற்போலேயிறே.

---

றேயோ) தகுதியற்றவன் என்று அகல்வதன் மூலம் எனக்கு நானே செய்துகொண்ட விரோதத்தை நீ போக்கிய படியைப் பார்த்தால் பூதனையால் வந்த இடரைப் போக்கியதை ஒத்திருக்கிறதன்றோ! "அம்மா" என்று என்னை உடையவனாகையாலே நீ இதைச் செய்தாய் என்று உணர்த்துகிறது.

அவ:— ஆறும் பாட்டில்; (நெறி) "நம்பக்கலிலே ருசியைப் பிறப்பித்து அயோக்யனென்றகன்ற தம்மைச்சேர விட்டோமாகில் மேலுள்ள கார்யம் தாமே ப்ரவர்த்திக்கிறார்" என்று ஈச்வரனிருந்தானாகக்கொண்டு வெறுத்துச் சொல்லுகிறார்.

வ்யா:— (நெறிகாட்டி நீக்குதியோ நின்பால்) நெறி காட்டுகையென்றும் நீக்குகையென்றும் பர்யாயம். உ (15) "**मद्याजी मां नमस्कुरु**" (மத்₃யாஜீ மாம் நமஸ்குரு) என்ன, அர்ஜுநனுக்கு சோகவிஷயமாயிற்றிறே. நீ உன் கார்யத்தைச் செய்யென்பது விட நினைத்தாரையிறே.

---

6 அவ:— "நம்விஷயத்தில் இவ்வாழ்வாருக்கு ருசியை உண்டாக்கி, தகுதியற்றவன் என்று அகன்ற இவரை, சேரும்படி செய்துவிட்டோம். இனிமேல் இவர் தம்முடைய நன்மையைத் தாமே தேடிக்கொள்ளட்டும்" என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியதாக நினைத்து, "நீ இப்படித் திருவுள்ளம் பற்றினாயாகில் அடியேன் அழிந்து விடுவேன்" என்று வெறுத்து வார்த்தை சொல்லுகிறார்.

வ்யா:— (நெறிகாட்டி நீக்குதியோ நின்பால்) என் முயற்சியாகிற வேறு உபாயங்களை எனக்குக் காட்டி, நீ என்னை உன்னிடமிருந்து நீக்கிவிடுவாயோ? உடைமையான நான் என் நன்மைக்குப் பாடுபடவேண்டுமென்று மிகவும் பரதந்த்ரமான என் ஸ்வரூபங்களுக்கு பூரணான உபாயங்களைக் காட்டுவது என்னை நீக்குவதேயாகும் என்கிறார். 31-வது பக்கத்திலுள்ள 15-வது ப்ரமாணத்தின்படி அர்ஜுனனுக்கு பக்தியோக₃மாகிற உபாயத்தைக் கண்ணன் காட்டியவுடன் அவன் வருந்தினான் என்பதை அடுத்துள்ள சரமச்லோகத்தில் "மாசுச:" [வருந்தாதே] என்னும் பத₃ம் உணர்த்துகிறதன்றோ. "உன் காரியத்தை நீயே செய்துகொள்" என்று ஒருவனிடம் சொன்னால், அது அவனைக் கைவிடவேண்டும் என்னும் கருத்தினாலேயேசொல்லப்பட்டது என்பது தெளிவன்றோ.

(18) "एष पन्था विदर्भाणामेष याति हि कोसलान्" (ஏஷ பந்தா² வித₃ர்ப₄ாணாமேஷ யாதி ஹி கோஸலாந்) என்று தன்னுடனே கிடந்த த₃மயந்தியை உடுத்த புடவையிலே ஒரு தலையையறுத்து "வழியிது, இங்ஙனே போ" என்று விட்டாற் போலேயிறே தன்பக்கலிலே ந்யஸ்தப₄ரனான வனை "உன் ஹிதத்துக்கு நீயே கடவை" என்கை. b(நின் பால் கரு மா முறிமேனி காட்டுதியோ) என்றுமாம்.

---

18. ஏஷ பந்தா² வித₃ர்ப₄ாணும் ஏஷ யாதி ஹி கோஸலாந்
[ ]

[இது விதர்ப்பதேசத்துக்குச்செல்லும்வழி; இது கோஸலதேசத்திற்குச் செல்லும் வழி] என்கிறபடியே தன்னுடன் படுத்திருந்த தமயந்தியை விட்டு நீங்க வேண்டும் என்னும் கருத்தாலேயன்றோ அவளுடைய கணவனான நளன் வித₃ர்ப₄ தேசத்திற்கும் கோஸலதேசத்திற்கும் வழியைக்காட்டிவிட்டு இருவரும் உடுத்திருந்த வஸ்த்ரத்தை அறுத்துக்கொண்டு அவளை விட்டு விலகிச்சென்றான்: அதுபோலவே தன்னையே தஞ்சமாக அடைந்து, தன் பொறுப்புக்களை ஒப்படைத்த ஒருவனை "உன் நன்மையை நீயே பார்த்துக்கொள்ளவேண்டும்" என்று எம்பெருமான் கூறுவதும், அவனைத்தன்னை விட்டு விலக்குகையேயன்றோ. (நின்பால் கருமாமுறிமேனி காட்டுதியோ) அல்லது கரிய நிறமுடையதாய், மாந்தளிர்போன்றதான உன் திருமேனியை நீயே உனது நிர்ஹேதுக க்ருபையாலே எனக்குக் காட்டுவாயோ? "நின்பால்" என்னும் நடுவிலுள்ள பதமும் இரண்டு புறமும் சேர்ந்து பொருள் படுகிறது.

---

அரு:— ஆரும்பாட்டு. a உபாயாந்தரம் நீங்குகைக் குடலோ? என்ன அருளிச்செய்கிறார் (மத்யாஜீ மாம்) இத்யாதி,. a b "நின்பால்" என்றத்தைக் கீழே கூட்டுதல்.

(19) ''विवृणुते'' (விவ்ருணுதே) என்னுமாபோலே. c (கரு மாமுறிமேனி) d அஞ்சநத்திற்புழுதிபடைத்த புறவாயை நீக்கி முறித்த முறிபோலே திருமேனி நெய்த்திருக்கிறபடி. (மாமுறி) e மாந்தளிரென்று ஸௌகுமார்யத்தைச்சொல்லி அதிலே கறுப்பையுங்கூட்டி, ஶ்யாமமாய், ஸுகுமாரமான

---

19. நாயமாத்மா ப்ரவசநேந லப்₄யோ

ந மேத₄யா ந ப₃ஹுநா ஶ்ருதேந ।

யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய:

தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ॥

[கட 1—2—23]

[(இந்தப் பரமாத்மா) (ப₄க்தியற்ற) ஶ்ரவணத்தினாலும், மனனத்தினாலும், தியானத்தினாலும் அடையத்தக்கவனல்லன். எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ அவனாலேயே அடையத் தக்கவன். அவனுக்கு இப்பரமாத்மா தன் திருமேனியைக் காட்டுகிறான்.] என்கிறபடியே தனக்கு மிக இனியவர்கள் விஷயத்தில் எம்பெருமான் தன் திருமேனியை நிர்ஹேதுகமாகக் காட்டுவான் என்று உபநிஷத்தும் உரைத்ததன்றோ! (கருமாமுறிமேனி) 'முறி' என்று தளிரைக் குறிக்கும்; மாமுறி—மாந்தளிர். 'மாந்தளிர் போன்ற மேனி' என்று திருமேனியின் மென்மை காட்டப்படுகிறது. "கரு" என்று விஶேஷித்ததால் மாந்தளிரைக் காட்டிலும் திருமேனி கருமை நிறமுடையதாயிருக்கிறது என்று உணர்த்தப்படுகிறது. "கருமாமுறி" என்று அஞ்சனமாகிற மையின் புழுதி படிந்த மேல்பகுதியை நீக்கி முறித்த பின்பு காணப்படும் மையைக் குறிப்பதாகக்கொண்டு, அந்த மைபோலே திருமேனி நெய்த்திருக்கிறது (பளபளப்புடையதாயிருக்கிறது)

---

c, d, e ''மாமுறி'' - ஶ்லாக்₄யமான நீலரத்நமுறி என்னுதல்; மாமரத்தின் தளிரென்னுதல். f ''மேல்நாள்''-பழையதாய், அஸாத₄ாரணமான திருமேனி,

திருமேனியை நீயே காட்டி அநுப₄விப்புதியோ? f (மேனுள் கருமாமுறிமேனி காட்டுதியோ)என்றுமாம். (மேனுள் அறி யோமை என் செய்வானெண்ணினுய்)என்றுமாம். (மேனுளித் யாதி₃) பழையதாக அறியாதே போருகிற என்னை; ஒருத்தனுக்கு தி₃ங்மோஹம் பிறந்தால், வழியறியுமவன் "நீயே போ" என்னக்கடவதோ? வழிகாட்டிவிடக்கட வனே? (20) 'பதஃ ஸ்கலிதே'(பத₂ஸ்ஸ்க₂லிதம்) என்னும்படி

---

என்றும்பெரியவாச்சான்பிள்ளை பொருள்கொள்வர். 'சிறந்த நீல ரத்னத்தை முறித்த துண்டு போல் பிரகாசிக்கிறது திருமேனி' என்று அரும்பதவுரையில் பொருள் கொள்ளப்பட்டது. அடுத்துள்ள "மேனுள்" என்னும் பத₃த்தை முன்புறமும் பின்புறமும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். (மேனுள் கரு மாமுறிமேனி காட்டுதியோ) அனாதி₃காலமாக இருப்பதான உனது அப்ராக்ருதத் திருமேனியைக் காட்டுவாயோ? என்று பொருள்படுகிறது. (மேனுள் அறியோமை) "மேனுள் அறி யோமை" என்று வியாக்கியான பாடம். அனாதி₃காலமாக அறியாமையுடன் இருக்கிற என்னை என்று பொருள், (அறியோமை என் செய்வான் எண்ணினுய்) அனாதி₃கால மாக அறியாமையில் உழல்கின்ற எங்களை என்ன செய்ய நினைத்திருக்கிறுய்? ஒருவன் வழிதப்பித் திகைக்கும்போது வழியறிகின்றவன் "நீயோ போ" என்று சொல்லுவது நியாயமா? அவனுக்கு வழிகாட்டிவிடுவது நியாயமா?

20. அவிவேகக₄நாந்த₄தி₃ங்முகே₂
பஹுதா₄ ஸந்ததது₃:க்க₂வர்ஷிணி ।
ப₄க₂வந் ப₄வதுர்₃த்தி₃நே பத₂:
ஸ்க₂லிதம் மாமவலோகயாச்யுத ॥ [ஸ்தோ-ர 49]

யிறே என்னுடைய அவஸ்த்தை. (என்செய்வான் எண்ணி னாய்) (15) ''मन्मना भव' (மந்மநா பவ) என்னப்பார்த் தாயோ? (21) ''मामेकं शरणं व्रज'' (மாமேகம் ஶரணம் வ்ரஜ) என்னப்பார்த்தாயோ? g (கண்ணனேயீதுரையாய்) h (21) ' माशुचः'' (மாஶுச:) என்று சொல்லுகை பரமிறே. i (என்செய்தாலென்படோம்யாம்) j எல்லா உயர்த்தியையும்

---

[ஜ்ஞாநஶக்த்யாதி குணங்கள் நிறைந்தவனே! அடியவரைக் கைவிடாதவனே! விவேகமின்மையாகிற மேகங்களாலே இருளடைந்த திசைகளையுடையதும், பலவிதமாக இடைவிடாமல் துன்பங்களைப் பொழிகின்றதுமான ஸம்ஸாரமாகிற மழைகால இருளிலே நல்வழியிலிருந்து தவறிய அடியேனைக் கடாக்ஷித்தருள்வாயாக.] என்கிறபடியே ஸம்ஸாரமாகிற மழைகால இருளிலே வழிதவறித் திகைப்பவனன்றோ அடியேன். (என்செய்வான் எண்ணினாய்) 40 வது பக்கத்தில் உள்ள 15 வது ப்ரமாணத்தில் சொன்னபடி என்னை பக்தி யோகத்திலே மூட்டப்பார்த்தாயோ? அல்லது

21. ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி
மாஶுச: ॥ [கீதை 18-66]

[(மோக்ஷஸாதநமான) எல்லா தர்மங்களையும் வாஸனையுடன் விட்டு என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் உன்னை எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; வருந்

---

g. h ''மாஶுச:'' என்ற உனக்குச் சொல்லுகை பரமன்றோ என்றபடி. i. j. ''உரையாய்'' என்பானென், மயர்வற மதிநலம் முதலான நன்மைகளைப் பண்ணினோமே? என்ன அருளிச்செய்கிறார் (என்செய்தாலென்படோம் யாம்) என்று. நீ எல்லா நன்மைகளையும் செய்து பரமபதத்திலே வைத்தாலும் என்னை என் கையிலே காட்டித்தந்தால்

7. யாமே யருவினையோம் சேயோம், என்னெஞ்சினார்
தாமே யணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார், — பூமேய
செம்மாதை நின்மார்பில் சேர்வித்துப் பாவிடந்த
அம்மாநின் பாதத் தருகு.

---

செய்து பரமபதத்திலேகொடுபோய் வைத்தால், நீ தவிர்த்த ப்ராதிகூல்யத்திலே போய் நில்லேனோ என்னை என் கையிலே காட்டித்தந்தால்? 6.

---

தாதே.] என்று நீ சொன்னபடியே உன்னையே தஞ்சமாகக் காட்ட நினைத்தாயோ? (கண்ணனே ஈது உரையாய்) [சற்று முன்னே எடுத்த] சரம ச்லோகத்தை அருளிய கண்ணனாகிய உனக்கே "வருந்தாதே" என்று எனக்கும் அபயம் அளிப்பது பொறுப்பாகும். "மயர்வறமதிநலம் அருளியது முதலான பல நன்மைகளை உமக்குச் செய்திருக்கிறோமே." என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கூறுகிறார் — (என் செய்தால் என்படோம் யாம்) "எனக்கு அத்வேஷத்தை உண்டாக்கி, ஆநுகூல்யத்தை உண்டாக்கி, மயர்வறமதிநலமும் அருளினாய் என்பது உண்மையே. நீ இதற்கு மேலும் எத்தனை நன்மைகளையும் செய்து என்னைக்கொண்டு போய்ப் பரமபதத்திலே வைத்தாலும், என்னை என் வசத்திலே விட்டாயானால் நீ முதன் முதலில் எனக்கு உண்டாக்கிய அத்வேஷத்தையும் தொலைத்துவிட்டு உன்னை எதிரிடுமவனாகி, பழைய ஸம்ஸாரமண்டலத்திற்கே நான் மீண்டும் வந்து விடமாட்டேனோ?" என்கிறார். 6

---

அந்தப் பரமபதத்தையும் விட்டுப் பழைய ப்ரக்ருதியிலே வந்து நிற்பனென்று தாத்பர்யம். § மேல் வாக்யம் பிழை. 6,

---

§ இந்த அரும்பதத்துக்கு வ்யாக்யாநத்தில் இன்னும் சில வாக்யங்களுமுண்டு.

பதவுரை;— பூ மேய செம் மாதை—தாமரைப்பூவிலே பொருந்தியவளாய், செந்நிறத்தையுடைய பெரிய பிராட்டியை, நின் மார்பில் — உன்னுடைய திருமார்பில், சேர்வித்து — (அம்ருதமத,ந காலத்தில்) வஸிக்கச் செய்து, பார் இடந்த—(பிரளயகாலத்தில்) பூ,மியைக் குத்தி எடுத்த, அம்மா — எம்பிரானே!, நின் — ஸ்வாமியான உன்னுடைய, பாதத்து அருகு — திருவடிகளுக்கு ஸமீபத்தில், என் நெஞ்சினார் — என் மநஸ்ஸானது, தாமே — (என் அனுமதியில்லாமல்) தானாகவே, அணுக்கராய் — (எம்பெருமானுக்கு) அந்தரங்க,ராய், சார்ந்து ஒழிந்தார் — கிட்டி விட்டது; அருவினையோம் — கொடிய பாபத்தையுடைய, யாமே — நாமே, சேயோம் — வெகுதூரத்திலுள்ளோம்.

---

அவ:— ஏழாம் பாட்டில், (யாமே) உ அயோக்,யனென்றகன்ற தம்மைச் சேரவிட்டானென்று நின்றது கீழ்; சேரவிட்டாலும் பர்வதபரமாணுக்களுடைய சேர்த்தி போலேயிறே.

---

7 அவ:— தகுதியற்றவன் என்று எம்பெருமானைவிட்டு அகன்ற தம்மைச்சேரவிட்டதை ஐந்தாம்பாட்டில் தெரிவித்தார். ஆறும் பாட்டில் "கருமாமுறிமேனி காட்டுதியோ" என்று திருமேனியைக் காண ஆசைப்பட்டார். அந்த ஆசையை நிறைவேற்றும் முகமாக இவருடைய நெஞ்சுக்குத் தன் திருமேனியைக் காட்டினான். இந்த மானஸ ஸாக்ஷாத்காரத்தில் திருப்தியடையாமல் "கண்ணால் கண்டு இத்திருமேனியை அணைக்கப்பெறவில்லையே. காண ஆசைப்பட்டதற்கும் கிடைத்ததற்கும் மலைக்கும் அணுவுக்கும் உள்ள வேற்றுமை உள்ளதே! என்நெஞ்சம்பெற்ற அனுப,வம் எனக்குக் கிடைக்கவில்லையே" என்று வருந்துகிறார் இப்பாட்டில்.

---

அரு:— ஏழாம்பாட்டு. உ இதுக்கு, "பெற்றதாய்" (5) என்ற பாட்டோடே ஸங்க,தி.

வ்யா:— (யாமேயித்யாதி₂) b மஹாபாபியாயிருந்த நாம் தூரியோம். c ஸம்ஸாரிக்கு ப₄க₃வல்லாப₄மென்கிறதோர் c' அர்த்தமோ? (என் நெஞ்சினரித்யாதி₃) என்னுடைய நெஞ்சினர் பண்ணின உபகாரமிறே. d தன் ஸ்வரூபமறியாதே மேல்விழுந்து செய்வதொன்றிறே. (பூமேயவித்யாதி₃) அயோக்₃யரென்று பிற்காலிக்கைக்கும் மேல்விழுகைக்கும் ஹேது சொல்லுகிறது. (பூமேயசெம்மாதைநின்மார்பில் சேர்வித்து) என்ற லக்ஷ்மீபதித்வமும், (பாரிடந்த) என்ற அதி

---

வ்யா:— (யாமே அருவினையோம் சேயோம்) உன்னைக் கண்ணால் கண்டு அணைக்க இயலாதபடி மஹாபாபத்தைப் பண்ணின யான் உனக்கு வெகுதூரத்தில் இருக்கிறேன்; என்னைப்போன்ற ஸம்ஸாரிக்கு எம்பெருமானை அடைவது என்பது அவ்வளவு எளிதில் கிடைத்துவிடுமா? (என் நெஞ்சினர் தாமே அணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்) என் மனமானது என் அனுமதியில்லாமல் தானாகவே எம்பெருமானுக்கு மிக அருகில் சென்றுவிட்டது. அதனால் அடியேனும், ஆசைப்பட்டது கிடைக்காவிட்டாலும் நெஞ்சாலே அனுப₄விக்கும் பேறுபெற்றேன். என்னைப்போலே தகுதியற்றவன் என்று அகலாமல் முந்துற்ற என் நெஞ்சு மேல்விழுந்து அவனை அனுப₄விக்கப்பெற்று எனக்கும் மானஸஸாக்ஷாத்காரமாகிற உபகாரத்தைச் செய்தது. இப்படி உபகாரம் செய்ததாலே தம் நெஞ்சத்தை 'நெஞ்சினர்' என்று கௌரவம் தோற்றப் பேசுகிறார். இனி, பாட்டின் எஞ்சிய பகுதியாலே தாம் தகுதியற்றவர் என்று அகல்வதற்கும், நெஞ்சம் மேல் விழுவ

---

b, c இவனுக்கு ப₄க₃வத்₃ விஷயம் தூ₃ரமோவென்ன அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிக்கு) இத்யாதி₃. c₁ (அர்த்த₂மோ)-பொருளோ? அது கிடைக்குமோ என்றபடி. d தாம் தூ₂ரஸ்த₂ராகையால் நெஞ்சு கிட்டக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் — (தன் ஸ்வரூபம்) இத்யாதி₃.

மாநுஷசேஷ்டிதத்வமும், (அம்மா) என்ற ஸர்வேச்வரத்வமும் பிற்காலிக்கைக்கும் ஹேது; பெரியபிராட்டியார் திருமார்பிலேயிருக்க நமக்கு இழக்கவேணுமோ? என்றும், "பாரிடந்த" என்றத்தால் தளர்ந்தார்தாவளமென்றும், "அம்மா" என்று வகுத்தவனென்றும் மேல்விழுகைக்கும் இவைதானே ஹேதுக்கள். (அம்மா நின் பாதத்தருகு-என்னெஞ்சினார் தாமே அணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்) 7.

---

தற்கும் காரணத்தைக் கூறுகிறார்—(பூமேய செம்மாதை நின் மார்பில் சேர்வித்து) தாமரைப்பூவில் பொருந்தியவளாய், செந்நிறமும் செம்மைக்குணமும் உடையவளாய் உள்ள பெரியபிராட்டியை நின் திருமார்பில் அமுதங்கடைந்தபோது சேரும்படி செய்து; "அகலகில்லேன் இறையும்" [திருவாய் 6—10—10] என்று திருமார்பில் என்றும் இருக்கும்படி செய்து என்றும் பொருள் கொள்ளலாம். இங்கு லக்ஷ்மீபதியாய் இருப்பதைச் சொன்னதற்குக் கருத்து என்னவெனில்—'லக்ஷ்மீநாயகனுகிற மிகப்பெரியவனை மிகத்தாழ்ந்தவனான நான் அடைவது தகுமோ?' என்று நான் அகல்வதற்கும், "பெரியபிராட்டியார் திருமார்பிலே இருக்க, நாம் இழக்க வேண்டுமோ" என்று என் நெஞ்சம் அணுகுவதற்கும் காரணமாயிற்று என்று கருத்து. (பாரிடந்த) பிரளயகாலத்தில் பூமியைக்குத்தி எடுத்தவன் என்று வராஹாவதாரச் செயலைச் சொல்லுகிறது. "அதிமாநுஷமான இச்செயலைச் செய்தவனை நாம் அணுகுவது தகுமோ?" என்று நான் அகல்வதற்கும், "தாழ்ந்தவர்களைத் தூக்கியெடுப்பவனாக அவனிருக்க நாம் இழக்க வேண்டுமோ" என்று என் நெஞ்சம் அணுகுவதற்கும் இதுவும் காரணமாயிற்று என்று கருத்து. (அம்மா) ஸர்வேச்வரன் என்றும் வகுத்த ஸ்வாமி என்றும் பொருள்படும். 'ஸர்வேச்வரன்' என்று நான் அகல்வதற்கும், 'வகுத்தஸ்வாமி' என்று என் நெஞ்சம் அணுகுவதற்கும் இதுவும் காரணம் என்று கருத்து. "அம்மா நின் பாதத்தருகு—என் நெஞ்சினார் தாமே அணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார்.—யாமே அருவினையோம் சேயோம்" என்று அந்வயித்துக்கொள்ளவேண்டும். 7

8. அருகும் சுவடும் தெரிவுணரோம், அன்பே
பெருகு மிகவிதுவென் பேசீர் — பருகலாம்
பண்புடையீர் பாரளந்திர் பாவியேம்கண் காண்பரிய
நுண்புடையீர் நும்மை நுமக்கு.

பதவுரை:—பருகலாம் பண்பு உடையீர்—(திரவ பதார்த்தத்தைப்போல்)பானம்பண்ணத்தக்கவையான குணங்களை உடைய பிரானே! பார் அளந்தீர் — உலகையெல்லாம் அளந்தவரே! பாவியேம் — மிகுந்த பாவத்தையுடையவர்களான எங்களுடைய, கண் காண்பு அரிய — கண்களாலே பார்க்கவொண்ணாதபடியான, நுண்பு உடையீர் — ஸூக்ஷ்மத்தன்மையை உடையவரே! நும்மை — உம்மை, அருகும் சுவடும் — அணுகுவதையும், (அதற்கு) உபாயத்தையும், தெரிவு உணரோம் — ஆராய்ந்து அறியமாட்டோம்; நுமக்கு — உம் விஷயத்தில், அன்பு —(எங்களுக்குப்) பிரீதியானது, மிக பெருகும் — மிகவும் வளராநின்றது; இது என் —இதற்குக் காரணம் என்ன? பேசீர்—(நீரே) சொல்லுவீராக.

---

அவ:— எட்டாம் பாட்டில்; (அருகும்) ௧ நீர் கைக்கெட்டாதேயிருக்கச் செய்தே கைபுகுந்தாற்போலேயிராநின்றீர்; இதுக்கடி சொல்லீரென்கிறார்.

---

8. அவ:— "நீர் என்னாலே அணைக்கலாம்படி கைக்கெட்டாமலிருக்கும்போதே, நெஞ்சிலே காட்சியளிக்கையாலே கைபுகுந்தது போலும் இருக்கின்றீர். இதற்குக் காரணத்தைச் சொல்வீராக" என்கிறார்.

---

அரு:— எட்டாம் பாட்டு ௧ "அடையாளமுமறியோம்" என்கையாலே கைக்கெட்டாமையும், "அன்பேபெருகும்" என்கையாலே கைபுகுந்தமையுந்தோற்றுகிறது.

வ்யா:— b (அருகும் சுவடும் தெரிவுணரோம்) c பன்னீ ராண்டு கலந்த பிராட்டியைப்போலே உம்மோடே கலந்து உம்முடைய சுவடறிகிறிலோம். d நீர் வருகைக்குச் சுவடறி கிறிலோமென்றுமாம். (அன்பீத்யாதி) ஆகில் உமக்கு அன்பு மிகா நின்றது; இதுக்கடி சொல்லீர். (பருகலாம் பண் புடையீர்) "பருகலாம்" என்று ஒரு த்ரவத்ரவ்யத்தைச் சொல்லுமாபோலேசொன்னபடியென்! பருகலாம் நீர்மையை

---

வ்யா:—(அருகும் சுவடும் தெரிவுணரோம்) "உமக்கு அருகில் வரவும் முடியவில்லை. உம்முடைய இனிமையை யும் நன்கு அநுபவிக்க முடியவில்லை. உமக்கு அருகிலேயே இருந்து உமது இனிமையை முற்றும் அநுபவித்துப் பன்னிரண்டு ஆண்டுகள் அயோத்தியில் சேர்ந்திருந்த சீதா பிராட்டியைப்போலே உம்மோடு பூாஹ்ய ஸம்ஸ் லேஷத்தைப் பெற்று உம்முடைய இனிமையை அறியும் பேறு பெற்றோம் அல்லோம்" என்று கருத்து. அன்றிக்கே, "சுவடு" என்று உபாயமாய், 'உமக்கு அருகில் வருவதையும் அதற்கு உபாயத்தையும் அறிகின்றிலோம்' என்று கூறுகிறதாகவுமாம். (அன்பே பெருகும் மிக இது என் பேசீர்) ஆகிலும் உம் விஷயத்தில் அடியேனுக்கு அன்பு மிகவும் வளராநின்றது. இதற்குக் காரணத்தைச் சொல் வீராக. (பருகலாம் பண்புடையீர்) "தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுது மொத்தே" [திருவாய் 2—3—1] என்கிறபடியே, இனிமை மிக்க தேன் பால் நெய் முதலான திரவதிரவியங்கள் கலந்தாற்போலே இனிமை மிக்கிருக்கை யாலே "பருகலாம் பண்பு" என்கிறார். உமது இனிமையைப் பார்க்கும்போது வாயாலே பருகக்கூடிய சுவையுடைய திரவப்பொருள்போலே இருந்தீர். "பண்பு" என்பது சுவைப்

---

b. c. d அருகுஞ்சுவடும் கலந்து, அத்தால் வரும் அடையாளம் அறியோம் என்னுதல், கிட்டுகைக்கு அடையாளம் அறி யோம் என்னுதல்.

யுடையீர்! (பாரளந்தீர்) சொன்ன நீர்மைக்கு உதாஹரணம். (பாவியேம் கண்ணித்யாதி) பாவியோமாயிருந்த எங்கள் கண்ணாற்காணப்போகாத ɵ வைலக்ஷண்யத்தை யுடையீர்! (நும்மை—நுமக்கு)-[நும்மை-அருகும் சுவடும் தெரிவுணரோம் - நுமக்கு அன்பே பெருகும் மிக இதுவென்

பதற்கு எளிமையைக் கூறுகிறது. (பாரளந்தீர்) உலகனைத்தையும் மேல் விழுந்து அளப்பதன் மூலம் புறக்கூறிய பண்பை அனைவரும் அநுபவிக்கும்படி செய்தீர். இவ்விரண்டு விளிகளாலும் எம்பெருமான் தனக்கு மனத்தாலே அநுபவிக்கலாம்படி எளியனாய் இருந்தான் என்று கூறுவதன் மூலம் தமக்கு அன்பு மிகப் பெருகியதற்குக் காரணத்தைக் கூறுகிறார். (பாவியேம் கண் காண்பரிய நுண்புடையீர்) உம்மை நேரில் காணமுடியாதபடி பாபத்தைப் பண்ணின எங்களுடைய கண்ணால் காண இயலாதபடியான நுண்மையை உடையீர்! தாம் பெற்றது மானஸ ஸாக்ஷாத்காரமாகையாலே "கண்காண்பரிய நுண்புடையீர்" என்கிறார். இந்த விளியாலே "அருகும் சுவடும் தெரிவுணரோம்" என்றதற்குக் காரணத்தைக் கூறுகிறார். (நும்மை நுமக்கு) பாட்டின் முடிவில் "நும்மை நுமக்கு" என்றுள்ள பதங்களுக்கு எப்படி அந்வயம்? என்று நஞ்சீயர் பிள்ளை திருநறையூர் அரையரைக்கேட்டபோது, அவர் 'நும்மை அருகும் சுவடும் தெரிவுணரோம்; நுமக்கு அன்பே பெருகும் மிக; இது என் பேசீர்' என்று அந்வயித்துக் காட்டிப்பொருள் உரைத்தாராம். ஆசார்ய ஹ்ருதயம் நான்காம் ப்ரகரணத்தில் [பத்தாவது ஸூத்ரத்தில்] "அருகும் சுவடும் போலே" என்ற இடத்திற்கு வியாக்கியானமருளிச் செய்த மணவாள மாமுனிகள்—

ɵ "நுண்பு" நுண்மையாய் அத்தால் வைலக்ஷண்யம்.
§ இவையறிவனென்ற வாக்யம் தெரியாது, பிழையும். 8.

§ இந்த அரும்பதத்திலெடுத்த வாக்யம் வ்யாக்யான ஸ்ரீகோசங்களில் காணவில்லை.

9. நுமக்கடியோ மென்றென்று நொந்துரைத்தென்,மாலார்
தமக்கவர்தாம் சார்வரிய ரானல்,—எமக்கினி
யாதானு மாகிடுகாண் நெஞ்சே, அவர்திறத்தே
யாதானும் சிந்தித் திரு.

பதவுரை:— நெஞ்சே — மநஸ்ஸே!, அவர்தாம் — ஸர்வேശ்வரரான அவர்தாம், சார்வு அறியர் ஆனல் — கிட்டவொண்ணுதவரானல், "நுமக்கு அடியோம் — ஸ்வாமியான உமக்கு நாங்கள் தாஸபூதர்களன்றோ?" என்று என்று—என்று பலகாலும்,நொந்து-வருந்தி, மாலார் தமக்கு—மிகப்பெரியவரான அவருக்கு, உரைத்துஎன் — சொல்லி என்ன பயன்? எமக்கு — (அவன் உடைமையான) நமக்கு, இனி — இனிமேல், யாதானும் ஆகிடுகாண் — எதுவாகிலும் உண்டாகட்டும்: அவர் திறத்தே — அவர் விஷயத்தில், யாதானும் — எதாவதொன்றை, சிந்தித்து இரு — நினைத்திருப்பாயாக.

---

அவ:— ஒன்பதாம் பாட்டில்; (நுமக்கித்யாதி) ௧ பல் பன்னிரண்டுங் காட்டினலும் ப்ரயோஜநமில்லையென்கிறது.

---

9. அவ:—நேரே காணவேண்டும் என்னும் விருப்பம் நிறைவேருமையாலே தம் நெஞ்சை நோக்கி "நெஞ்சே!

---

பேசீர்.] இது ஜீயர் பிள்ளை திருநறையூரரையர் பக்கல்கேட்ட தாகப் பிள்ளையருளிச்செய்தார். 8.

---

"உம்முடைய அருகுவருதல் உம்முடைய சுவடறிதல் செய்யா திருக்க உம்மளவிலே ஸ்நேஹமானது அறமிக்குவாராநின்றது; இதுக்கு அடி அருளிச்செய்யவேணும்"என்று இப்பாசுரத்திற்குக் கருத்து அருளிச்செய்தது இங்கு அறியத்தக்கது. 8

வ்யா:— நுமக்கடியோமென்கிறதே போரும் அவன் இரங்குகைக்கு. b (என்றென்று) அதுக்குமேலே அத்தைப் பலகால் சொல்லுகையும் திருவுள்ளத்தைப் புண்படுத்து கைக்குடல். (நொந்துரைத்தென்) (22) "आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणागतः" (ஆர்த்தோ வா யதி₃ வா த்₃ருப்த: பரேஷாம் ஶரணாக₃த:) என்றதுவும் பொய்போலே. (மாலார்

---

நாம் பல்லைக்காட்டி அவரை யாசிப்பதனால் என்ன பயன்? அவர் காட்சியளிப்பவராகத் தெரியவில்லையே" என்று ஆசையற்றுக் கூறியவர், சிறிது ஆராய்ந்தவுடன் இது கொண்டு எம்பெருமானை விட்டு விலகிவிட முடியாதென்று உணர்ந்து, "அவன் அருள்புரிந்தாலும் வெறுத்துத்தள்ளினு லும் நீ அவன் விஷயத்திலேயே ஏதாவது நினைத்திரு' என்கிறார்.

வ்யா:—(நுமக்கடியோம் என்றென்று) "உமக்கு அடிமைப் பட்டவன் நான்" என்று ஒருமுறை சொல்லுவதே அவன் அருள்புரிவதற்குப் போதுமானது. இயல்வான உறவுடையவனு கையாலே. அப்படியிருக்க, அதைப் பலகால் சொல்லுவது அவன் திருவுள்ளத்தைப் புண்படுத்துவதற்கன்றோ காரணமாகும். (நொந்துரைத்து என்) அவனை நேரே காண வேண்டும் என்னும் த்வரையாலே இதைப் பலகால் சொல்லி யும் பயனற்றதாயிற்றே!

22. ஆர்த்தோ வா யதி₃ வா த்₃ருப்த:பரேஷாம் ஶரணாக₃த:।
அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா ॥
ரா-யு (18-28)

[எதிரிகளுள் ஶரணமடைந்த சத்துருவானவன், (வருத்தத் தாலே ஶரணமடைந்த) ஆர்த்தனாயினும், (அரைமனதாகச்

---

அரு:— ஒன்பதாம் பாட்டு. a b "என்றென்று" என் கிற மீமிசையால் (பல்பன்னிரண்டு) என்கிறது.

தமக்கு) ᴄ பண்டு இவையெல்லாஞ்செய்துவர்த்தித்தவருக்கு. (அவர்தாம் சார்வரியராகுல்) கையாளாய் வர்த்தித்தவர் தாம் கிட்டவரியராஞல். அவர் ''செய்வோம்'' என்று

சரணமடைந்த) த்ருப்தனுயினும், பண்பட்ட மனத்தையுடைய புருஷனுலே, தன் ப்ராணனை விட்டு ரக்ஷிக்கத்தக்கவன்.] என்று அவர் கூறியதும் பொய்யாயிற்றே! (மாலார் தமக்கு நொந்து உரைத்து என்) என்று கூட்டிப் பொருள் கொள்ளவேணும். மாலார்—மிகப்பெரியவர்; நம்மோடு கலந்த போது நம்மிடத்திலே அடியோம் என்பது, நொந்து உரைப் பது, பல்லைக்காட்டுவது ஆகிய செயல்களைச் செய்த மிகப் பெரியவரான அவருக்கு இப்போது அச்செயல்களையெல்லாம் நாம் செய்து பயனில்லை என்று கருத்து. (அவர் தாம் சார்வரியராஞல்) கலந்தபோது நமக்குக் கையாளாகப் பரதந்திரராய் இருந்தவர் இப்போது அணுக வொண்ணு தவர் ஆனுர். அவர் ''செய்வோம்'' என்று நினைத்தவன்றே, நேரே காணவேணும் என்னும் என் விருப்பம் பலிக்கும், நினை யாதபோது ''உமக்கு அடியோம்'' என்று எத்தனை நொந்துரைத் தாலும் பயனில்லை என்று பாட்டின் முற்பாதியின் பொருள்.

'அப்படியாஞல் அவரை விட்டு விலகிவிடலாமே' என்று நெஞ்சுக்குக் கருத்தாகக் கொண்டு பிற்பாதியை அருளிச் செய்கிருர். (எமக்கு இனி யாதானும் ஆகடு காண் நெஞ்சே) அவனை இந்த ஶரீரத்தோடு நேரே கண்டு அணைக்க வேண்டும் என்று ஆசைப்பட்ட எனக்கு அது கிடையாது என்று ஆனபின்பு, அவனை அடைவதும் ஒன்றுதான், இழப்பதும் ஒன்றுதான்; பசித்தபோது கிடைக்காத சோறு பிறகு கிடைப்பதால் என்ன பயன்? ''கொம்மை முலைகள் இடர்தீர கோவிந்தற்கு ஓர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?'' [நாச்-திரு 13—9] என்ற நாச்சியாரைப்போலே அருளிச்

ᴄ (பண்டிவையெல்லாம்), நம்மிடத்திலே, முன்பு அடியோ மென்பது, நொந்துரைப்பது, பல்காட்டுவதாய்ச்செய்து வர்த் தித்தவர்க்கென்றபடி.

நினைத்தவன்றுபோலே காணும் இங்குச் சொன்னவையெல்லாம் பலிப்பது, (எமக்கித்யாதி₃) d இனி நமக்குப் பேறிழவு இரண்டு மொக்கும், e பசித்தபோது கிடையாத சோறென் செய்ய? விஶ்லேஷத்தில் உஜ்ஜீவிப்போமாகிலன்றோ ஆறியிருக்கலாவது. (23) "ஈர்ஷ்யாரோஷௌ" (ஈர்ஷ்யாரோஷௌ) இத்யாதி₃. "அதிலே து₃ஷ்ட ஸத்வங்களும் ராக்ஷஸருமுண்டு: ஸுகுமாரரையாயிருக்கிற உன்னைக் கொடுபோக

செய்கிறார். "வருகிறபோது வருகிறான்" என்று ஆறியிருக்கக் கூடாதோ?" எனில்: அவனை அடையாதபோது உயிர் தரிக்கக் கூடியவர்களாயிருந்தால் ஆறியிருக்கலாம்; அவனைப்பிரியில் உயிர் தரிக்கமாட்டாத நாம் ஆறியிருக்கமுடியுமோ? என்று கருத்து.

23. ஈர்ஷ்யா ரோஷௌ ப₃ஹிஷ்க்ருத்ய
புக்தஶேஷமிவோத₃கம் |
நய மாம் வீர விஸ்ரப்₃த₄: பாபம் மயி ந வித்₃யதே ||
ரா-அ (27-8)

[வீரனே! அஸூயை, கோபம் இவ்விரண்டையும், குடித்து மிகுந்த ஜலத்தைப் போல் தள்ளிவிட்டு, (என் வார்த்தையை) நம்பி என்னை அழைத்துச்செல்வீராக. (உம்மைப் பிரிந்திருக்கைக்குக் காரணமான) பாபம் எனக்கு இல்லை.] என்று ஸீதாபிராட்டியும் பெருமானைப் பிரிந்து தன்னால் உயிர் வாழ இயலாது என்று கூறினாளன்றோ? [இனி இந்த ஶ்லோகம் வ்யாக்₂யாநம் செய்யப்படுகிறது.] "காட்டிலே கொடிய மிருகங்களும் அரக்கரும் உண்டு; மென்மைமிக்க உன்னை அழைத்துப்போக இயலாது" என்று ஸ்ரீராமபிரான் அருளிச்செய்ய, அன்பினால் விளைந்த கோபத்தினாலே

d. e இரண்டுமொக்குமென்பானென், இழவுக்கு நோவுபட வேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் — (பசித்தபோது இத்யாதி₃.)

வொண்ணாது'' என்று பெருமாளருளிச்செய்ய, ப்ரணய ரோஷத்தாலே பிராட்டி விண்ணப்பம் செய்கிறாள். உம்முடைய பின்னே போந்தேனென்று எனக்கொரு உயர்த்தியுண்டாங்காட்டில் உமக்கு இத்தனை பொருமையும் சீற்றமும் வேணுமோ? ''பிதாவினுடைய வசநத்தை அநுவர்த்தித்துக் காடேறப்போனார்'' என்று உமக்கொரு உயர்த்திதேடுகிறவோபாதி உம்முடைய பின் போந்தேனென்று எனக்கொரு உயர்த்தியுண்டாகலாகாதோ? அநுவர்த்த நீயரை அநுவர்த்திக்கலாவது உமக்கேயோ? அல்லாதார்க்கு ஆகாதோ? f(28) 'ईर्ष्यारोषौ बहिष्कृत्य भुक्त-शेषमिवोदकं' (ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தஶேஷமிவோதகம்) வஸிஷ்டஶிஷ்யராய் ஜ்ஞாநவான்களானால் த்யஜிக்கப்படுமவை த்யஜிக்கவேணுங்காணும்.

---

அவருக்கு பதிலுரைத்துப் பிராட்டி அருளிச்செய்த ஶ்லோகம் இது [''ஈர்ஷ்யா ரோஷௌ பஹிஷ்க்ருத்ய''— (பொருமையையும் கோபத்தையும் விட்டு)] ''ஸ்ரீராமன் காடு செல்லும் போது ஸீதையும் பின் சென்றாள்'' என்று எனக்கொரு பெருமை உண்டாகி விடும் என்னும் காரணத்தினால் உமக்கு இத்தனை பொருமையும் கோபமும் வேண்டுமோ? ''தகப்பனார் வார்த்தையை ஏற்றுக்கொண்டு ராமன் காடு சென்றான்'' என்று உமக்கு ஒரு சிறப்புண்டாவது போலே ''கணவனைப் பின் தொடர்ந்து ஸீதை காடு சென்றாள்'' என்று எனக்கு ஒரு பெருமை உண்டாகக் கூடாதோ? 'பெரியவர்களைப் பின் பற்றினார்' என்னும் பெருமை உமக்குத்தான் தகுமோ? எனக்குத் தகாதோ? (ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தஶேஷமிவோதகம்) 'நீர் வஸிஷ்டருடைய சிஷ்யர்-பெரிய அறிவாளி; அப்படியிருக்க, உண்டபின் பாத்திரத்தில் மிகுந்திருக்கும் நீரை விலக்குவதுபோலே பொருமையையும் கோபத்தையும் நீர் விலக்க வேண்டாமோ'' என்று கருத்து.

---

f அங்கீகரியாமல் வெறுத்த பேருண்டோ என்ன அருளிச்செய்கிறார் (ஈர்ஷ்யாரோஷௌ) இத்யாதி.

(23) "नय मां" (நய மாம்) அஸூயையும் கோபமும் போனால் பரஸம்ருத்₃தி₄யேயிறேயுள்ளது; ஆனபின்புஎன்னைக் கொடுபோகீர். (23) "वीर" (வீர) பரஸம்ருத்₃தி₄யுண்டானால் கொடுபோகாதொழிகைக்கடி வீர்யத்தில் கொத்தையிறே; அதிலில்லையிறே உமக்கு. (23) "विस्रब्धः" (விஸ்ரப்₃த₄:) உம்மை நீரறிவீர்; ¹ என்னை விஶ்வஸித்துக் கொடுபோம். (23) "पापं मयि न विद्यते" (பாபம் மயி ந வித்₃யதே) உம்மைப்பிரிந்துஜீவிக்கைக்கடியான பாபமெனக்கில்லைகாணும். பாபமாவது—க்லேஶஹேதுவிறே; உம்மைப் பிரிந்து க்லேஶப்படுமதில்லை

"நய மாம்" (என்னை அழைத்துச் செல்லும்)? பொறாமையும் கோபமும் நீங்கிவிட்டால் பிறர் நலனுக்குப் பாடுபடுவீர். ஆகையால் என்னை உடன் அழைத்துச் செல்வீராக. (வீர) பிறர்நலனைப் பொறுப்பவரானபின்பு உமது வீரியத்தில் குறையிருந்தால் என்னை அழைத்துச் செல்லத் தயங்கலாம். நீர் மஹாவீரராகையாலே அதற்கு இடமில்லை. "விஸ்ரப்₃த₄:" (என வார்த்தையில் நம்பிக்கைகொண்டு) காட்டிலும் என்னை ரக்ஷிக்க வல்லமை உமக்குஉண்டு என்பது உமக்கே தெரியும். நான் 'என்னை அழைத்துச் செல்லவேண்டும்' என்றுசொன்ன வார்த்தை ஒப்புக்குச் சொன்னதல்ல; மனப் பூர்வமாகச் சொல்லப்பட்டது. ஆகையால் என் வார்த்தையில் நம்பிக்கை வைத்து என்னை அழைத்துச் செல்வீராக. 'பல சிரமங்களைப் பொறுத்துக் கொண்டு காட்டிற்கு வருவதைக்காட்டிலும் சிரமமில்லாமல் நாட்டில் வாழலாமே" என்று பெருமாளுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறாள். — (பாபம் மயி ந வித்₃யதே) உம்மைப் பிரிந்து நான் உயிர்வாழமாட்டேனாகையாலே, உம்மைப் பிரிந்து துன்பமடைவது எனக்கு இல்லை. அதனால் அதற்குக் காரணமான பாபமும் எனக்கில்லை என்று கருத்து.

¹ (என்னை விஶ்வஸித்து)- நான் சொன்ன வார்த்தையை விஶ்வஸித்து.

காணும் எனக்கு. (அவர் திறத்தே யாதானும் சிந்தித்திரு) பேறும் இழவும் இரண்டு மொக்குமென்றிருக்கலாமோ? நம்முடைய ஸத்தைக்கு அவன் வேணுமேயென்ன, h ஸத்தைக்கு இதெல்லாம்வேண்டாகாண்; அவர் நம்மைவேண்டாவென்றத்தை நினைத்திருக்கவமையும். i நம்முடைய ஸத்தைக்கு அவர் ஸத்தையிறே காரணம். 9.

---

(அவர் திறத்தே யாதானும் சிந்தித்திரு) "அவனைப் பெற்றாலும் சரி; இழந்தாலும் சரி இரண்டும் ஒன்றுதான் என்று நினைக்கலாமோ? நம்முடைய ஸத்தைக்கே அவன் வேண்டுமே" என்று நெஞ்சம் கேட்க. "நமுடைய ஸத்தைக்கு அவனையடைய வேண்டுமென்பதில்லை; அவருடைய ஶரீரமாகவே நாம் இருக்கையால அவன் உளனானால் நாமும் உளராகவேயிருப்போம். இனி, போது போவதற்காக அவன் விஷயத்தில் எதையாவது நினைத்துக்கொண்டிரு" என்கிறார். "நீ எனக்கு வேண்டா" என்று அவன் சொன்னால், அதை நினைத்துக் கொண்டேயிருந்தாலும் நாம் வாழ்ச்சி பெற்றுவிடலாம் என்று கருத்து. "பாவிநீயென்று ஒன்று சொல்லாய் பாவியேன் காணவந்தே" [திருவாய் 4—1—3] என்று இவர் திருவாய்மொழியில் அருளியதும், "ஒரு ஞான்று மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி விடைதான் தருமேல் மிகநன்றே" [நாச்-திரு 13—9] என்று நாச்சியார் அருளியதும் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. 9.

---

h (ஸத்தைக்கிதெல்லாம்) நமஸ்காராதிகளெல்லாம். i வேண்டா என்றத்தை நினைக்கப் போருமோவென்ன அருளிச்செய்கிறார் (நம்முடைய ஸத்தைக்கு) இத்யாதி. [நெஞ்சே! அவர் தாம் சார்வரியரானால் மாலார் தமக்கு நுமக்கடியோமென்றென்று நொந்துரைத்தென் - இனியெமக்கு யாதானுமாகிடுகாண் - அவர் திறத்தேயாதானுஞ்சிந்தித்திரு] என்றந்வயம். 9.

10. இருநால்வ ரீரைந்தின் மேலொருவர், எட்டோ
டொருநால்வ ரோரிருவ ரல்லால், — திருமாற்கு
யாமார் வணக்கமா ரேபாவம் நன்னெஞ்சே
நாமா மிகவுடையோம் நாழ்.

பதவுரை:— நல் நெஞ்சே — நலமுடைய மனஸ்ஸே!, இருநால்வர் — அஷ்ட வஸுக்கள், ஈரைந்தின் மேல் ஒருவர் — பதினொரு ருத்ரர்கள், எட்டோடு ஒருநால்வர் — பன்னிரண்டு ஆதித்யர்கள், ஓரிருவர் — ஒப்பற்றவர்களான இரு அச்வினீ தேவதைகள், அல்லால் - ஆகிய இவர்களையொழிய, திருமாற்கு — லக்ஷ்மீநாதனை அடைவதற்கு, யாம் ஆர் — நாம் எவ்வகையில் சேர்ந்தவர், வணக்கம் ஆர் — (அல்ப சக்தியையுடைய நாம் செய்யும்) ஆச்ரயணம் எவ்வகையில் சேர்ந்தது? ஏ பாவம் — (நம்முடைய) பாவமிருந்தபடியென்? நாம் — நாமோ, மிக நாழ் உடையோம் — மிகுந்த வீறுசையையுடையவர்களாயிருக்கிறோம். ஆ — என்ன ஆச்சர்யம்!

---

அவ: — பத்தாம் பாட்டில் (இரு நால்வர்) இதுக்கு க மூன்றுபடியருளிச்செய்வர். b விலக்ஷணுதி,காரங்காண்; மதிப்பர்க்கே கிடைக்குமத்தனையல்லது எளியர்க்குக் கிடை

---

10 அவ:— இப்பாட்டுக்கு மூன்று விதமாக (நம்பிள்ளை) அவதாரிகை அருளிச்செய்வர். 'ஜ்ஞாநம் சக்தி முதலானவற்றால் சிறந்தவர்களான முப்பத்து மூவர் முதலான தேவர்கள் அடையக்கூடிய பேற்றை நான் அடைய நினைப்பது மிகத்தவறு' என்று தம்முடைய அயோக்யதையை அநுஸந்தித்து ஆழ்வார் மறுபடியும் அகலுகின்றார் என்பது ஓர் அவதாரிகை. "மற்ற பயன்களை விரும்பும் தேவர்களுக்குக் கிடைக்குமேயொழிய அவனையே விரும்பும் நமக்கு இப்பேறு கிடைக்காது" என்று நெஞ்சத்தோடு வெறுத்துச்

---

அரு:— பத்தாம் பாட்டு. க, b, ஆ, d (மூன்றுபடி) இரண்டு அயோக்யதாநுஸந்தாநம். மூன்றாவது வெறுப்பு.

யாதுகாண்: c தன்னையே ப்ரயோஜனமென்றிருப்பார்க்குக் கிடையாதுகாண்; d உபாயாந்தரபரிக்ரஹணம் பண்ணினார்க்குக் கிடைக்கும் அத்தனைகாண்; தன்னையே உபாயமாகப் பற்றினார்க்குக் கிடையாதுகாண் என்றுமாம்.

வ்யா:— (இருநால்வரித்யாதி) அஷ்டவஸுக்கள், ஏகாதஶ ருத்ரர்கள், த்வாதஶாதித்யர்கள், அஶ்விநிகள். (அல்லால்) இம்மதிப்பர்களையொழிய (திருமாற்கு யாமார் வணக்கமார்) ஶ்ரியஃபதிக்கு நாமார்? அங்கு பரிமாறுவார் ஆர்? நம்முடைய செயலேது? (ஏபாவம்) அவன்

---

சொல்வதாக இரண்டாவது அவதாரிகை. "மற்ற உபாயங்களைப் பற்றிய தேவர்களுக்குக் கிடைக்குமே யொழிய அவனையே உபாயமாகக் கொண்ட நமக்கு இப்பேறு கிடைக்காது" என்று நெஞ்சத்தோடு வெறுத்துச் சொல்வதாக மூன்றாவது அவதாரிகை.

வ்யா:—(இரு நால்வர் ஈரைந்தின் மேல் ஒருவர் எட்டோடு ஒரு நால்வர் ஓரிருவர்) எட்டு வஸுக்கள், பதினொரு உருத்திரர்கள், பன்னிரு ஆதித்யர்கள், அச்வினீ தேவர்கள் இருவர் ஆக முப்பத்து மூன்று தேவர்கள். "எண்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர்" [முதல் திருவ 52] என்று பொய்கையாழ்வாரும், "முப்பத்து மூவர்" [திருப்பாவை 20] என்று ஆண்டாளும் அருளியது இங்கு அநுஸந்திக்கத் தக்கது. "த்ரயஸ் த்ரிம்ஶத்வை தேவா:" என்று வேதமும் ஓதிற்று. (அல்லால்) ஜ்ஞாந ஶக்திகளாலே சிறப்புடைய இவர்களைத் தவிர. (திருமாற்கு யாமார் வணக்கமார்) லக்ஷ்மீநாதனை அடைவதற்கு நமக்குத் தகுதி உண்டோ? சிறந்தவர்களன்றோ அவனை அணுகமுடியும். நம்முடைய வணக்கம் முதலான செயல்கள் அவனுக்கு ஒரு பொருட்டோ? (ஏ பாவம்) அவன் அருகிலிருக்கும்போதும் இழக்க வேண்டி வந்ததற்குக் காரணம்

அருகேயிருக்க இழக்கவேண்டினது நம்முடைய பாபம். (நன்னெஞ்சே) லாபாலாபமிரண்டுக்கும் கூட்டான நெஞ்சே! (நாமா இத்யாதி) நாம் ஓ நறுவட்டாணித்தனத்தை மிகவுடையோம். ஸ்ரிய:பதியென்றால் நம் ஸ்வரூபத்தைப் பார்த்து அகலவிறேயடுப்பது; ஸ்வரூபத்தைப் பாராதே கிட்டிற்று நம் அளவில்லாமையிறே. 10

---

நம்முடைய பாபமே. 'அயோக்யன்' என்று அகன்றதால் இழக்க வேண்டி வந்தது என்று ஒரு நிர்வாஹம். நெஞ்சுக்குக் காட்சியளித்தபோது நேரே அநுபவிக்கமுடியாதபடி இழக்க வேண்டி வந்ததற்குக் காரணம் நம்முடைய பாபம் என்று மற்றொரு நிர்வாஹம். (நன்னெஞ்சே) நான் பெற்றாலும் இழந்தாலும் என்னோடு கூடியிருக்கும் நன்மையுடைய நெஞ்சே! (நாம் மிக நாழ் உடையோம்) "வளவேழுலகு" [திருவாய் 1—5] திருவாய்மொழியிற் போலே "அயோக்யன்" என்று அகல்வதாகக் கொண்டால், "குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமான நாம் லக்ஷ்மீநாதனான அவனை அணுகுவதற்குத் தகுதியுண்டோ? அகல்வதன்றோ தக்கது; நாம் தாழ்வைப் பாராமல் அவரை அணுகியது நம் அறிவின்மையாலன்றோ" என்றதாகிறது. நேரே காணமுடியாத வெறுப்பால் சொல்வதாகக் கொண்டால் 'மற்ற பயன்களை விரும்பி மற்ற உபாயங்களைப் பற்றியவர்களுக்கே காரியம் செய்யும் நியமத்தையுடைய எம்பெருமான் திருவுள்ளத்தாலே அநந்ய ப்ரயோஜனத்வமும், அநந்ய உபாயத்வமுமாகிற குற்றங்களை மிகவும் உடையவரன்றோ நாம்" என்றதாகிறது. "ஆ" என்னும் சொல் ஆச்சரியத்தைக் காட்டுகிறது. 10.

---

ஓ "நாழ்" நறுவட்டாணித்தனமாய், நிரர்த்தமான வசக் ஸாமர்த்யம். பலிதத்தையருளிச்செய்கிறார் (ஸ்ரிய:பதி) இத்யாதி. [நாமாகில் நாழ்மிகவுடையோம்; ஆகையாலே யாமார்வணக்கமார்] என்றந்வயம். 10

11. நாழா லமர்முயன்ற வல்லரக்க னின்னுயிரை
வாழா வகைவலிதல் நின்வலியே—ஆழாத
பாருநீ வானுநீ காலுநீ தீயுநீ
நீருநீ யாய்நின்ற நீ.

பதவுரை:— ஆழாத பாரும் நீ— (நீரிலே) அழுந்தாதே மிதக்கிற பூமியும் நீயே, வானும் நீ — ஆகாஶமும் நீயே; காலும் நீ—வாயுவும் நீயே; தீயும் நீ -நெருப்பும் நீயே; நீரும் நீ — ஜலமும் நீயே; ஆய் நின்ற நீ — (இவை யெல்லாவற்றுக்கும்) அந்தர்யாமியாய் நின்ற நீ, நாழால்- அபிமானத்தாலே, அமர் முயன்ற — உன்னுடன் சண்டை செய்த, வல் அரக்கன் — வலிமை பொருந்திய ராக்ஷஸ னாகிய ராவணனுடைய, இன் உயிரை—இனிய உயிரை, வாழா வகை வலிதல்—ஜீவிக்காதபடி ஹிம்ஸித்தது, நின் வலியே— (உனக்கு) ஒரு ஸாமர்த்யமாகுமா?

அவ:— பதினோராம் பாட்டில்; "அயோக்யன்" என்று அகன்ற நம்மை வென்று சேரவிட்டுக்கொள்ள, "என்னை வென்று சேரவிட்ட உனக்கு ராவணனை வென்றதுவு மொரு பணியோ?" என்கிறார்.

---

11. அவ:—"வளவேழுலகு' தலையெடுத்து 'அயோக்ய யன்" என்று அகன்ற இவரை அந்த நினைவைப்போக்கி மறு படியும் தன்னைப் பாடும்படி செய்த எம்பெருமானுடைய திறமையைக் கண்டு "என்னை வென்று உன்னோடு பொருந்த வைத்த உனக்கு ராவணனை வென்றதும் ஒரு திறமையோ?" என்கிறார். 'நேரே காண முடியாமையால் சென்ற பாட்டில் வெறுத்து வார்த்தை சொன்னார்' என்னும் நிர்வாஹத்தில் தான் ஜக்தாகாரனாய் நிற்கும் நிலையையும் ராக்ஷஸ நிரஸனம் செய்ததையும் தெளிவாகக் காட்டி இவருடைய வெறுப்பைப் போக்க, அவற்றிலே ஈடுபட்டுப் பேசுகிறார் என்று சொல்வது.

வ்யா:— (நாழாலித்யாதி₂) ராக்ஷஸ ராஜனென்கிற அபி₄மாநத்தாலே 'பெருமாளோடெதிரிடுவோமல்லோம்' என்னுதே, யுத்₃த₄த்திலே யத்நம் பண்ணி மிடுக்கனான ராவணன் பேணினவுயிரை வாழாவகை நினைக்கை உனக்கொரு மிடுக்கோ? அயோக்₃யனென்றகலுமவர்கள் பிராட்டியைப் பிரித்த ராவணனோடொப்பார்கள். (ஆழாதவித்யாதி₃) ஃவிருத்₃த₄மான விபூ₄திகளைச் சேரவிட்டு அநுப₄விக்கிற உனக்கு என்னைச் சேரவிடுகை ஒருபணியோ? விபூ₄தி ஸாமாந்யங்களுக்கு நிர்வாஹகனாய் அவற்றைச்

---

வ்யா:—(நாழால் அமர் முயன்ற வல்லரக்கன் இன்னுயிரை வாழாவகை வலிதல் நின் வலியே) அரக்கர்களுக்கு அரசன் என்கிற அஹங்காரத்தாலே 'ஸ்ரீராமனோடு எதிரிடுவது தகாது' என்று அறியாமல், அவனோடு போர் புரிந்த பலம் மிக்க ராட்சஸனான ராவணனுக்கு இனியதான அவன் உயிரை வாழ்வில்லாதபடி அழியச்செய்தது உனக்கு ஒரு திறமையோ? "அயோக்₃யன்" என்று அகன்ற என்னைப் பொருந்த விட்டுக் கொண்ட திறமையைக் காணும்போது ராவண ஸம்ஹாரம் அதற்கு இணையாகாது என்றபடி. இதிலிருந்து, நமக்குத் தகுதியில்லை என்று எம்பெருமானிடமிருந்து அகல்கின்றவர்கள் பிராட்டியைப் பிரித்த ராவணனோடு ஒத்தவர்கள் என்னும் கருத்து விளங்குகிறது. (ஆழாத பாரும் நீ வானும் நீ காலும் நீ தீயும் நீ நீரும் நீ ஆய்நின்ற நீ) நீரிலே கரையக் கூடிய மண், நெருப்பை அணைக்கக்கூடிய நீர் முதலான ஒன்றோடொன்று முரண்பட்ட உன் செல்வங்களான பஞ்ச பூ₄தங்களையும் ஒன்று சேர்த்து அவற்றுக்கு அந்தர்யாமியாயிருந்து அநுப₄விக்கிற உனக்கு என்னைப் பொருந்தவிட்டது ஒரு அருஞ்செயலோ? பார் வான்முதலான உன்னுடைய செல்வங்கள் அனைத்தையும்

---

அரு:— பதினோராம் பாட்டு. ஃ (விருத்₃த₄மான) அக்₃நிக்கும் ஜலத்துக்கும் சேராதாற்போலே பரஸ்பரவிருத்₃த₄

12. நீயன்றே யாழ்துயரில் வீழ்விப்பான் நின்றுழன்றாய்
போயொன்று சொல்லியென் போநெஞ்சே— நீயென்றும்
காழ்த்துபதே சந்தரினுங் கைக்கொள்ளாய் கண்ணன்
வாழ்த்துவதே கண்டாய் வழக்கு. [தாள்

பதவுரை:— நெஞ்சே— மனமே!, ஆழ் துயரில்— ஆழ்ந்த துன்பத்தில், வீழ்விப்பான் — (என்னைத்) தள்ளுவதற்காக, நின்று உழன்றாய் — நிரந்தரமாக முயற்சி செய்தது. நீ அன்றே — நீயேயல்லவா; போய் — மேலும் மேலும், ஒன்று சொல்லி—ஒரு வார்த்தையைச் சொல்வதனால், என்— என்ன பயன்? போ— இதை விட்டு விடு; உபதேசம் தரினும் (எம்பெருமானுடைய நீர்மையைப்பற்றி) நான் உபதேசித்தாலும், நீ—நீ. காழ்த்து— (என்மேல்) கோபங்கொண்டு, என்றும் கைக்கொள்ளாய்—(அவ்வுபதேசத்தை) ஒருபோதும் அங்கீகரிக்கிறாயல்லை; கண்ணன் தாள்—க்ருஷ்ணனுடைய திருவடிகளை, வாழ்த்துவதே—மங்களாசாஸநம் செய்வதே, வழக்கு கண்டாய் — நமக்குத் தகுந்ததுகிடாய்.

---

சொல்லுகிற ஶப்₃த₃ம் உன்னளவும் வரும்படி நிற்கிற உனக்கு உனக்கே அஸாத₄ாரணராய் உன்னையல்லது செல்லாதவர்களைச் சேரவிடுகை பணியோ? என்றுமாம். 11

---

அந்தர்யாமியாய் நின்று நியமிப்பவனாய் அவற்றைச் சொல்லும் சொற்கள் உன்னையும் குறிக்கும்படி நிற்கிறவனான உனக்கு, உனக்கே ஆட்பட்டவர்களாய் உன்னைப் பெருவிடில் த₄ரிக்கமாட்டாதவர்களான என்னைப்போன்றவர்களைப் பொருந்தவிட்டுக் கொண்டது ஒரு அருஞ்செயலோ? உன் ஶக்தியை நோக்குங்கால் ராவணனைக் கொன்றது எப்படி ஒரு அருஞ்செயலல்லவோ அப்படியே என்னைப் பொருந்தவிட்டதும் ஓர் அருஞ்செயல் அல்ல என்பதாகவும் பொருள் கொள்ளலாம். 11.

---

மான பஞ்சபூ₄தங்களையும் கொண்டு காரியங்கொள்ளுகிறவுனக்கு என்றபடி. 11

அவ:— பன்னிரண்டாம் பாட்டில்; (நீயன்றே) கிட்டின வாறே போன நாளைக்குக் கரைகிறார்.

வ்யா:— (நீயன்றே இத்யாதி) ஆழ்துயரென்றது அயோக்யர் என்றகன்ற க்லேஶமாகவுமாம்; விஷயபரா வண்யமாகவுமாம். a (போயித்யாதி) நெஞ்சு "நீரன்றோ ஆழ்துயரிலே விழும்படி பண்ணினீர்" என்று சொல்ல, "நீ ஒன்றைச் சொல்ல நானொன்றைச் சொல்லுகிற தென்? அத்தைப் b பொகடு" என்கிறார். c (நீயித்யாதி)

12. அவ:—எம்பெருமானை அணுகியவுடன் இழந்த நாளுக்கு வருத்தமுற்று, தம்மைத் தடுக்காதிருந்த நெஞ்சை வெறுக்கிறார்.

வ்யா:—(நீயன்றே ஆழ்துயரில் வீழ்விப்பான் நின்றுழன் றாய்) ஆழ்துயர் என்றது "அயோக்யன்" என்று அகன்றதால் உண்டான துன்பத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். அநாதிகாலமாக விஷயங்களில் மண்டியிருந்ததால் எம் பெருமானை இழந்ததைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். தாம் விஷயங்களில் மண்டியபோதும், "அயோக்யன்" என்று அகன்றபோதும் தம்மைத் தடுக்காமல் இருந்ததை யிட்டு இத்துன்பங்களுக்கு நெஞ்சத்தையே காரணமாக்குகிறார். அதற்கு மேல், " 'முந்துற்ற நெஞ்சே" [1] 'யாமே சேயோம் என் நெஞ்சினார் சார்ந்தொழிந்தார்' [7] 'நல் நெஞ்சே' [10] என்று என்னை இதுவரையில் கொண்டாடிவிட்டு இப்போது நீர் செய்த தவறுக்கு என்னைக் குற்றவாளியாக்குகிறீரே" என்று நெஞ்சம் கூற—(போய் ஒன்று சொல்லி என் போ நெஞ்சே) நான் ஆழ்துயரில் விழும்போது அதை நீ தடுக்கா

அரு:—பன்னிரண்டாம் பாட்டு. a, b "போய்"-மிகவும், "ஒன்று சொல்லியென்-போ"-பொகடு, சொல்லவேண்டா என்றபடி.

d ஸர்வேஶ்வரனுக்கு ஐஶ்வர்யமேயன்றுகாண் விஞ்சி யிருப்பது; நீர்மையும் விஞ்சியிருக்குங்காண் என்று நான் சொன்னாலும் $d_1$ அழன்று அத்தைக்கொள்ளாய். (கண்ண னித்யாதி$_3$) "ஆகில் இனிச்செய்வதென்?" என்று நெஞ்சு கேட்க, அவன் ஆபி$_4$முக்$_1$யம் பண்ணிநிற்க நாம் வைமுக்$_3$ யம் பண்ணலாகாதுகாண்; அவன் திருவடிகளுக்கு மங்க$_3$ ளாஶாஸநம் பண்ணுகை ந்யாயம். 12

---

மல் இருந்ததையிட்டுச் சொன்னேன். நாம் ஒருவரையொரு வர் குற்றஞ்சாட்டிக் கொள்வதால் என்ன பயன்? இந்த விவா தத்தை விட்டு விடு—என்கிறார். "போ" என்றது "விடு" என்று பொருள்படுகிறது. நெடுங்காலமாக நான் செய்த உபதேசங்களை நீ கைக்கொள்ளாமல் இருந்ததும் இந்நிலைக்கு ஒரு காரணம் என்கிறார் மேலே,— (உபதேசம் தரினும் நீ என்றும் காழ்த்துக் கைக்கொள்ளாய்) "ஸர்வேஶ்வரனுக்குப் பரத்துவமே மிகுதியானது என்று நினைக்காதே; எளிமையும் மிகுதியானது' என்று நான் எவ்வளவு உபதேசித்தாலும் என்னைச் சீறி நீ நெடுங்காலமாக என் உபதேசத்தை ஏற்கா மல் இருந்தாயன்றோ" என்கிறார். 'இப்போது செய்ய வேண்டியதைச் சொல்லும்' என்று நெஞ்சு சொல்லக்கூறுகிறார் —(கண்ணன் தாள் வாழ்த்துவதே வழக்கு கண்டாய்) "அவன் நம்மைக் கைக்கொள்ள ஸித்$_3$த$_4$மாயிருக்கும்போது நாம் விலகிநிற்கக்கூடாது காண்; எளிமை நீர்மை முதலான கு$_3$ணங்களையுடைய கண்ணனுடைய திருவடிகளுக்குப் பல்லாண்டு பாடுவதே உனக்குத்தக்கது" என்கிறார். 12.

---

c d உபதேசம் தரினும் என்றும் காழ்த்துக் கைக் கொள்ளாய். $d_2$ (அழன்று) சீறி. 12.

13. வழக்கொடு மாறுகொ ளன்றடியார் வேண்ட
இழக்கவுங் காண்டு மிறைவ — இழப்புண்டே
எம்மாட்கொண் டாகிலும் யான்வேண்ட வென்கண்கள்
தம்மாற்காட் டுன்மேனிச் சாய்.

பதவுரை:— இறைவ—ஸர்வேச்வரனே! ஒடு — (ஸம்ஸாரிகளுடன்) ஒட்டுவதும், வழக்கு அன்று — (உனக்குத்) தகுந்த தல்ல; மாறு கொள் வழக்கு அன்று — (அவர்களிடம்) ஒரு கைம்மாறு கொள்வதும் தகுந்ததல்ல; அடியார்வேண்ட- அடியார்கள் வேண்டிய போது, இழக்கவும் காண்டும்— (தன்னையும் தன்னுடைமையையும்) இழந்தும் (ஸ்வாமி) கார்யம் செய்வதைக் காண்கிறோம். இழப்பு உண்டே— (உன் அடியார்கள்) இழந்துபோகலாமா? ஆகிலும்—எங்களிடம் கைம்முதல் கொள்ளவேண்டுமேயாகிலும், யான் வேண்ட — நான் பிரார்த்திக்க, எம் ஆள் கொண்டு — (அந்த உக்தி மாத்ரத்தாலே) என்னை அடிமையாகக் கொண்டு, என் கண்கள் தம்மால் — என்னுடைய இந்த ஊனக்கண்களுக்கு, உன் மேனி சாய்—உன் திருமேனி அழகை, காட்டு — காண்பிப்பாய்.

---

அவ:— பதின்மூன்றும்பாட்டில்; (வழக்கொடு) a "அகலவொட்டாயாகில் கிட்டி அனுபவிக்கும்படி பண்ணு" என்கிறார்.

---

13. அவ:—பதினொராம் பாட்டில் "அயோக்யன்" என்று அகன்ற தம்மை எம்பெருமான் சேரவிட்டதைப் பேசினார். இப்பாட்டில் 'என்னை அகலவொட்டாயானால் அணுகி உன்னைக் கண்ணாலே கண்டு அநுபவிக்கும்படி செய்யவேண்டும்' என்று எம்பெருமானை வேண்டுகிறார்.

வ்யா: — b (வழக்கொடித்யாதி) c ஸம்ஸாரியினுடைய முன்னே நிற்கையும் வழக்கன்று; d ஸாதநாநுஷ்டாநம் பண்ணிறைரப்போலே உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் கொள்ளுகையும் வழக்கன்று: e ஆகில் நீர் சொல்லுகிற தென்னென்னில், f (அடியாரித்யாதி) g அடியாரானவர்

---

வ்யா:—(வழக்கொடு மாறுகொள் அன்று) "ஒடு வழக்கன்று" "மாறுகொள் வழக்கன்று" என்று கூட்டிப்பொருள் கொள்ள வேண்டும். "ஒடு" என்று ஸம்ஸாரிகளோடு ஒட்டுதலாகிற தொடர்பைச் சொல்லுகிறது. ஒருஸம்ஸாரி ஜீவனை அணுகி அவன் முன்னே நிற்பது உனக்குத் தகாததே. (மாறு கொள் வழக்கன்று) உதவிக்குப் பதிலுதவி கொள்வாரைப் போலே நீ அளிக்கும் பலனுக்கு ஒரு ஸாதநாநுஷ்டானத்தை ப்ரத்யுபகாரமாகக் கொள்வதும் உனக்குத் தகாததே. மாறு—கைம்மாறு; பிரதியுபகாரம். நீர் சொல்லுவதைச் சற்று விளங்கச் சொல்லும் என்று எம்பெருமான் திருவுள்ளமாக— (அடியார் வேண்ட இழக்கவும் காண்டும்) உலகத்தில் குணமுள்ள ஒரு தலைவனிடம் அவனடியார்கள் ஒன்றை வேண்டினால், தன்னையும் தன் உடைமையையும் இழந்தும் ஸ்வாமியானவன் அடியாருடைய விருப்பத்தை நிறைவேற்றுவதைக் காண்கிறோம். "நீர் அடியாராயிருந்தால் தானே எனக்கு அந்த நிர்ப்பந்தம்" என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கொண்டு

---

அரு: — பதின்மூன்றும்பாட்டு. a ஈச்வரனைப் பார்த்துச் சொல்லுகிறார் (அகலவொட்டாயாகில்) இத்யாதி. b, c, d "ஒடு வழக்கன்று மாறுகொள் வழக்கன்று" என்று கூட்டி அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரி) இத்யாதி வாக்யத்வயத்தாலே, ஒன்றுமறியாத ஸம்ஸாரிகள் முன்னே அவதரித்து நிற்கையும், "நீ ஒன்றைச்செய் நான் ஒன்றைத் தருகிறேன்" என்கையும் உனக்கு வழக்கன்று; ப்ரயோஜநமில்லை என்றபடி. e வழக்கேதென்று ஶங்காபிப்ராயம். f, g அடியார்க்கு அபேக்ஷாமாத்ரத்தாலே கார்யஞ் செய்கை

கள் வேண்ட ஸ்வாமி இழக்கக்கண்டோம். (இறைவ) நீர் அடியாராக வேணுமேயென்ன, என்பக்கலுள்ளது அழிந்ததா கிலும், உன்பக்கலுள்ளது அழியாதிறே; உன் ஸ்வாமித்வம் உண்டாக என் சேஷத்வம் தன்னடையே கிடவாதோ? (இழப்புண்டே) b நாட்டடியார்க்கு இழப்புண்டாகிலும் உன்னடியார்க்கு இழப்புண்டோ? (எம்மாட்கொண்டித்யாதி₃) இழப்பின்றிக்கேயொழியும்போது உமக்கு அடிமையிலே சிறிது அந்வயம்வேணுமேயென்ன, என்னுடைய உக்திமாத் ரத்தையே பரிபூர்ணகைங்கர்யமாகக் கொண்டு செய்ய

---

அழைக்கிறுர்—(இறைவ) நான் அடியனுயில்லாவிடினும் நீ ஸ்வாமி என்பதை எவராலும் அழிக்கமுடியாதே! நீ ஸ்வாமி என்பது உறுதியாயிருக்கும் போது நான் அடியவன் என் பதும் தன்னடையே தேருதோ? (இழப்புண்டே) உலகில் மற்றவர்களுக்கு அடியராயிருப்பவர்கள் விரும்பிய பலனைப் பெறுமல் போவது உண்டாயினும், உன் அடியவர்களுக்கு அத்தகைய இழப்பு உண்டோ? நீர் விரும்பியது இழக்காமல் கிடைக்க வேண்டுமானுல் உமக்கும் அடிமையிலே சிறிது தொடர்பு வேண்டுமே என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கொண்டு கூறுகிறுர் — (எம்மாட்கொண்டாகிலும யான் வேண்ட) 'ஆகிலும் யான் வேண்ட எம் ஆட்கொண்டு' என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். 'எனக்கும் சிறிது வேண்டும்' என்றுலும் நான் பிரார்த்திக்க அந்த என்னுடைய வார்த்தையையே பரிபூர்ண கைங்கர்யமாகக் கொண்டு என் விருப்பத்தை நிறைவேற்றவேண்டும். 'உமக்கு நிறைவேற்ற வேண்டிய விருப்பம் யாது?' என்று எம்பெருமான் திருவுள்ள

---

வழக்கென்று உத்தரம்; அது காணும் — (அடியாரானவ கள்) இத்யாதி₃. b (நாட்டடியார்)-இதரஶேஷபூ₄தர்.

கள் வேண்ட ஸ்வாமி இழக்கக்கண்டோம். (இறைவ) நீர் அடியாராக வேணுமேயென்ன, என்பக்கலுள்ளது அழிந்ததாகிலும், உன்பக்கலுள்ளது அழியாதிறே; உன் ஸ்வாமித்வம் உண்டாக என் சேஷத்வம் தன்னடையே கிடவாதோ? (இழப்புண்டே) b நாட்டடியார்க்கு இழப்புண்டாகிலும் உன்னடியார்க்கு இழப்புண்டோ? (எம்மாட்கொண்டித்யாதி₃) இழப்பின்றிக்கேயொழியும்போது உமக்கு அடிமையிலே சிறிது அந்வயம்வேணுமேயென்ன, என்னுடைய உக்திமாத்ரத்தையே பரிபூர்ணகைங்கர்யமாகக் கொண்டு செய்ய

---

அழைக்கிறார்—(இறைவ) நான் அடியனுயில்லாவிடினும் நீ ஸ்வாமி என்பதை எவராலும் அழிக்கமுடியாதே! நீ ஸ்வாமி என்பது உறுதியாயிருக்கும் போது நான் அடியவன் என்பதும் தன்னடையே தேருதோ? (இழப்புண்டே) உலகில் மற்றவர்களுக்கு அடியராயிருப்பவர்கள் விரும்பிய பலனைப் பெருமல் போவது உண்டாயினும், உன் அடியவர்களுக்கு அத்தகைய இழப்பு உண்டோ? நீர் விரும்பியது இழக்காமல் கிடைக்க வேண்டுமாஞல் உமக்கும் அடிமையிலே சிறிது தொடர்பு வேண்டுமே என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கொண்டு கூறுகிறார் — (எம்மாட்கொண்டாகிலும யான் வேண்ட) 'ஆகிலும் யான் வேண்ட எம் ஆட்கொண்டு' என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். 'எனக்கும் சிறிது வேண்டும்' என்றாலும் நான் பிரார்த்திக்க அந்த என்னுடைய வார்த்தையையே பரிபூர்ண கைங்கர்யமாகக் கொண்டு என் விருப்பத்தை நிறைவேற்றவேண்டும். 'உமக்கு நிறைவேற்ற வேண்டிய விருப்பம் யாது?' என்று எம்பெருமான் திருவுள்ள

---

வழக்கென்று உத்தரம்; அது காணும் — (அடியாரானவர்கள்) இத்யாதி₃. b (நாட்டடியார்)-இதரசேஷபூ₄தர்.

வேணும். ‡(என் கண்கள் தம்மாற் காட்டுன் மேனிச்சாய்) செய்யவேண்டுவதென்னென்ன, ஒருத்தன் பட்டினிவிட ஒருத்தன் உண்டால் பசிகெடாதிறே. 24. “शोकाभि-कर्शितैः” (கூாத்ரைஶ்ஶோகாபி₄ கர்ஶிதை:) என்னும்படியே தே₃ஹாந்தரே தே₃ஶாந்தரே காணவொண்ணாது; விடாய்த்த கண்களாலே காணவேணும். 13.

---

மாக, கூறுகிறார் (என் கண்கள் தம்மாற் காட்டு உன் மேனிச் சாய்) என்னுடைய இந்தக் கண்களாலே உன் திருமேனி யழகைக் காணும்படி செய்வாயாக. 'பரமபத₃த்தில் சென்ற பின் காண்பிக்கிறேன்' என்று சொல்லுவது போதாது. என்னுடைய இந்தக் கண்கள் இங்கு உன்னைக் காணவேண்டும் என்று ஆசைப்படும்போது வேறொரு தேசத்தில் வேறொரு தேஹமெடுத்துக் காண்பதால் என்ன பயன்? ஒருவன் பட்டினியிருக்கும் போது மற்றொருவன் உண்பதால் பசி ஆறி விடுமோ?

24. யதா₂ தம் புருஷவ்யாக்₄ரம் கூாத்ரை: ஶோகாபி₄கர்ஶிதை:|
ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா₂ குரு த₃யாம் மயி ||
ரா-ஸு- (40-3)

[(ராமபிரானிடம்) பேரன்பு மிகுந்த யான். புருஷஶ்ரேஷ்ட₂ரான அவரை துக்கத்தால் இளைத்த இந்த என் அவயவங்களாலேயே தொடத்தக்கவளாகும்படி என்னிடத்தில் நீ கருணை புரிவாயாக.] என்று ஸீதாப் பிராட்டியும் வேறொரு தேசத்தில் வேறொரு தேஹத்திலல்லாமல், அந்த தேஹத்தோடு அந்த தேசத்திலேயே எம்பெருமானை அடைய வேண்டுமென்று ஆசைப்பட்டாளன்றோ. “கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந் தானென்'. [நாச்திரு 13—9] என்கிற நாச்சியாரைப்போலே ஆசைப்பட்ட இக்கண்களாலே காணவேண்டும் என்கிறார். 13.

---

‡ உன்மேனிச்சாயை-நிறத்தை, யான்வேண்ட, என் கண்கள் தம்மால் காட்டு-கண்கள் தனக்குக் காட்டு என்றபடி. 13

14. சாயால் கரியானை யுள்ளறியா ராய்நெஞ்சே
பேயார் முலைகொடுத்தார் பேயராய்—நீ யார்போய்த்
தேம்பூண் சுவைத்தூ னறிந்தறிந்தும் தீவினையாம்
பாம்பார்வாய் கைநீட்டல் பார்த்தி.

பதவுரை:—நெஞ்சே — மனஸ்ஸே!, சாயால் கரியானை— நிறத்தால் கரியவனான க்ருஷ்ணனை, உள் அறியாராய் — உள் புகுந்து அநுப,விக்க அறியாதவளாய், பேயார்— பேயாகிய பூதனை, பேயராய் முலைகொடுத்தார்— பேயாயிருக்கையாலே (விஷங்கலந்த) முலையைக் கொடுத்தாள்; போய்—பல தடவை சென்று, தேம்பு ஊண் சுவைத்து — ஆத்மாவைத்தேயச்செய்யும்ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைப்புசித்து, ஊன் அறிந்து அறிந்தும் — அதனுடைய பலனை அறிந்து வைத்தும், தீவினையாம் பாம்பார் வாய் — கெடுதியை விளை விக்கக்கூடிய (ஸம்ஸாரமாகிற) பாம்பின் வாயிலே, கை நீட்டல் பார்த்தி—கை நீட்டப்பார்க்கிறாய், நீ யார் — (பூதனைக்கு ஒப்பிடும்போது) நீ எவ்வளவு தாழ்ந்தவன்?

---

அவ:—பதினலாம் பாட்டில்; (சாயால்) காட்டவேணு மென்றார் கீழ்: ஆரை என்கண்களாலே காண்கிறது? என்று அகன்று, திரியட்டும் தம்முடைய அயோக்₃யதையைச் சொ லுகிறார். பூதனை கிட்டினவோபாதியிறே நான் கிட்டுகை என்கிறார்,

---

*14. அவ:—சென்றபாட்டில் "உன் திருமேனியைக்காட்ட வேண்டும்" என்றார். திருமேனியின் சிறப்பைச் சிந்தித்தவுடன் "அத்தகைய திருமேனியை என் கண்களாலே நான் காண்பது எவ்வளவு பெரிய தகாத காரியம்" என்று மறுபடியும் தம் முடைய தகுதியின்மையைச் சொல்லி அகல்கின்றார். 'பூதனை எம்பெருமானை அணுகியது போலன்றோ நான் அணுகு வது' என்கிறார்.*

வ்யா:-(சாயால்கரியானை) நிறத்தால் கரியனாயுள்ளவனை. (உள்ளறியாராய்) a ஆழவநுபவிக்க அறியாராய்; ஸர்வேஶ்வரனென்று உள்ளபடி அறியாராயென்றுமாம். (நெஞ்சே யித்யாதி) பூதனை மனிச்சியாய் வஞ்சித்தாளன்றே; பேயாகையாலே வஞ்சித்தாளத்தனையிறே; b உன்னைப்பார்த்தால் பூதனை நித்யஸூரிகளோடொக்குமிறே; c (தேம்பூண்சுவைத் தித்யாதி) ஆத்மாதேயும்படிக்கீடாக ஶப்தாதிகளைபுஜித்து அதினுடைய விபாகத்தை அறிந்தறிந்து, அநர்த்தத்தைப் || படிக்கக் கடவதாயிருககிற பாம்பின் வாயிலே கைநீட்டு வாரைப்போலேயிருக்கிற நீ பூதனைக்கு ஆர்? உனக்கணிியளோ பூதனை? d அயோக்யனென்றகலுகிற பக்ஷத்தில் ஈச்வரனுக்கு அவத்யம் பிறக்கைக்கீடாக அணைந்து "உன் அணைவு பொல்லாது" என்னுமிடத்தை அறிந்தறிந்தும் கிட்டுகிறாயன்றோ? என்றுமாம். 14

---

வ்யா:—(சாயல் கரியானை) சாயல் எனப்படும் நிறத்தாலே கரியவனாய் இருப்பவனை. (உள் அறியாராய்) உட்புகுந்து—ஆழ்ந்து அநுபவிக்க அறியாதவராய்; பரமாத்மா அழுது பால் குடிக்கும் பிள்ளையாய் வந்து அவதரித்திருப்பதைக்கண்டு அந்த நீர்மையிலே ஈடுபட அறியாதவராய்; ஸர்வேஶ்வரன் என்று உள்ளபடி அறியாதவராய் என்றும் பொருள் கொள்ளலாம். (நெஞ்சே பேயார் முலை கொடுத்தார் பேயராய்) நெஞ்சே! பூதனை மனிதப் பிறவியாய் இருந்து வஞ்சனை செய்யவில்லை. பேய்ப் பிறவியாகையாலேயன்றோ வஞ்சித்தாள். (நீ யார்) அவளுடன் ஒப்பிடும்போது நீ எவ்வளவு தாழ்ந்த வஸ்து! ஶாஸ்த்ரங்களுக்கு வசப்படவேண்டிய பிறவியைஎடுத்து பகவத்விஷயத்தைக்கிட்டிக் கெடுக்கும் உன்னைப்பார்த்தால் பூதனையை நித்ய ஸூரிகள் வகுப்பில் சேர்க்கவேண்டுமன்றோ!

---

|| பலிப்பிக்க என்றுவது அநர்த்தபதம் ப்ரதமாந்தமாயிருப்பது பாடமிருக்கலாம்.

(தேம்பூண் சுவைத்து ஊனறிந்து அறிந்தும் தீவினை யாம் பாம்பார் வாய் கை நீட்டல பார்த்தி) ஆத்மாவைத்தேயும் படி செய்யும் ஶப்₃த₃ ஸ்ர்ஶ ரூபரஸ க₃ந்த₄ங்களாகிற விஷயங்களை அனுப₄வித்து அதனால் ஏற்படும் தாழ்வைப் பலகால் அறிந்தும் ஆத்மநாசத்தை விளைக்கக்கூடிய பாம்பு போன்ற அந்த ஶப்₃த₃ாதி₃விஷயங்களின் வாயிலேயே கைநீட்டுவாரைப் போலே இருக்கும் நீ பூதனைக்கு என்ன உறவு? இப்படிப் பொருள் கொள்ளும்போது "நீ யார்" என்றது உனக்குப் பூதனை உறவினளோ? என்றபடி. "போய்" என்னும் பதம் 'சுவைத்து' என்பதோடோ, "கை நீட்டல் பார்த்தி" என்பதோடோ கூட்டிப் பொருள் கொள்ளத்தக்கது. "விஷயங்களைப் பலமுறை அனுபவித்து அதன் ப₂லன் ஆத்ம நாசமே என்பதைப் பலகால் அறிந்திருந்தும் மறுபடியும் மறுபடியும் அந்தப் பாம்பின் வாயிலேயே கை நீட்டுகிறாயே!" என்று

---

அரு:— பதினாலாம்பாட்டு. a (ஆழ அநுப₄விக்க) பிள்ளைத் தனத்தைக்கண்டு ஈடுபடாமல் வஞ்சித்தானென்னுதல். * b ஶாஸ்த்ரவஶ்யமான உன்னைப்பார்த்தால்; அறிவுகெட்டு, ஈஶ்வரனை அழித்தாளவள். நீ ஶாஸ்த்ர வஶ்யமாயிருக்கச் செய்தேயும் விஷயங்களிலே ஆத்மாவை மூட்டி நசிப்பிக்கை யாலே உனக்கு ஸமனன்று என்றபடி. c. d அன்றியே, "தேம் பூண்" ஈச்வரனுக்கு அவத்₃யம் வரும்படி. "சுவைத்து" அவனை அணைந்தென்று ஈச்வரபரமாகவுமாம்; அப்போது தீவினையாமென்றறிந்தறிந்து- பொல்லாதென்றறிந்திருக்கச் செய்தேயும், பாம்பின் வாயிலே கைநீட்டுமாபோலே, நாம் அவனைக் கிட்டுகை அவத்₃யமென்றறிந்திருக்கச்செய்தேயும் கிட்டுகிற உனக்குப் பூதனை ஸமனோ? என்றபடி. [நெஞ்சே போய் என்று தொடங்கி, நீட்டல்பார்த்தி, அவளுக்கு நீ யார்] என்று அந்வயம். 14

---

* இங்கு மற்றொரு பக்ஷத்துக்கும் உபபாத₃கமான பங்க்தி இருக்க வேண்டும்.

15. பார்த்தோ ரெதிரிதா நெஞ்சே படுதுயரம்
பேர்த்தோதப் பீட ழிவாம் பேச்சில்லை — ஆர்த்தோதம்
தம்மேனி(த்)தாள் தடவத் தாங்கிடந்து தம்முடைய
செம்மேனிக் கண்வளர்வார் சீர்.

பதவுரை:— நெஞ்சே — (அயோக்₃யன் என்று அகலும்) மனமே! ஓதம் — கடலானது. ஆர்த்து — சப்தித்துக் கொண்டு, தம் மேனி தாள் தடவ — தம்முடைய திருமேனியையும் திருவடியையும் தடவும்படியாக, தாம் கிடந்து — தாம் சயனித்துக்கொண்டு, தம்முடைய செம்மேனி கண் வளர்வார் — தம்முடைய சிவந்த நிறத்தையுடைய திருக்கண்களை மூடிக்கொண்டு யோக₃நித்₃ரை செய்கிறவருடைய, சீர் — கல்யாணகு₃ணங்களை, படுதுயரம் பேர்த்து — நாம் படுகிற துன்பங்களை நினையாமல், ஓத — அநுஸந்தித்தால், பீடு அழிவாம் பேச்சு இல்லை — அப்பெருமானுடைய பெருமை அழிந்துவிடும் என்னும் வார்த்தை சரியல்ல; எதிரிதா — முதன் முதலில், பார்த்து ஓர்—(இதை) அறிந்து ஆராய்வாயாக.

---

கருத்து, "தேய்பூண்" என்று ஆத்மாவைத் தேயச்செய்யும் உணவாகிற விஷயங்களைக் குறிக்கிறது. இப்படியல்லாமல், 'தேய்பூண்..." என்றது பகவத் விஷயத்திற்குக் கெட்டபெயரை உண்டாக்கும்படி தகுதியின்மையை உடைய நெஞ்சம் அதை அநுப₄விப்பதைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். "இப்படி பகவசநுபவத்தைப் பலகால் செய்து அதனுடைய பலன் பகவத் விஷயத்திற்குக் கெட்ட பெயர் வருவதே" என்பதைப் பலகால் அறிந்திருந்தும் நீ மறுபடியும் மறுபடியும் பாம்பின் வாயில் கை நீட்டுவதைப்போலே பகவத் விஷயத்தையே கிட்டுகிறாயன்றோ என்று கூறுவதாகவும் கொள்ளலாம். இரண்டு பொருளிலும் நீ பூதனையை விட மிகத் தாழ்ந்த வஸ்து என்றதாகிறது. "பேயார்" "பாம்பார்" என்ற "ஆர்" விகுதி கொடுமையின் க₄னத்தைக் காட்டுகிறது. "கை விடல்' என்னும் பாடம் வெண்டளைக்குச் சேரும் என்பர். 14.

அவ:— பதினைந்தாம் பாட்டில்; (பார்த்தோர்) உன்னுடைய பூர்வ வ்ருத்தத்தை நினைத்தால் அகலவேணும்; அவனுடைய பூர்வ வ்ருத்தத்தை ஸ்மரித்தால் கிட்டலாம் என்கிறது.

வ்யா:— a (பார்த்தித்யாதி₃) அணுகி எதிரிதாப் பார்த்து ஓர்-முன்னிட்டுப் பார்த்து விசாரி. b (ஆர்த்தோதம் இத்யாதி₂) கடலானது ஆர்த்துக்கொண்டு தம்முடைய சிவந்த திருவடிகளை வருட, அவஸரப்ரதீக்ஷனாய்க் கண் வளருகிறவருடைய கு₃ணங்களை; c (படுதுயரமித்யாதி₃)

---

15. அவ:—நெஞ்சத்தின் தாழ்வை நினைத்து அகன்றூர் சென்ற பாட்டில். "உன்னுடைய தாழ்ந்த செயல்களை நினைத்தால் அகல வேண்டியதே. ஆனால் அவன் செய்யும் செயல்களை நினைத்தால் நீ அவனை அணுகலாம்" என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (நெஞ்சே எதிரிதா பார்த்து ஓர்) நெஞ்சே! நேருக்கு நேர் கண்டு இதை முதன் முதலில் ஆராய்வாயாக. எதை ஆராய்வது? எனில் (ஆர்த்து ஓதம் தம் மேனி தாள் தடவ தாம் கிடந்து தம்முடைய செம்மேனிக் கண் வளர்வார் சீர் படுதுயரம் பேர்த்து ஓத பீடழிவாம் பேச்சில்லை) கடலானது ஒலித்துக்கொண்டு தம்முடைய சிவந்த திருவடிகளை வருடும்படியாக, அடியவர்களை எதிர்பார்த்துக்கொண்டு கண் வளர்கின்ற எம்பெருமானுடைய கு₃ணங்களைத் தான் படுகின்ற துன்பங்களை நினையாமல் ஓதினால் "அப்படி அக் குணங்களை ஓதுவதால் அவனுடைய பெருமைக்கு அழிவு

---

அரு:— பதினைந்தாம் பாட்டு. a b c [ஓதமார்த்துத் தம்மேனியையும் தம்முடைய செம்மேனித்தாளையும் தடவத் தாம் கிடந்து கண்வளருகிறவருடைய சீரை-படுதுயரம் பேர்த்தோதப் பீடழிவாம்பேச்சில்லை, நெஞ்சே! எதிரிதாப் பார்த்தோர்] என்றந்வயம். 15.

16. சீரால் பிறந்து சிறப்பால் வளராது
பேர்வாம னாகாக்கால் பேராளா — மார்பாரப்
புல்கி நீ யுண்டுமிழ்ந்த பூமிநீ ரேற்பரிதே
சொல்லுநீ யாமறியச் சூழ்ந்து.

பதவுரை:— பேராளா — ஸர்வேஶ்வரனே! சீரால் பிறந்து — ஐஶ்வர்யத்துடன் பிறந்து, சிறப்பால் வளராது — சிறப்பாக வளராமலும், பேர் வாமன் ஆகாக்கால் — வாமனன் என்ற பெயரைத் தரிக்காமலும் இருந்தால், நீ — நீ. மார்பு ஆர புல்கி — (வராஹாவதாரத்தில்) மார்புறத்தழுவியும், உண்டு — (பிரளயகாலத்தில்) விழுங்கியும், உமிழ்ந்த — (ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப்படுத்தியும் போந்த, பூமி — இவ்வுலகத்தை, நீர் ஏற்பு அரிதே — தானம் வாங்கமுடியாதோ? நீ — நீ, சூழ்ந்து — ஆராய்ந்து, யாம் அறிய — நாங்கள் அறியும்படி, சொல்லு — சொல்லாய்.

---

தான்படுகிற துயரத்தைப் பொகட்டு அக்குணங்களை ஓத, அவனுடைய பெருமைக்கு அழிவென்னும் பேச்சில்லை. இத்தை முன்னிட்டு அறிந்து விசாரி. 15.

---

ஏற்படுகிறது'' என்னும் பேச்சுக்கே இடமில்லை. "செம்மேனிக் கண்'' என்பது 'சிவந்த நிறத்தையுடைய கண்' என்று பொருள்படுகிறது. "தம் மேனித் தாள்'' என்பதற்கு 'தம்முடைய சிவந்த திருவடிகளை' என்று பெரியவாச்சான் பிள்ளை பொருள் கொள்கிறார். (தம் மேனி தாள் தடவ) என்று பாடங்கொண்டு 'தம்முடைய திருமேனியையும் திருவடிகளையும் வருடும்' என்று பொருள் கொள்வதும் உண்டு. 15.

அவ:— பதினைரும் பாட்டில்; (சீரால் பிறந்து) அவஸர ப்ரதீக்ஷனாயிருக்கிறவளவேயோ? இத்தைப் பெறுகைக்கு அர்த்திஃயாயன்றோ நிற்கிறது என்கிறார்.

வ்யா:— (சீரால் பிறந்து) (25) ''महता तपसा राम महता चापि कर्मणा'' (மஹதா தபஸா ராம மஹதா சாபி கர்மணா) சக்ர வர்த்தி தான் தேடின அர்த்தஃமும் பண்ணின தபஸ்ஸும் அழிய மாறிப் பெற்றாற்போலேயாதல், ஸ்ரீ வஸுதேஃவர் உ அநந்தவ்ரதமநுஷ்டிஃத்துப்பெற்றாற்போலேயாதல் பிறந்தா லாகாதோ? (சிறப்பால் வளராது) ஸ்ரீஸுமித்ரையாரும்

---

16. அவ : "நம்மைக் கொள்வாருண்டோ" என்று எதிர் பார்த்துத் திருப்பாற்கடலில சயனித்திருக்கிறபடியை அநுபஃவித்தார் சென்ற பாட்டில். 'எதிர்பார்ப்பது மட்டுமோ? தன் உடைமையைப்பெறுவதற்குத் தான் யாசகனாகவுமன்றோ அவதரித்தான்'' என்கிறார் இப்பாட்டில்.

வ்யா : (சீரால் பிறந்து)

25. *மஹதா தபஸா ராம மஹதா சாபி கர்மணா |*
*ராஜ்ஞா தஃஸரதேஃநாஸி லப்ஃதோ௨ம்ருதமிவாமரை: ||*
*[ரா–ஆர 66-3]*

*[ராமபிரானே! தேவர்கள் அம்ருதத்தைப்பெற்றதுபோல் பெருந்தவத்தாலும், பெருங்காரியங்களாலும் தசரதமஹா ராஜனால் நீர் அடையப்பெற்றிருக்கிறீர்.]* என்கிறபடியே தசரதசக்ரவர்த்தி தன்னுடைய செல்வத்தையும் தவத்தையும் கொண்டு புத்ரகாமேஷ்டி முதலானவற்றைச் செய்து சக்ர வர்த்தித் திருமகனைப் பெற்றதுபோலே பிறக்கக் கூடாதா? வஸுதேஃவர் அநந்த வ்ரதத்தை (1. அப்பெயருள்ள ஒரு விரதத்தை 2. கணக்கற்ற விரதங்களை) அநுஷ்டித்துக் கண்ணனைப் பெற்றது போலே ஆகக் கூடாதா? (சிறப்பால் வாராது) பெரிய ஜ்ஞாநியான ஸ்ரீஸுமித்ரையும், வஸிஷ்டஃர்

---

அரு:— பதினைரும்பாட்டு. உ (அநந்தவ்ரதம்) – சாடு.

வஸிஷ்டாதிகளும் பேணி வளர்க்க வளர்ந்தாற்போலே யாதல், அநுகூலர்தேடின வெண்ணெயும் ப்ரதிகூலருடைய உயிரும் மாள வளர்ந்தாற்போலேயாதல் வளர்ந்தா லாகாதோ? (பேர்வாமனாகாக்கால்) நாட்டில் வாமநர்க ளெல்லாம் வளர்ந்தருளினவோபாதியாக வாமநனாக வேணுமோ? ஸ்ரிய:பதியென்றொரு பேரானாலாகாதோ? ஒரு ருஷிபத்நி பக்கலிலே பிறந்து, பேணுவாரின்றிக்கே வளர்ந்து, பேரும் வாமநனாகாவிட்டால், உன்கையிலே பருத்திபட்டபன்னிரண்டும்பட்டு, அணைவது உண்பது உமிழ் வதான இந்த பூமி நீரேற்பரிதாய்ப்பட்டாயோ? (பேராளா) கார்யஞ் சொல்லுவதுக்கு முன்னே "எத்திறம்" என்கிறார். உன்னுடைமையில்உனக்குக்கிடக்கிற ஓரத்துக்குளல்லைகாண்

---

முதலான ஆசார்யர்களும் மிகவும் கருத்துடன் பேணி வளர்க்க வளர்ந்த சக்ரவர்த்தித்திருமகனைப் போலே ஆகக் கூடாதா? அனுகூலர்கள் சேமித்து வைத்த வெண்ணெயும் பூதனை முதலான எதிரிகளின் உயிரும் அழியும்படியாக வளர்ந்த கண்ணனைப்போலே வளரக்கூடாதா? (பேர் வாமனாகாக்கால்) நாட்டிலுள்ள குள்ளர்களெல்லாம் இவனோடு ஒப்பு நோக்கும்போது திரிவிக்ரமர்கள் என்று சொல்லும்படியாக, வாமனன் என்றே மிகப்பிரசித்தமான பெயரையும் கொள்ள வேண்டுமோ? "ஸ்ரிய:பதி" என்பதைப்போல் பெருமையைக் காட்டும் ஒரு பெயரைக் கொண்டிருக்கக்கூடாதா? பிறந்ததோ கஸ்யபராகிற ரிஷிக்குப் பத்நியான அதிதியின் குடிசையில். பேணிப்போஷிப்பவர் எவருமில்லாமல் வளர்ந்தது. பெயரோ வாமனன் (குள்ளன்) என்பது. இப்படியெல்லாம் உன்னைத் தாழ்த்திக்கொள்ளாவிட்டால் உன்னால் அந்தப்பூமியை மாவலி யிடமிருந்து பெற முடியாதோ? என்கிறார் மேலே. (பேராளா) பேரன்பு கொண்டவனே! அவன் செய்த காரியத்தைச் சொல்லுவதற்கு முன்பே "எத்திறம்" [திருவாய் 1—3—1] என்றதுபோலே அவனுடைய நீர்மையில் ஈடுபடுகிறார். உன்னுடைய உடைமையில் உனக்கு உள்ள பக்ஷபாதத்திற்கு

கிறிலோமீ! (மார்பித்யாதி) நீ இப்படி எளியையாய் அவதரிக்கைக்குஅடி b சூழ்ந்து சொல்லு-பூத்திபண்ணி அருளிச் செய்யவேணும். c ஸர்வேஶ்வரன் தானும் தன்னுடைய அவதாரத்தைப் பேசப்புக்கால் (26) ''जन्म कर्म च मे दिव्यम्'' (ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம்) என்னுமத்தனை. வேத₃மும்பேசப்

---

எல்லை காண முடியவில்லையே! என்கிறார். (மார்பாரப்புல்கி நீ உண்டுமிழந்த பூமி நீரேற்பரிதே) இப்படியெல்லாம எளிமைப் படாவிட்டால், வராஹாவதார காலத்தில் மார்புறத் தழுவி பிரளய காலத்தில் விழுங்கி, மறுபடியும் படைப்புக்காலத்தில் வெளிவிட்டு, இப்படிப் பருத்தி ஆடையாவதற்கு முன் படும் பன்னிரண்டு நிலைகளையும் உன்னிடத்தில் அடைந்த இந்த பூமியை நீ மாவலியிடமிருந்து பெற முடியாதோ? (சொல்லு நீ யாமறியச் சூழ்ந்து) இப்படி எளிமையாக அவதரிப்பதற்குக் காரணத்தை நாம் அறியும்படியாக ஆராய்ந்து விளக்கமாகச் சொல்லவேண்டும். தன்னால் அந்த நீர்மையை அளவிட முடியாமையாலே எம்பெருமானையே அதை விளக்கமாகக் கூறும்படி கேட்கிறார். ஸர்வேஶ்வரனாகிய அவனும தன்னுடைய அவதாரத்தைப் பேசத் தொடங்கினால்,

26. ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:|
த்யக்த்வா தே₃ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி
ஸோऽர்ஜுந || [கீதை 4-9]

[ அர்ஜுநா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும், சேஷ்டிதங்களையும் எவன் இப்படி உண்மையாக அறிகிறானோ, அவன் தேஹத்தை விட்டு மறுஜன்மம் அடையான்; என்னை அடைகிறான்.] என்கிறபடியே ''தி₃வ்யம்'' என்கிறானேயொழிய விளக்கமாகப் பேச முடியவில்லை. வேத₃மும் அவனுடைய அவதார ரஹஸ்யத்தைப் பேசப் புகுந்தால்,

---

b ''சூழ்ந்து'' - விசாரித்து; c ஸர்வஜ்ஞனை 'சூழ்ந்து சொல்லு' என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரன்) இத்யாதி₃.

17. சூழ்ந்தடியார் வேண்டினக்கால் தோன்ருது விட்டாலும்
வாழ்ந்திடுவர் பின்னும் தம் வாய்திறவார்-சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள் போலரக்கன் வன்தலைகள் தாமிடியத்
தாள்வரைவில் லேந்தினர் தாம்.

பதவுரை:— (1) எங்கும் சூழ்ந்து - எல்லாப் புறங்களிலும் சுற்றிக்கொண்டு, வாள் வரைகள் போல் – ஒளி பொருந்திய மலைகளைபோல், அரக்கன் வன் தலைகள் தாம் இடிய – இராவணனுடைய பலம் பொருந்திய தலைகள் சிதைந்து விழும்படி, தாள் வரை வில் - மலைபோன்ற தாளையுடைய வில்லை, ஏந்தினர் தாம்—ஏந்தின பகவான், சூழ்ந்து – பல அவதாரங்களும் செய்து, அடியார் வேண்டினக்கால்—தமக்கு அடிமைப்பட இசைபவர்களைத் தேடின போது, தோன்ருது விட்டாலும்—அடியார் ஒருவரும் கிடைக்காவிடிலும், வாழ்ந்திடுவர் — உகந்தேயிருப்பர்; பின்னும்—(பரமபதம் சென்ற) பின்பும், தம் வாய் திறவார் – (பிராட்டியோடும்) இதைத் தம் வாய் திறந்தும் சொல்லார்.

பதவுரை:— (2) எங்குஞ் சூழ்ந்து ……… ஏந்தினர்— ஏந்தின பகவானுடைய, அடியார் தாம — பக்தர்கள், சூழ்ந்து வேண்டின கால்—இடைவிடாமல் உபாஸித்தபோது, தோன்ருது விட்டாலும் — (அந்த பகவான்) காட்சியளியாவிடிலும், வாழ்ந்திடுவர்—நெஞ்சால் வெறுக்கமாட்டார்கள்; பின்னும் தம் வாய் திறவார் – மேலும் தம்முடைய வாயாலும் (பகவானை) இகழ்ந்துபேசமாட்டார்கள்.

---

புக்கால் (27) 'तस्य धीराः परिजानन्ति योनिं' (தஸ்ய தீ₄ரா:பரிஜாநந்தி யோநிம்) என்னும். 16.

---

27. அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே
தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம் [புருஷஸூக்தம்]

[பிறப்பற்றவனுயிருந்தும் பலபடியாகப் பிறக்கிருன் (பரம புருஷன்); அவனுடைய அவதார ரஹஸ்யத்தை புத்திமான்களே நன்கு அறிகிருர்கள்.] என்கிறபடியே "அறிவாளிகளே அதைப் பேசமுடியும்" என்கிறது. 16.

அவ:— பதினேழாம் பாட்டில்; (சூழ்ந்து) அவன்கிட்டப் புக்கால் இவர்கள் பண்ணும் வைமுக்யம் அவன் நெஞ்சிற்படாதென்கிறது.

வ்யா:— (சூழ்ந்தடியாரித்யாதி) "எதிர்சூழல்புக்கு" என்னும்படியே இவர்களைச்சூழ்ந்து "அடியார்வேணும்" என்று அபேக்ஷித்தால் இவர்கள் உ தோன்ருவிட்டாலும் "இவர்களுக்கு உறுப்பாகப் பெற்ரேமிறே" என்று வாழ்ந்திருப்பதுஞ் செய்வர். 'வைமுக்யம் பண்ணினர்' என்று தனியிருப்பிலே பிராட்டிக்கு வாய்திறவார். ப்ரஜைகள் குற்றஞ்செய்யத் தாய்க்கிறே சொல்லுவது; அவளுக்குச்

---

17. அவ: (1) அவன் அடியார்களைக் கைக்கொள்வதற்காகச் சேதனர்களை அணுகும்போது அவர்கள் அவனுக்கு முகங்கொடுக்காதிருந்தாலும் அதை எம்பெருமான் நெஞ்சில் கொள்வதில்லை என்கிருர்.

வ்யா: (சூழ்ந்தடியார் வேண்டினக்கால் தோன்ருது விட்டாலும் வாழ்ந்திடுவர்) "எதிர் சூழல் புக்கு" [திருவாய் 2-7-6] என்கிறபடியே அவதாரம் எடுப்பதன் மூலம் ஸம்ஸாரிகளைச் சுற்றி வளைத்து அடியார்களைக் கைக்கொள்ள வேண்டும் என்று எம்பெருமான் அபேக்ஷிக்கும்போது ஸம்ஸாரிகள் எவரும் முகங்கொடுக்காவிட்டாலும், 'இவர்களுக்காக நாம் செய்ய வேண்டிய முயற்சிகளைச் செய்து விட்டோம்" என்று தான் பேறு பெற்றதாக உகந்திருப்பான் எம்பெருமான். (பின்னும் தம் வாய் திறவார்) பிராட்டியோடு தனித்திருக்கும் போதும் அவளுக்குக்கூட இவர்கள் தனக்கு முகங்காட்டவில்லை என்பதை வாய் திறந்து சொல்லமாட்டான்.

---

அரு:— பதினேழாம் பாட்டு. உ தோன்ருவிடுகை - ஆபிமுக்யம் பண்ணவிடுகை.

சொல்லார். b (சூழ்ந்தெங்குமித்யாதி₂) ''பார்த்தவிடமெல் லாம் ராமசரம்'' என்னும்படி சூழ்ந்து ஒளியையுடைய மலைபோலேயிருந்துள்ள ராக்ஷஸனுடைய தலைகளிடியும்படி c திண்ணிய வில்லையேந்திய ஸர்வரக்ஷகர் ஶக்தராயிருக் கச்செய்தே அஶக்தரைப்போலே இருப்பர். ''இவர்கள் உபேக்ஷித்தார்'' என்று பிராட்டிக்கும் வாய்திறவார்.

d அடியாரானவர்கள் d₂ உபாஸித்தாலும் தோன்றிற் றிலராகில் ஶேஷபூ,தன் ஶோஷிசெய்தபடி கண்டிருக்கு

குழந்தைகள் தவறு செய்தால் தாயிடம் சொல்லி ஆறுதல் அடைவதே தந்தையின் வழக்கம். அவளிடமும் சொல்ல மாட்டார் என்கிறார். ஸ்ரீ வசநபூ₄ஷணம் மூன்றும் ப்ரகரணத்தில் சூ₄ர்ணை 364ல் ''அறிவிக்க வுரியவனகப்பட வாய் திறவாதே ஸர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்குமென் னுகின்றதிறே'' என்ற ஸூத்ரமும் அதற்கு மணவாள மாமுனிகளின் வ்யாக்₂யாநமும் இப்பாசுரத்தின் விளக்கமாய் அமைந்தவை. அவற்றை இங்கு அநுஸந்தி₄ப்பது. (சூழ்ந்தெங்கும் வாள் வரைகள் போலரக்கன் வன்தலைகள் தாமிடியத் தாள்வரை வில்லேந்தினார் தாம்) 'பார்த்த இடமெல்லாம் ராம பா₃ணங்கள்' என்னும்படி பா₃ணங்களாலே எல்லாப்புறமும் சூழ்ந்து கொண்டு ஒளியை உடைய மலை போலே இருக்கும் ராக்ஷஸனான ராவணனின் தலைகள் அற்று விழும்படி மலைபோன்ற அடியுரமுள்ள வில்லை ஏந்தின ஸர்வரக்ஷகனான அந்த எம்பெருமான் ஶக்தி யுடையவனாய் இருந்தும் சேதனர்கள் முகங்காட்டாதபோது ஶக்தி இல்லாதவன் போலே இருப்பான். இவர்கள் முகங் காட்டவில்லை என்று பிராட்டிக்கும் சொல்லுவதில்லை.

அவ: (2) ''அடியார்கள் எம்பெருமானை உபாஸிக்கும் போது எம்பெருமான் காட்சியளிக்கவில்லையானாலும் அதைக்

b c தாள்வரைவில் - வளைந்து மலைபோலேயிருக்கிற வில். d ஈச்வரன் வெறுனென்றது கீழ்;' '' தோன்றுதுவிட்டாலும் '' -ஈச்வரன் முகங்காட்டாவிட்டாலும், அடியார்வெறுரென்று

18. தாய்பாலாம் புண்டாலு மத்தழும்பு தானிளகப்
பாம்பாலாப் புண்டுபா டுற்றாலும்—சோம்பாதிப்
பல்லுருவை யெல்லாம படர்வித்த வித்தாஉன்
தொல்லுருவை யாரறிவார் சொல்லு.

---

மத்தனையன்றோ? என்று வெறுர்கள். (பின்னும் தம்வாய் திறவார்) ப₄க₃வத்₃கு₃ணஹாநி சொல்லுமவர்களுக்கும் வாய்திறவார். (சூழ்ந்தெங்குமித்யாதி₃) ஓ தோன்றுமவர் நமக்குத் தோன்றிற்றிலரென்று வெறுர்கள். 17.

---

கண்டு வெறுக்கமாட்டார்கள்; 'அவன் திருவுள்ளப்படி செய்யட்டும்' என்று வாய் திறவாமல் இருப்பார்கள்' என்கிறார்.

வ்யா : (அடியார் சூழ்ந்து வேண்டினக்கால் தோன்றாது விட்டாலும் வாழ்ந்திடுவர்) அடியாரானவர்கள் எம்பெருமானை மிகவும் ஆற்றாமையுடன் காட்சியளிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தபோது எம்பெருமான் காட்சியளிக்காவிடினும் "அடிமையான நாம் உடையவனான அவன் செய்தபடி பார்த்துப் பொறுத்திருக்க வேண்டியதேயன்றோ" என்று வெறுக்காமலே இருப்பர். (பின்னும் தம் வாய் திறவார்) எம்பெருமானுடைய குணக்கேட்டைச் சொல்லுகிறவர்களிடம் இதைப் பற்றிச் சொலலமாட்டார்கள். (சூழ்ந்தெங்கும் வாள் வரைகள் ... ... தாள் வரை வில்லேந்தினார் தாம்) நல்லவர்களை ரக்ஷிப்பதற்காக ராமாவதாரம் எடுத்தவர் நமக்குக் காட்சியளிக்கவில்லையே என்று வெறுக்கமாட்டார்கள். 17.

---

அடியார்பரமாக்கியருளிச்செய்கிறார் (அடியாரானவர்கள்) இத்யாதி₃. ஓ "அடியார் சூழ்ந்து வேண்டினக்கால்" பு₃த்₃தி₄பண்ணி உபாஸித்தால். ஓ (தோன்றுமவர்) - ராமாவதாரமாய்த் தோன்றுமவர். 17

பதவுரை:— தாம்பால்— (யசோதைப்பிராட்டியுடைய) கயிற்ருல், ஆப்புண்டாலும்—கட்டுண்டாலும், அத்தழும்பு தான் இளக—அந்தத்தழும்பும் சிறிதாகும்படி, பாம்பால் ஆப்புண்டு பாடுற்ருலும் — (காளியன்) என்னும் பாம்பால் கட்டுண்டு துன்புற்ருலும், சோம்பாது — (இத்துன்பங்களை நினைத்து) பின்வாங்காமல், இ பல் உருவும் — தேவன், மநுஷ்யன் முதலிய பலபடிப்பட்ட உருவங்களையுடைய இச் சேதநரை, படர்வித்த—தோற்றிப் பரவச்செய்த, வித்தா— ஜக₃த் காரணபூ₄தனே!, உன் தொல் உருவை — பழைய தான உன்னுடைய வடிவை, யார் அறிவார் — யார் அறிய முடியும்? சொல்லு—நீயே சொல்லுவாயாக.

---

அவ:— பதினெட்டாம் பாட்டில்; (தாம்பால்) உகந்தும், உகவாதும் ஸம்ஸாரிகள் பண்ணும் பரிப₄வத்தைக்கண்டு தன் ரக்ஷணத்திலே நெகிழநில்லானென்கிறது.

வ்யா:— (தாம்பித்யாதி₃) "என்மகனிறே, நானிவ னுக்கு நல்லள்" என்று யசோதைப்பிராட்டி தாம்பாலே கட்டினலும். அவர்கள் கட்டினகட்டு அபி₄மதவிஷயத்தில்

---

18. அவ : 'ஸம்ஸாரிகள் முகங் காட்டாவிட்டாலும் வெறுப்படையமாட்டான்' என்ருர் சென்ற பாட்டில், அன்பாலும் விரோதத்தாலும் அவர்கள் செய்யும் அவமானங் களைக் கண்டும் அவர்களைத் தான் ரக்ஷிக்காமல இருக்க மாட்டான் என்கிருர் இப்பாட்டில்.

வ்யா: (தாம்பால் ஆப்புண்டாலும்) "என் மகனல்லவோ இவன். இவன் தீம்பு செய்யும்போது இவனை சிக்ஷிப்பதே நலன்" என்னும் நினைவாலே யசோதைப்பிராட்டி தாம்பாலே கட்டினலும். அன்புடைய அவள் கட்டின கட்டு நாயகியை நாயகன் புணரும்போது ஏற்படும் அடையாளம்போலே

ஸம்ஶ்லேஷசிஹ்நம் போலேயிறே. a அத்தழும்பு ஏது மில்லாதபடி காளியனாலே படாதது பட்டாலும். (சோம்பா தித்யாதி₂) "இப்படி ஸம்ஸாரிகள் வைமுக்₂யம் பண்ணி னார்கள்" என்று சோம்பாதே "நம் கார்யஞ்செய்கை நமக்கு எளிவரவோ?" என்று, காளியனிற்காட்டில் த்₃வேஷிகளா தாராயிருக்கிற ப்ரஜைகளையெல்லாம் விஸ்த்ருதமாக்கின காரணத்வப்ரயுக்தமான குடல்துடக்கையுடையவனே! பழையதான உன்னுடைய b வடிவை வேறுசிலரறியப் போமோ? நீயே சொல்லு. பரிப₄வம் பண்ணின போதோடு பண்ணாதபோதோடு வாசியற ஏகரூபமான உன்னுடைய ஸ்வரூபத்தை வேறுசிலரறியப்போமோ? நீயே சொல்லு 18

---

உத்தேச்யமாகவன்றோ இருப்பது. ஆகையாலே அடுத்து எடுக்கப்படும் கொடிய காளியபூக்₃த்₄த்தோடு அன்புத் தொல்லையான இதையும் சேர்த்து எடுக்கிறார். (அத்தழும்புதான் இளகப் பாய்பால் ஆப்புண்டு பாடுற்றாலும்) 'தாம்பால் கட்டுண்ட கட்டு, இதை நோக்கும் போது ஒன்று மில்லை' என்று சொல்லும்படியாகக் காளியனாகிற பாம்பாலே கட்டுண்டு படாதன பட்டாலும். (சோம்பாது இப்பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா) "இப்படி ஸம்ஸாரிகள் நம்மை அவமதித்தார்கள்" என்று சோம்பாமல், "நமக்கு உரிய காரியத்தைச் செய்வது நமக்குத் தாழ்வோ?" என்னும் நினைவாலே த்வேஷத்தில் காளியனைக் காட்டிலும் விஞ்சி யிருக்கும் ஜீவர்களையெல்லாம் தன் திருமேனியிலிருந்து வெளிவிட்டுப் பரவச்செய்த ஜக₃த்காரணபூ₄தனான இயற்கை உறவினனே!(உன் தொல்லுருவை யார் அறிவார்சொல்லு)மிகப் பழையதான உன்ஸ்வரூபத்தை வேறு சிலர் அறிய முடியுமோ? நீயே சொல்லு; 'உன்னை அவமானம் செய்தபோதும், செய்யாத போதும் ஒருபடியாயிருக்கும் உன் ஸ்வரூபத்தை வேறு சிலரால் அறியமுடியுமோ? நீயே சொல்லுவாயாக' என்று கருத்து. (தொல்லுரு) இங்கு, 'பழையதான ஸ்வரூபம்' என்று சொல்லப்படுவது உடையவன் உடைமையை விடமாட்டாத தசை (ஆற்றாமை) யேயாகும். 18

---

அரு:— பதினெட்டாம் பாட்டு. a "தானிளக"-தழும்புதானில்லாதபடி. b (வடிவை) - ஸ்வரூபத்தை. 18.

19. சொல்லில் குறையில்லை சூதறியா நெஞ்சமே
எல்லிபக லென்னு தெப்போதும் — தொல்லைக்கண்
மாத்தானைக் கெல்லாமோ ரைவரையே மாறுகக்
காத்தானைக் காண்டுநீ காண்.

பதவுரை:— சூது அறியா நெஞ்சமே — நன்மை, தீமை அறியாத மனமே!, சொல்லில்— அவனது குணங்களை') பேசப் புகில், குறையில்லை—அவற்றிற்கு ஓர் அளவில்லை; தொல்லை கண்—பழையதான பூமியிலிருந்த, மா தானைக்கு எல்லாம்— (துரியோதநாதியருடைய) பெரிய சேனைகளுக்கெல்லாம், ஓர் ஐவரையே — துணையற்ற பஞ்சபாண்டவர்களையே, மாறுக—எதிரிகளாகச் செய்து, எல்லி பகல் என்னுது எப்போதும்— இரவு, பகல் என்று நினையாமல் எல்லாக் காலத்திலும், காத்தானை — ரக்ஷித்தவனை, காண்டும்—காண்போம்: நீ காண் — நீ பார்.

---

அவ: — பத்தொன்பதாம் பாட்டு; (சொல்லில்) கீழ் பருவம் நிரம்புவதற்கு முன்பு செய்தபடி சொல்லிற்று; வளர்ந்த பின்பு செய்தபடி சொல்லுகிறது.

வ்யா:-(சொல்லில் குறையில்லை) ப₄க₃வத்₃விஷயத்தைப் பேசப்புக்கால் a பேச்சில் குறையில்லை. b (சூதறியா நெஞ்

---

19. அவ: சென்ற பாட்டில இளமைப் பருவத்தில் தாய்பால் ஆப்புண்டாலும், பாம்பால் ஆப்புண்டாலும் பொருட்படுத்தாமல், அடியாரை ரக்ஷிப்பான் என்று சொல்லிற்று. இப்பாட்டில் வளர்ந்த பின்பு பாண்டவர்களை ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது.

வ்யா : (சொல்லில் குறையில்லை) ப₄க₃வத்₃ விஷயத்தைப் பேசப் புகுந்தால் பேசி முடியாது. எத்தனை பேசினாலும் அளவிட முடியாது என்று கருத்து. (சூதறியாநெஞ்சமே)

---

அரு:— பத்தொன்பதாம்பாட்டு; a (பேச்சில் குறையில்லை`-பேசிமுடியாது; எத்தனைபேசினாலும் விஷயத்தைப் பரிச்சே₂தி₃க்கப்போகாதென்றபடி. b ''சூது'' - விரகு-

சமே) "பு₄க₃வத்₃விஷயம் நன்று" என்றும், "விஷய ப்ராவண்யம் அநர்த்த₂ம்" என்றும், விடவும் பற்றவு மறியாத நெஞ்சே! c (தொல்லையித்யாதி₃) பழையதான ஸ்ரீபூ₄மி நெளியும்படியான d₂ மஹாஸேனைக்கெல்லாம், * தானே காத்தானென்னில் தங்களுக்குத் தோல்வி என்று அவர்களிசையாரென்று, பாண்டவர்கள் ஐந்துபேரும் எதிராக, (காத்தானைக் காண்டும் நீ காண்) e காண்போமென்று காணப்புக்

---

உபாயத்தை அறியாத நெஞ்சே! 'பு₄க₃வத்₃ விஷயம் நல்லது' என்று அறிந்து அதைப் பற்றவும், 'மற்ற விஷயங்களில் ஈடுபடுவது தீயது' என்று அறிந்து அவற்றை விடவும் அறியாத நெஞ்சே! (தொல்லைக் கண் மாத்தானைக் கெல்லாம் ஓர் ஐவரையே மாறாகக் காத்தானை) பழையதான பூ₄மி, பு₄ாரம் பொறுக்காமல் நெளியும்படியான பெரிய ஸேனைக் கெல்லாம், துணையற்ற பஞ்சபாண்டவர்கள் ஐவரையுமே எதிரிகளாக வைத்து அவர்களை ரக்ஷித்தவனே! தானே துரியோதனாதியரை அழித்து இவர்களை ரக்ஷித்தால் தாங்கள் வென்றதாகப் பஞ்சபாண்டவர்கள் இசையமாட்டார்களாகையாலே, அவர்கள் வெற்றி பெற்றார்கள் என்னலாம்படி அவர்களை முன்னிறுத்தி அவர்களைக் காத்தவனே! (எல்லி

---

c, d "கண்" என்று - இடமாய், பூமி d₂ "தானை" ஸேனை. e (காண்போம் என்றுகாணப்புக்கால்.) காணலாங்காணென்று பூரிப்பது. [சூதறியா நெஞ்சமே சொல்லில் குறையில்லை. தொல்லைதொடங்கி-மாறாக எல்லிபகலென்னாதெப்போதும்-காத்தானைக்காண்டும்-நீ காண்] என்றந்வயம். 19

---

* இது "ஓர்" என்பதின் தாத்பர்யம்.

20. காணப் புகிலறிவு கைக்கொண்ட நன்னெஞ்சம்
நாணப் படுமன்றே நாம்பேசில் — மாணி
யுருவாகிக் கொண்டுலகம் நீரேற்ற சீரான்
திருவாகம் தீண்டிற்றுச் சென்று.

பதவுரை;— மாணி உருவாகிக்கொண்டு — ப்₄ரஹ்மசாரி வேஷத்தை உடையவனாய்க்கொண்டு, உலகம் — லோகமெல்லாம், நீர் ஏற்ற சீரான் — தானம் வாங்கிக்கொண்ட மஹா கு₃ணத்தையுடைய. திரு ஆகம் — அழகிய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தை, சென்று — அணுகி, தீண்டிற்று — உலகமெல்லாம் ஸ்பர்சித்தத்தை, நாம் காணப்புகில்— நாம் விசாரித்தாலும், பேசில்—சொல்ல ஆரம்பித்தாலும், அறிவு கைக்கொண்ட நல் நெஞ்சம்—ஞானத்தையுடைய மேலான மனம், நாணப்படுமன்றே—வெட்கப்படவேண்டாவோ?

---

கால்; அவர்கள் பகல் யுத்₃த₄ம்பண்ணி இரவுறங்கினாலும் இரவும் பகலும் உறங்காதே அர்ஜுநன் தோள்பிடிப்பதும், வெல்லும்படி மநோரதிப்பதுஞ்செய்துகொடு நின்று காத்தவனை. (காண்டும் நீகாண்) காண்போமென்று காணப்புக்கால் உள்ளபடியே காணலாங்காண். 19

---

பகல் என்னுது எப்போதும் காத்தானை) பாண்டவர்கள் பகலில் போர் புரிந்து இரவில் உறங்கினாலும், இவன் இரவு பகல் என்னும் வேறுபாடில்லாமல் எப்போதும் உறங்காமல் அர்ஜுனனுடைய தோளைத் தொட்டு நின்று பஞ்ச பாண்டவர்கள் ஜயிப்பதற்குரிய உபாயங்களையெல்லாம் சிந்தித்துச் செயல்படுத்தி அவர்களைக் காத்தான். (காண்டும் நீ காண்) காண வேண்டுமென்று விரும்பினாயானால் உள்ள படியே நீ காணலாம் காண். 19

அவ: – இருபதாம் பாட்டில்; (காணப்புகில்) க நான் "காண்" என்று சொன்னால் தன்னை அறிந்து நாண வேண்டாவோ? என்கிறார்.

வ்யா: – (காணப்புகிலித்யாதி) நாம் அறியாதே காணப் புகுதல், அர்த்ததத்வமிருந்தபடியே பேசப்புகுதல் செய்தால், அறிவுக்கு வாய்த்தலையான நெஞ்சுக்கு நாண

---

20. அவ : நான் 'காண்' என்று சொன்னாலும் நம்முடைய ஸ்வரூபத்தையும் அவன் செயலையும் அறிந்தால் நெஞ்சம் அவனைக் காண்பதற்கு நாண வேண்டாமோ? என்கிறார்.

வ்யா : (காணப்புகில், நாம் பேசில் அறிவு கைக்கொண்ட நல்நெஞ்சம் நாணப்படும் அன்றே) நாம் அறிவின்மையாலே அவனைக் காண விரும்பினாலும், அவன் ஸ்வரூபத்தை உள்ளபடியே பேசத் தொடங்கினாலும், அறிவு வெளிப்படும் வாயிலாய் இருக்கும் நன்மையை உடைய நெஞ்சானது நம் ஸ்வரூபத்தையும், அவன் செய்த செயலையும் நினைத்து நாண மடைய வேண்டாமோ? அப்படி அவன் செய்த செயல் என்ன என்பதை, பாட்டின் பிற்பகுதியாலே காட்டுகிறார். (மாணி உருவாகி நீரேற்று உலகம் கொண்ட சீரான் திருவாகம் சென்று தீண்டிற்று) வாமன ப்ரஹ்மசாரி வேஷத்தை உடையவனாய் மாவலியிடமிருந்து உலகங்களை யெல்லாம் தானம் வாங்கிக்கொண்ட பெருங்குணத்தை உடையவனுடைய அழகிய திவ்ய மங்கள விக்ரஹம் அனைத்துலகையும் வியாபித்து ஸ்பர்சித்ததை நாம் காண விரும்பினாலும், பேசப் புகுந்தாலும், நல்ல நெஞ்சம் நாணமடைய வேண்டாமோ? அதாவது — உலகனைத்தையும் அவன் மேல் விழுந்து கைக்கொள்ளத் துடிப்பவனாயிருக்கும் போது நாம் அவனைக் காண்பது பேசுவது என்பது ஓர் அர்த்தமோ? சென்ற பாட்டில் "காண்" என்று நாம் அறியாமல் சொன்னாலும், அறிவுடைய நன்னெஞ்சம்

---

அரு: — இருபதாம் பாட்டு. க "தீண்டிற்று — நாணப் படுமன்றே?"-நாணவேண்டாவோ?என்று அவதாரிகைக்குத்

21- சென்றங்கு வெந்நரகில் சேராமல் காப்பதற்கு,
இன்றிங்கென் னெஞ்சா லிடுக்குண்ட — அன்றங்குப்
பாருருவும் பார்வளைத்த நீருருவு கண்புதையக்
காருருவன் தானிமிர்த்த கால்.

---

வேண்டாவோ? (மாணியித்யாதி₃) b இத்தைத்தீண்டுகைக்கு அவன் ப்ரவர்த்தித்தபடி. (திருவாகமித்யாதி₃) தன்னை யறிந்தால் விலக்ஷணமான வடிவைச் சென்று தீண்டக் கடவதோ? 20

---

அவனைக் காண்பதற்கும், பேசுவதற்கும் நாணப்பட வேண்டாமோ என்று கருத்து. அநாதி₃காலமாக அவன் நம்மைக் கைக்கொள்வதற்குச் செயல்படுபவனாக இருக்க, நாம் அவனைப் பற்றுவது ஓர் அர்த்த₂மல்ல என்று கருத்து. சேதனன் பரமனைப் பற்றும் பற்றாகிற ஸ்வக்ருதஸ்வீகாரத்தைக் காட்டிலும், பரமன் இவனைப் பற்றும் பற்றாகிற பரக்ருத ஸ்வீகாரத்தின் சிறப்பைச் சொன்னபடி. (திருவாகம் தீண்டிற்று நாணப்படுமன்றே) அறிவுடைய நெஞ்சம் தன்னுடைய தாழ்வையறிந்தால் உலகளந்த மிகச் சிறந்த அந்தத் திருமேனியைச் சென்று தீண்டுவது தக்கதன்று என நாணப்பட வேண்டாமோ? என்று "வளவேழுலகு" [திருவாய் 1—5] தலையெடுத்துச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். 20.

---

தாத்பர்யம். b (இத்தைத் தீண்டுகை)-இது தீண்டுகைக்கு. ஸர்வ விஷயமாக அவன் தீண்டுகையாலே இதுவும் லஜ்ஜியாமல் தீண்டிற்றென்றபடி. இத்தைத் தீண்டுகைக்காக அவன் செய்த வ்யாபாரமாகையாலே இதுவுங் கூசாமல் தீண்டிற்றென்னவுமாம். [காணப்புகில்-நாய்பேசில் - அறிவு கைக்கொண்ட நன்னெஞ்சம் - மாணியுருவாகி - நீரேற்று உலகங்கொண்ட - சீரான் திருவாகம் சென்றுதீண்டிற்று- நாணப்படும்] என்றந்வயம். 20.

பதவுரை:— காருருவன் தான்—மேகம்போன்ற வடிவை யுடைய பகவான், அன்று—மஹாபலி யஜ்ஞம் செய்த அக் காலத்தில், அங்கு—அவனுடைய யஜ்ஞபூமியில், பார் உரு வும்—பூமியின் உருவமும், பார் வளைத்த நீர் உருவும்—பூமி யைச்சுற்றியுள்ள ஜலத்தின் உருவமும், கண்புதைய—மறை யும்படி, நிமிர்த்த—வளரச்செய்த. கால்—திருவடிகள், அங்கு சென்று—அந்தந்த உலகங்களில் போய், வெம் நர கில்—கொடிய நரகம்போன்ற ஸம்ஸாரத்தில், சேராமல் காப்பதற்கு — அழுந்தாமல் ரக்ஷிப்பதற்காக, இன்று—இப் போது, இங்கு—இவ்வுலகிலேயே, என் நெஞ்சால்—என் னுடைய மனத்தால், இடுக்குண்ட—நெருக்கப்பட்டன.

---

அவ:— இருபத்தோராம் பாட்டில்; (சென்றங்கு) உ ஓரி டத்திற் போகாதபடி நிஶ்ஶேஷமாக க்ரஹிக்கப்பார்த்தால் அவகாசம் பெற்றன்றோ க்ரஹிப்பதென்கிறது.

---

21. அவ:— "உலகளந்த திருவடி தானே மேல் விழுந்து வந்து என் நெஞ்சில் அடங்கிற்று. இனி மற்றொருவர் அதை அடக்கப் பார்த்தால் முடியாது" என்கிறார்.

---

அரு:— இருபத்தோராம் பாட்டு; உ "இடுக்குண்ட" என்றத்தைப்பற்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (ஓரி டத்தில்) இத்யாதி. என் நெஞ்சிலே அகப்படுகையாலே புறம்பேபோகத் திருவடிகளுக்கு அவகாஶமில்லாமையாலே ஸம்ஸாரிகள்ஓரிடத்திற்போகாதபடி நிஶ்ஶேஷமாகத்திருவடி களை உள்ளேக்ரஹிக்கிறோமென்றாலும் இனிப்போகாதென்ற படி. [அன்றங்குப் பாருருவும் பார்வளைத்த நீருருவும் கண் புதைய, தான்நிமிர்த்த காருருவன் கால் அங்குசென்று வெம் நரகில் சேராமல் காப்பதற்கு இன்றிங்கு என்னெஞ்சால் இடுக்குண்ட] என்றந்வயம். 21

வ்யா;— (சென்றித்யாதி) வெந்நரகென்று-அகலுகைக்குப்பேர், ஸம்ஸாரத்துக்கும் பேர்; அறிவார்க்கு நரகமாவது-ஸம்ஸாரமிறே. (இன்றித்யாதி) நினைவின்றிக்கே என்னுடைய நெஞ்சிலே நெருக்குண்டது. (அன்றித்யாதி) இன்றிங்கென்னெஞ்சாலிடுக்குண்டது - பூமியும் பூமியடையச் சூழ்ந்த ஜலங்களுஞ் மறையும்படி பரம்பின மேகம்போலே ஶ்யாமமான வடிவையுடையவனுடைய திருவடிகள் என் நெஞ்சிலே இடுக்குண்டது. 21.

---

வ்யா:—(சென்று அங்கு வெங்நரகில் சேராமல் காப்பதற்கு இன்று இங்கு என் நெஞ்சால் இடுக்குண்ட) அந்தந்த உலகங்களில் சென்று கொடிய நரகம் போன்ற ஸம்ஸாரத்தில் நாம் அழுந்தாமல் ரக்ஷிப்பதற்காக, இப்போது இவ்வுலகிலேயே உலகளந்த திருவடிகள் என்னுடைய மனத்தால் நெருக்கப்பட்டன. "வெங்நரகில் சேராமல் காப்பதற்கு" என்பதற்கு நம்மை "அயோக்யன்" என்று அகலாமல் ரக்ஷிப்பதற்கு என்றும் பொருள் கொள்ளலாம். "வெங்நரகு" என்று முதல் பொருளில் ஸம்ஸாரத்தையும், இரண்டாவது பொருளில் "அயோக்யன்" என்று அகல்வதையும் குறிக்கிறது. அறிவுடையவர்களுக்கு இந்த ஸம்ஸாரமும் எம்பெருமானை விட்டு அகல்வதும் நரகமேயன்றோ. இப்படி நெருக்கப்பட்ட கால்கள் எத்தகையவை என்பதைப் பாட்டின் எஞ்சிய பகுதியாலே காட்டுகிறார். (அன்றங்குப் பாருருவும் பார்வளைத்த நீருருவும் கண்புதையக் காருருவன் தான் நிமிர்த்த கால்) இன்று இப்போது என் நெஞ்சால் நெருக்கப்பட்டவை அன்று பூமியும், பூமி முழுவதையும் சூழ்ந்திருக்கும் கடல்களும் மறையும்படி வியாபித்த மேகம் போலே கறுத்த திருமேனியை உடையவனுடைய திருவடிகளே என்கை. (கால் இடுக்குண்ட) உலகனைத்தையும் அளந்த திருவடிகள் என் நெஞ்சில் வந்து நெருக்குண்பதே! என்று வியப்படைகிறார். 21.

22 காலே பொதத்திரிந்து கத்துவரா மினநாள்
மாலார் குடிபுகுந்தா ரென்மனத்தே—மேலால்
தருக்குமிடம் பாட்டினெடும் வல்வினையார் தாம் வீற்
றிருக்குமிடம் காணு திளைத்து.

பதவுரை:— மாலார்— மிகப்பெரியனை ஸர்வேஶ்வரன், என்மனத்தே— என்னுடைய மனத்திலே, குடிபுகுந்தார்— பரிகரங்களோடு வந்து சேர்ந்தார்; மேலால்—முன்காலத்தில், தருக்கும்— துன்புறுத்திவந்த, இடம் பாட்டினெடும்— செல்வச் செருக்குடன், வல் வினையார்— மிகக்கொடூரமான பாபமானது, தாம வீற்றிருக்கும் இடம் காணாது— தாம் ஸுகமாக வஸிக்கைக்கு இடம் அறியாமல், இளைத்து— பலமற்றதாய், காலே பொத திரிந்து— கால் வெடிக்கும்படி அலைந்து, இன நாள் — இக்காலத்தில், கத்துவராம்— கூப்பிடா நின்றது.

---

அவ:— இருபத்திரண்டாம் பாட்டில்; (காலே) நம்முடைய ப்ராப்திப்ரதிப₃ந்த₄கமான கர்மங்கள் கால் உ பொதும்படி தடுமாறிக் கூப்பிட்டுத் திரியுமத்தனையிறே இனநாள் என்கிறார்.

வ்யா:— (மாலாரித்யாதி₃) "அரவத்தமளியினேடும்" இத்யாதி₃ப்படியே ஸர்வேஶ்வரன் என் மநஸ்ஸிலே புகுந்

---

22. அவ:—இப்படி அவன் என் நெஞ்சிலே வந்து குடி புகுந்த பின், நான் அவனை அடைவதற்குத் தடையாயிருந்த என்னுடைய கருமங்கள் என் நெஞ்சை விட்டு ஓடி, தங்குமிடம் காணாது திரிந்து, கால் வெடிக்கும்படி அலைந்து தடுமாறிக் கூப்பிடுகின்றன இப்போது என்கிறார்.

வ்யா:—(மாலார் குடி புகுந்தார் என் மனத்தே) "அரவத்த மளியினேடும் அழகிய பாற்கடலோடும் அரவிந்தப் பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து" [பெரியாழ் திரு 5—2—10] என்கிறபடியே, ஸர்வேச்வரன் தன் பரிவாரங்களுடனே என் மனத்தில் வந்து குடி புகுந்தான். (மேலால் தருக்கும் இடம்

---

அரு:— இருபத்திரண்டாம் பாட்டு உ பொதும்படி-

23. இளைப்பா விளையாப்பாய் நெஞ்சமே சொன்னேன்
இளைக்க நமன்தமர்கள் பற்றி - இளைப்பெய்த
நாய்தந்து மோதாமல் நல்குவான் நல்காப்பான்
தாய்தந்தை யெவ்வுயிர்க்கும் தான்.

பதவுரை:— நமன் தமர்கள்—யம தூதர்கள், இளைக்க பற்றி—பற்றும்போதே பலமற்றவர்களாகும்படி பிடித்து, இளைப்பு எய்த—மேலும் பலம் இழக்கும்படி, நாய் தந்து மோதாமல்— நாய்களைவிட்டு (நம்மைத்) துன்புறுத்ாதபடி, நல்குவான்—ரக்ஷிக்கிறுனுகிலும் சரி; நல்காப்பான்—ரக்ஷியாதொழிவானுகிலும் சரி; எவ்வுயிர்க்கும்—எல்லாப்பிராணி

தான். (மேலாவித்யாதி) பண்டு நம்மை b ஹிம்ஸித்துப் போந்த அளவுடைமையோடே கூட வல்வினையார் விஸ்த்ருதமாக இருக்குமிடங்காணுதே இளைத்துக்கால்தேயும்படி தடுமாறிக் கூப்பிட்டுக்கொடு திரியுமத்தனையிறே இனநாள் 22

பாட்டிஞெடும் வல் வினையார் தாம் இன் நாள் வீற்றிருக்கும் இடம் காணுது இளை த்து கா லே பொ தத்திரிந்து கத்துவராம்) அநாதிகாலமாக நம்மைத் துன்புறுத்தி வந்த செருக்கோடு கூட மிகக் கொடிய பாபமானது இப்போது தாம் முன்போலே ஆட்சிபுரிந்து வாழ்வதற்கு இடம் அறியாமல் வலிமை குறைந்து கால் தேயும்படி தடுமாறிக் கூப்பிட்டுக்கொண்டு திரிகின்றது. 'தருக்கும்'' என்று துன்புறுத்துவதைச் சொல்லுகிறது. 'இடம்பாடு' என்று செல்வச் செருக்கைக் கூறுகிறது. வீறு தோற்ற இருக்கை—வீற்றிருக்கை; ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கை என்றபடி. பாபத்தின் கொடுமையைக் கருதி "வல்வினையார்'' என்கிருர். 22.

வெடிக்கும்படி. முள்ளுத்தைக்கையுமாம். b தருக்குகை-நெருக்குகையாய், ஹிம்ஸிக்கை. [என்மனத்தே மாலார் குடிபுகுந்தார்-வல்வினையார்தாம் மேலால் தருக்குமிடம்பாட்டிஞெடும் வீற்றிருக்குமிடங்காணுதிளைத்து கால்பொதத் திரிந்து இனநாள் கத்துவராம்] என்றந்வயம். 22

களுக்கும், தான் தாய் தந்தை — தானே தாயும் தந்தையு மாவான்; நெஞ்சமே— மனமே! இளைப்பாய்—(அவனை அடையாமல்) தளர்ந்து போனாலும் போ; இளையாப்பாய் — (அவனையடைந்து) தளராமலிருக்கிலும் சரி; சொன்னேன்— (இவ்வரும் பொருளை உனக்கு) உபதேசித்தேன்.

---

வ்யா— இருபத்துமூன்றாம் பாட்டில்; a (இளைப்பாயித்யாதி) b பற்றுவாய், பற்றொழிவாய்; அவனைப்பற்றிலும் பற்று, விஷயத்தைப் பற்றிலும் பற்று. (நெஞ்சமே சொன்னேன்) "ஈஶ்வரனே ஸர்வவிதபந்து" என்னுமிடம் ஒருத்தருக்குஞ் சொல்லுமதன்று. அத்தை உனக்குச்

---

23. அவ:—"நீ அவனைப் பற்றினாலும் பற்றுவிட்டாலும் அவன் ரக்ஷகனாகவே இருப்பான். அது போலவே அவன் ரக்ஷித்தாலும் ரக்ஷியாவிட்டாலும் அவனைப் பற்றி நிற்பது உன் கடமை" என்கிறார்.

வ்யா:—(இளைப்பாய் இளையாப்பாய்) அவனைப் பற்றாமல் தளர்ந்து போனாலும் போ; அவனைப் பற்றித் தளராமல இருந்தாலும் இரு. அல்லது "விஷயங்களைப்பற்றித் தளர்ந்து போனாலும் போ; அவனைப்பற்றித் தளராமலிருந்தாலும் இரு" என்றும் பொருள் கொள்ளலாம். (நெஞ்சமே சொன்னேன்) நான் உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன், கேட்டுக்கொள். எம்பெருமானே எல்லா வகையான உறவுமாய் இருப்பவன் என்னும் இந்த உபதேசம் எவருக்கு வேண்டுமானாலும் சொல்லக் கூடியதன்று; தகுதியுள்ளவர்களுக்கே சொல்லக் கூடிய ரஹஸ்யார்த்தமாகும். அதை உனக்குச் சொல்லுகிறேன், கேட்டுக்கொள். 'அவன் நம்மை ரக்ஷிக்காமலும் இருக்கிறானே' என்று நெஞ்சத்துக்குக் கருத்தாகக்கொண்டு "அவன் நம்மை ரக்ஷித்தாலும் ரக்ஷிக்காவிட்டாலும் இயற்கை உறவினனான ஸர்வ ரக்ஷகன் அவனே என்பதை எவராலும்

---

அரு:— இருபத்து மூன்றாம் பாட்டு. a, b அவனைப்பற்றி இளையாமையும், விஷயங்களைப்பற்றி இளைக்கையும்.

**24.** தானே தனித்தோன்றல் தன்னளப்பொன் றில்லாதான்
தானே பிறர்கட்கும் தற்றேன்றல்— தானே
இளைக்கிற்பார் கீழ்மேலாம் மீண்டமைப்பா னானல்
அளக்கிற்பார் பாரின்மே லார்.

---

சொன்னேன். (இளைக்கவித்யாதி) பற்றும்போதே இளைக்கும்படிக் கீடாகப் பற்றி. (இளைப்பித்யாதி) இளைக்குப்படிக் கீடாக நாய்களைவிட்டு மோதாதபடி. (நல்குவான் நல்காப்பான்) ரக்ஷிக்கிலும் ரக்ஷிக்கிறன், ரக்ஷியாதொழியிலு மொழிகிறன். (தாய் தந்தை எவ்வுயிர்க்கும்தான்) ஸர்வ ரக்ஷகன் அவன்; c ''ரக்ஷகன் ரக்ஷணத்திலே நெகிழ நின்றன்'' என்று அரக்ஷகரைப் பற்றவொண்ணுதே! ''களைவாய் துன்பம் களையாதொழிவாய்'' என்னும்படியே. 23.

---

மறுக்கமுடியாது'' என்கிறர் மேலே (இளைக்க நமன் தமர்கள் பற்றி) நரகத்திற்குக் கொண்டு சென்று யமதூதர்கள் இந்த ஜீவனை வந்து பற்றும்போது, பற்றுகிற சமயத்திலேயே இவன் மிகத் தளர்ந்து போகும்படி பற்றுவதைக் கூறுகிறர். (இளைப்பெய்த நாய்தந்து மோதாமல்) நரகத்திற்க் கொண்டு சென்ற பின்பு இவன் மேலும் தளரும்படியாக நாய்களை விட்டு மோதாதபடி (நல்குவான் நல்காப்பான்) எம்பெருமான் நம்மை ரக்ஷித்தாலும் சரி, ரக்ஷிக்காமல் விட்டாலும் சரி, (தாய்தந்தை எவ்வுயிர்க்கும் தான்) எந்த நிலையிலும் தாய், தந்தை முதலான எல்லா உறவுகளுமாயிருந்து அனைவரையும் ரக்ஷிப்பவன் அவனே. ரக்ஷிக்கும் அவன் ஒரு சமயம் ரக்ஷிக்காமல் விட்டு விட்டான் என்று காரணம் காட்டி ரக்ஷகரல்லாதவர்களைப் பற்ற முடியாதே! ''களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்'' [திருவாய் 5—8—8] என்று ஆழ்வார் அருளிச் செய்தாரன்றே. ''நீ பற்றினலும் பற்றுவிட்டாலும் அவன் உன்னை ரக்ஷித்துக் கொண்டேயிருக்கிறன்; அதுபோல் அவன் ரக்ஷித்தாலும் ரக்ஷிக்காவிட்டாலும் நீ அவனையே தஞ்சமாகக் கொள்ள வேண்டும்'' என்று கருத்து. 23.

---

c நல்காவிட்டால் தாய்தந்தையானபடி எப்படி? என்ன அருளிச்செய்கிறர் (ரக்ஷகன்) இத்யாதி.

பதவுரை:— தனித்தோன்றல் தானே—ஒப்பற்ற அவதாரங்களை உடையவன் தானே; தன் அளப்பு—தனக்கு உபமானமாக ஒன்றும் இல்லாதான் தானே—ஒரு வஸ்துவையும் உடையவனுயிராதவனும் தானே; பிறர்கட்கும் தற்தோன்றல் தானே-மற்றவர்களுக்கும் ஸ்வப்ரஸித்தமான அந்தர்யாமியும் தானே; தானே இளைக்கில்—இப்படிப்பட்டவன் தானே (ரக்ஷணத்தில்) கைவாங்கி நின்றால், பார் கீழ் மேலாம்—பூமி கீழ்மேலாக நிலைகலங்கிவிடும்; மீண்டு அமைப்பானானால் — மறுபடியும் அதை ரக்ஷிப்பானாகில், அளக்கிற்பார் — (ரக்ஷணத்தில் அவனுக்குள்ள பாரிப்பை) அளவிட்டுச் சொல்லவல்லவர், பாரின் மேல் ஆர் — பூமியின்மேல் யாருளர்?

---

அவ:— இருபத்துநாலாம் பாட்டில்; (தானே) ௧ அந்வய வ்யதிரேகங்களிரண்டாலும் அவனே ரக்ஷகனென்கிறது.

வ்யா:—(தானே தனித்தோன்றல்) ஒரு b ஹேத்வந்தரத்தாலே தோற்றுமவனல்லன். (தன்னளப்பொன்றில்லா

---

24. அவ:—சென்ற பாட்டில் 'அவன் ரக்ஷித்தாலும் ரக்ஷிக்காவிட்டாலும் இயற்கை உறவினனான அவனையே பற்ற வேண்டும்' என்றார். இப்பாட்டில் அந்வய வ்யதிரேகங்களாலே (உடன்பாட்டாலும் எதிர்மறையாலும்) அவனே ரக்ஷகன் என்று நிரூபித்து ''ஆகையால் அவன் ரக்ஷிக்காமல் போவதற்கு இடமேயில்லை'' என்கிறார்.

வ்யா:—(தானே தனித்தோன்றல்) தானே ஒப்பற்ற அவதாரங்களைச் செய்பவன். ஜீவர்களைப்போலே கர்மத்தாலே பிறவாமல் தானே தன் விருப்பத்தினாலே ஜீவர்களை உய்விப்பதற்காகத் தோன்றுகையாலே ''தனித்தோன்றல்'' என்கிறார். இதுவே அவன் ரக்ஷகன் என்பதை நிலைநாட்டித்தருகிறது என்று கருத்து. 'இப்படிப் பட்டவர் வேறு யாரேனும் உண்டோ?'' என்னும் கேள்வியெழக் கூறுகிறார்—(தன்னளப்

---

அரு:— இருபத்துநாலாம் பாட்டு. ௧. a, e ''இளைக்கில்'' என்றது வ்யதிரேகம்; மீண்டமைக்க-அந்வயம், b ஹேத்வந்தரம்-கர்மம்; அதடியாகப் பிறக்குமவனன்றென்றபடி,

தான்) உபமாநரஹிதன். (தானே பிறர்கட்கும் c தற்றேன் றல்) அல்லாதார்க்கும் ஸத்தை அவன். d (தானேயித் யாதி₃) அவன் ரக்ஷணத்திலே நெகிழ நிற்கில் பூ₄மி அத₄ ரோத்தரையாம். e (மீண்டமைப்பானானால்) அவன்றானே

---

பொன்றில்லாதான்) தனக்கு உபமானமாகச் சொல்லக்கூடிய எப்பொருளும இல்லாதவன். ஆகையால் வேறு எவரும் ரக்ஷக ராயிருக்க இடமில்லை என்று கருத்து. (தானே பிறர்கட்கும் தற்றேன்றல்) தன்னைத் தவிர மற்ற அனைவர்க்கும்

28. ஏஷ த ஆத்மா அந்தர்யாம்யம்ருத: [ப்₃ருஹ 5-7]

[ஸர்வாந்தர்யாமியான இப்பரமபுருஷனே (இயற்கையான) அம் ருதத்வத்தை (மரணமின்மையை) உடையவனாய், உனக்கு ஆத்மாவாய் விளங்குபவன்.] என்கிறபடியே அந்தர் யாமியாய் இருந்து அவர்களுடைய ஸத்தை, ஸ்தி₂தி, ப்ரவ்ருத்தி என்னும் அனைத்துக்கும் காரணமாயிருப்பவன். இப்படி மற்றவர்களுடைய அனைத்தும் அவனதீ₄னமாய் இருக்கும்போது, 'அவன் ரக்ஷகனல்லவோ?' என்று ஐயுறு வதற்கும் இடமில்லை என்று கருத்து. (தானே இலைக்கில் பார் கீழ் மேலாப) அவன் ஒரு கண நேரம் ரக்ஷணத்தில் சிறிது கருத்தில்லாதிருந்தானாகிலும் இவ்வுலகம் கீழ் மேலாகப் புரண்டுவிடும். அப்படி இவ்வுலகம் தாறுமாறாக ஆகாமலிருப் பதிலிருந்தே அவன் எல்லாப் போதிலும் ரக்ஷித்துக்கொண்டி ருக்கிறான் என்று கருத்து. வ்யதிரேகத்தாலே (எதிர் மறை யால்) அவனே ஸர்வரக்ஷகன் என்று இதன் மூலம் நிலை நாட்டுகிறார். இனி அந்வயத்தாலே—(உடன் பாட்டாலே) இதை நிலை நாட்டுகிறார் மேலே (மீண்டு அமைப்பானானால்) ப்ரளயகாலத்தில் எல்லாப் பொருளும் அவனோடு ஒடுங்கி

---

c "தற்றேன்றல்—தத்ஸப்₃த₃ம் (28) 'अन्तर्याम्यमृत:'' (அந் யாம்யம்ருத:) என்ற ப்ரஸித்₃தி₄யைப் பற்ற.

25. ஆரானு மாதானும் செய்ய அகலிடத்தை
ஆராய்ந் ததுதிருத்த லாவதே — சீரார்
மனத்தலைவன் றுன்பத்தை யாற்றினேன் வானோர்
இனத்தலைவன் கண்ணனால் யான்.

பதவுரை: — ஆரானும் — யார்வேண்டுமாயினும், ஆதானும் செய்ய — எது வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும்; அகல் இடத்தை — விசாலமான பூமி முழுவதும், ஆராய்ந்து — தேடி, அது — அவர்களுடைய செயல்களை, திருத்தல் ஆவதே — நம்மால் சீர்திருத்தமுடியுமோ? யான் — நான், வானோர் இனம் தலைவன் — நித்யஸூரிகளின் ஸமூஹத்திற்கு ஸ்வாமியாயிருந்து, கண்ணனால் — க்ருஷ்ணனாய் அவதரித்த எம்பெருமானைத் துணைகொண்டு, சீர் ஆர் — (பகவானிடத்தில் அன்பாகிற) நன்மை நிறைந்த, மனம் தலை வன்துன்பத்தை - மனஸ்ஸின் மேலே கிடக்கிற வலிய ஸம்ஸாரதுக்கத்தை, மாற்றினேன் — போக்கடித்தேன்.

---

திரியட்டும் ரக்ஷிப்பானனால்; (அளக்கிற்பார் பாரின் மேலார்) பூமியில் அவனைப் பரிச்சேதிக்க வல்லாருண்டோ? 24

---

அஸத்ஸமமாய் இருந்தபோது மறுபடியும் இவற்றை ரக்ஷிக்க வேண்டுமென்று அவன் திருவுள்ளம் பற்றி இவற்றைப் படைத்தால் (அளக்கிற்பார் பாரின் மேல் ஆர்) அந்தர்யாமியாய் நின்று ஸத்தையை நோக்குவது, சாஸ்த்ரங்களை அளிப்பது, அவதரிப்பது முதலான செயல்களைச் செய்து சேதனர்களை அவன் ரக்ஷிக்கும் வகைகளை இவ்வுலகிலுள்ள எவராலே அளவிட்டு அறிய முடியும்? 24.

அவ:— இருபத்தைந்தாம் பாட்டில்; (ஆரானும்) "பூமியிலுள்ளாரையெல்லாம் நம்மாலே திருத்தப்போமோ? நாம் முன்னம் பகவத்விஷயத்தில் அவகாஹிக்கப்பெற்றோமிறே" என்று ஹ்ருஷ்டராகிறார். வழிபறிக்குமிடத்தே தப்பிப்போனவன் கிழிச்சீரையை அவிழ்த்துப்பார்த்து "இது தப்பப்பெற்றோமே" என்று உகப்பானைப்போலே.

வ்யா:- ௧(ஆரானுமித்யாதி) எல்லாருமேதேனுஞ்செய்க; பூமிப்பரப்பையெல்லாம் நம்மாலே ஆராய்ந்து திருத்தப்

---

25. அவ:—"வணங்கும் துறைகள்..............நின் கண் வேட்கை எழுவிப்பனே" [திருவிருத்தம் 96] முதலான விடங்களில் சேதனர்களைத் திருத்த முற்பட்டீரே; அதில் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றீர்?" என்று சிலர் கேட்க, அதற்குப் பதிலாய் அமைந்தது இப்பாட்டு. அவன் ஸர்வ ரக்ஷகன் என்றார் சென்ற பாட்டில்; "அப்படி ஸர்வரக்ஷகனாய் இருந்த போதிலும் இந்த லீலாவிபூதியில் பத்த சேதனர்களுக்கு ஓரளவுக்கு ஸ்வாதந்த்ர்யத்தைக்கொடுத்து இவர்களைச் செயல்பட வைத்திருக்கையாலே அவன் செய்யும் ரக்ஷண முயற்சிகள் பெரும்பாலானவர்கள் விஷயத்தில் பலிப்பதில்லை; நாம் திருத்த முற்பட்டாலும் செவிசாய்ப்பார் இல்லை. அந்த முயற்சி பலிக்கப்பெற்ற நாம் தப்பிப் பிழைத்தோம்" என்று பேசுகிறார் இப்பாட்டில். வழிப்பறிக்கொள்ளைக்காரர்களிடம் தன் செல்வத்தைப் பறிகொடுக்காமல் தப்பிப்போனவன் பயமற்ற இடத்தில் இருந்து தன் பணமுடிப்பை அவிழ்த்துப் பார்த்து 'இது பறிபோகாமல் பிழைத்ததே!' என்று உகப்பது போலே உகக்கிறார்.

வ்யா:—(ஆரானும் ஆதானும் செய்ய அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே) எவர்வேண்டுமானாலும்

---

அரு:— இருபத்தைந்தாம் பாட்டு. ௧b|வானோரினத்தலைவன் கண்ணனால் யான் சீரார்மனத்தலைவன் துன்பத்தை

போமோ? b (வாநேரித்யாதி₂) 'நித்யஸூரிகளுக்குத் தலைவனாய்வைத்துத் தன்னை இதர ஸஜாதீயனாக்கி ஸுலபனான க்ருஷ்ணனாலே ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄மாகிற ஐஶ்வர்யத்தை யுடைத்தான மநஸ்ஸின் தலையிலே கிடக்கிற ஸம்ஸார து₃:க₂த்தை மாற்றினேன்; எல்லாரையும் நம்மாலே திருத்தப்போமோ?' என்கிறார். 25

---

ஏது வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும்; மிக விரிவான பூ₄மிப்பரப்பை ஆராய்ந்து ஒவ்வொரு சேதனரையும் நம்மால் திருத்த முடியுமோ? "நின் கண் வேட்கை எழுவிப்பனே" என்று ப₄க₃வத்₃ப₄க்தியை லீலா விபூ₄தி முழுவதும் பரப்ப ஆசைப் பட்ட ஆழ்வார் திருவாசிரியத்தில பரோபதேசம் செய்தும் ஒருவரும திருந்தாமையாலே "ஓ ஓ உலகினதியல்வே" [திருவாசிரியம் 6] என்று இவ்வுலகு திருந்தாமலிருக்கும் தன்மையைக் கண்டு கதறியது போலே இங்கும் கதறுகிறார். "தளிர்மதிச் சடையனும்" என்று தொடங்கும் இறுதிப் பாடடில் 'நாம் தப்பிப்பிழைததோம்' என்று ஆறுதலடைந்தது போலே இங்கும் ஆறுதலடைகிறார் மேலே—(வானோர் இனத் தலைவன் கண்ணனால் சீரார் மனத்தலை வன்துன்பத்தை யான் மாற்றினேன்) "நித்யஸூரிகளுக்குத் தலைவனாயிருந்தும் தன்னை மனிதர்களில் ஒருவனாக்கி அனைவருக்கும் எளியனான கண்ணனைக்கொண்டு அந்த எம்பெருமானுடைய இருப்பிடமாயிருக்கும் செல்வத்தை உடைய மனத்தின்மேலே இருக்கும் ஸம்ஸாரத்துன்பத்தை நான் மாற்றிக்கொண்டேன். அனைவரையும் நம்மால் திருத்த முடியுமோ?" என்கிறார். 25.

---

மாற்றினேன்-ஆரானுமாதானும் செய்ய; அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே] என்றந்வயம். 25

**26.** யானுமென் னெஞ்சு மிசைந்தொழிந்தோம்வல்வினையைக்
கானும் மலையும் புகக்கடிவான் — தானோர்
இருளன்ன மாமேனி யெம்மிறையார் தந்த
அருளென்னும் தண்டா லடித்து.

பதவுரை— ஓர் இருள்தான் அன்ன — இருள்தானே ஒரு வடிவு கொண்டாற்போலுள்ள, மாமேனி — மேலான திருமேனியை உடைய, எம் இறையார் — எம்பெருமான், தந்த — கொடுத்த, அருள் என்னும் தண்டால் — (அப்பெருமானுடைய) கிருபை என்னும் தடியாலே, அடித்து— புடைத்து, வல் வினையை — (எங்களுடைய) கொடிய பாபத்தை, கானும் மலையும் புக — காட்டிலும் மலையிலும் நுழையும்படி, கடிவான்— ஓட்டுவதற்காக, யானும என் நெஞ்சும் — நானும் என் மனஸ்ஸும், இசைந்தொழிந்தோம் — ஸம்மதித்து விட்டோம்.

---

அவ: — இருபத்தாறும் பாட்டில்; (யானும்) "மாற்றினேன்" என்று கர்த்ருத்வம் தோற்றச்சொன்னார்; அந்த கர்த்ருத்வமாவது 'அவன்மேல் விழ, என்னுடைய விலக்காமை' என்கிறார்.

வ்யா: — (யானுமித்யாதி) இத்தலையில் குறைவற்றது; பொருந்தாத தலையும் பொருந்திற்று. பொருந்துமவன்

---

26. அவ:— வன் துன்பத்தை மாற்றினேன்' என்று தான் மாற்றினது போலே சொன்னார் சென்றபாட்டில். "அவன் மேல் விழுந்து என்னைக் கைக்கொள்ள, அதை விலக்காமல் இருந்ததே நான் செய்தது" என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:—(யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்) எம்பெருமான் என்னைக் கைக்கொள்ளச்செய்யும் முயற்சிக்கு யானும் என் நெஞ்சும் இசையாமலிருந்ததனாலேயே இவ்வளவு நாள் துன்பப்பட நேர்ந்தது; இப்போது அந்த இசைவு உண்டானபடியாலே அந்தக் குறை நீங்கிற்று. அநாதி

பொருந்தச்சொல்ல வேண்டாவிறே. (தானோரிருளித்யாதி) ஒ மற்றொன்றுகாணாமல், ச்ரமஹரமான வடிவையுடைய என் ஸ்வாமியுடைய ப்ரஸாதமாகிற தண்டாலே ஹிம்ஸித்து. (வல்வினையித்யாதி) அவன்பிரிவாகிற மஹாபாபத்தை, காட்டிலும் மலையிலும் புகும்படி ஓட்டும்படிக்கீடாக யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம். 26

---

காலமாகப் பொருந்தாதிருந்த யானும் என் நெஞ்சும் பொருந்தப் பெற்றோம். அப்படியிருக்க, அநாதிகாலமாக எங்களைப் பொருந்தவைப்பதற்காகப் பாடுபட்டவன் எங்களைக் கைக்கொள்ளச் சொல்ல வேண்டுமோ? 'எந்தப் பேற்றைப் பெறுவதற்கு நீங்கள் இசைந்தீர்கள்? என்ற கேள்வி எழக் கூறுகிறார்— (வல்வினையைக் கானும் மலையும் புகக்கடிவான்) அவனையும் எங்களையும் பிரித்து வைத்திருந்த பெரும் புண்ய பாபங்களை காட்டிலும் மலையிலும் சென்று ஒளியும்படி விரட்டுவதாகிற பேற்றைப் பெறுவதற்கே "யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்" என்கிறார். "அயோக்யன்" என்று அகன்று அவனைப் பிரிந்ததை "வல்வினை" [மஹாபாபம்] என்று கூறுவதாகவும் கொள்ளலாம். இப்பேற்றைப் பெறுவதற்கு உபமிடம் ஏதேனும் கைம்முதல் உண்டோ? என்னும் கேள்வியெழக் கூறுகிறார்— (தானோர் இருளன்ன மாமேனி எம் இறையார் தந்த அருளென்னும் தண்டால் அடித்து) என்னிடம் ஒரு கைம்முதல் இல்லை; இப்பேற்றைப் பெறுவதற்கு வேறு உபாயமும் இல்லை. கண்டார் களைப்பை ஆற்றும் இருள் தானே வடிவெடுத்தது போன்ற மேலான திருமேனியை உடைய எம்பெருமானுடைய அருளாகிய தடியாலே புடைத்து வல்வினையை ஓட்டினோம் என்றபடி. அவன் அருளே உபாயமேயொழிய வேறொன்றில்லை என்று கருத்து. 26.

---

அரு:— இருபத்தாறாம் பாட்டு. ஒ (மற்றொன்று காணாமல்) - வினையைப்போக்குகைக்கு வேறொரு உபாயங்காணாமல், அவன் அருளாலே போக்கினோமென்றபடி. 26

27. அடியால் படிகடந்த முத்தோ அதன்றேல்
முடியால் விசும்பளந்த முத்தோ— நெடியாய்
செறிகழல்கள் தாள்நிமிர்த்துச் சென்றுலக மெல்லாம்
அறிகிலமால் நீயளந்த வன்று.

பதவுரை:— நெடியாய்—ஸர்வாதி₄கனே! நீ—நீ, செறி கழல்கள்—நெருங்க அணிந்த தண்டைச்சிலம்புகளையுடைய, தாள்—திருவடிகளை, நிமிர்த்து—வளரச்செய்து, உலகமெல்லாம் சென்று— எல்லாவுலகங்களுக்கும் போய், அளந்த அன்று—திருவுலகளந்தருளிய அக்காலத்தில், அடியால்—திருவடியினால், படி கடந்த முத்தோ—பூமி முழுவதையும் அளந்ததனாலுண்டான ஸந்தோஷமோ (இப்போது உன் திருமுகமண்டலத்தில் நான் காண்பது)? அது அன்றேல்—அது அல்லவாகில், முடியால்—உன் திருமுடியாலே, விசும்பு அளந்த முத்தோ—ஆகாசத்தை அளந்ததனாலுண்டான ஸந்தோஷமோ (நான் காண்பது)? அறிகிலம் ஆல்—நாம் அறிகிலோம்; என்ன ஆச்சரியம்!

---

அவ: - இருபத்தேழாம்பாட்டு. (அடியால்) "இசைந்தொழிந்தோம்" என்கிறவித்தாலே தந்தலையில் குறையற்றது. "அருளென்னுந் தண்டால்" என்கையாலே பெறுவதும் அவன் ப்ரஸாத₃த்தாலே என்னுமிடம் சொல்லிற்று. இனி அவர்க்கு அநுப₄வத்திலேயிறே அந்வயம்; ஆகையாலே அநுப₄விக்கிறார்.

---

27. அவ: — "இசைந்தொழிந்தோம்" [26] என்பதால் தம்மிடம் குறையில்லாமையையும், "அருளென்னும் தண்டால்" என்பதால் பெறுவதும் அவனருளாலேயே என்பதையும் சென்ற பாட்டில் சொன்னார். இனி இவர் செய்யவேண்டியது அவனை அநுப₄விப்பதேயன்றோ! ஆகையால் இப்பாட்டில் அநுப₄விக்கிறார்.

வ்யா:—(அடியித்யாதி) முத்தென்று—மௌக்த்யமாய், அத்தாலே லக்ஷணையாலே அழகாய், அடியாலே பூமியையளந்த அழகோ? திருமுடியாலே ஆகாசத்தை அளந்த அழகோ? என்னவுமாம். "செறிகழல்" என்கையாலே திருவடிகளிலே முத்துண்டாகையாலும், "நீண்முடி வெண்முத்த வாசிகைத்தாய்" என்கையாலே திருமுடியிலே முத்துண்டாகையாலும், அடியாலே படியையளந்தன முத்துக்களோ? முடியாலே விசும்பை அளந்தன முத்துக்களோ? "சிலம்பும் செறிகழலும்" என்று இதுக்குள்ளீடான முத்து ப்ரகாசமாதல், சாத்தின முத்

---

வ்யா:—(அடியால் படிகடந்த முத்தோ அதன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ) "முக்தம்" என்னும் வடசொல் தமிழில் "முத்" என்று ஆகியிருப்பதாகக் கொண்டால், சிறுபிள்ளையைக் குறிக்கும் முக்தம் சப்தமும் இங்கு லக்ஷணையாலே 'அழகு' என்று பொருள்படுகிறது. "யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்" என்று ஆழ்வார் அருளியவுடன் எம்பெருமான் மிகவும் மகிழ்ந்தான். அப்போது அவனுடைய அழகை அநுபவிக்கிறார். இப்போது நான் காணும் அழகு அடியாலே நீ பூமியை அளந்தபோது இருந்த அழகோ? அல்லது முடியாலே ஆகாசத்தை அளந்தபோதிருந்த அழகோ? என்கிறார். அன்றிக்கே, "முத்து" என்று நவரத்னங்களில் ஒன்றாகிற முத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். மேலே "செறிகழல்" என்று திருவடி முத்துச்சிலம்பால் அலங்கரிக்கப் பட்டிருந்ததாகச் சொல்லுகையாலும், "நீண்முடி வெண்முத்த வாசிகைத்தாய்" [திருவிருத்தம் 50] என்று திருமுடியிலே முத்து உண்டாகையாலும், "அடியாலே பூமியை அளந்தவை முத்துக்களோ? முடியாலே ஆகாசத்தை அளந்தவை முத்துக்களோ?" என்று கூறி ஆபரண அழகை அனுபவிப்பதாகவும் கூறலாம். "சிலம்பும் செறிகழலும்" [மூன் திருவ 90] என்று ஆபரணத்துக்குள்ளே இருக்கும் முத்து வெளியில்

தாதல். (அறிகிலமால்) அறிகிறிலோம், இப்போது உனக்கேற்படுகிற * ஹர்ஷம் திருவடிகளில் கீழே பூமியையிட்டுக்கொண்ட ஹர்ஷமோ? திருமுடியாலே ஆகாஶாவகாஶத்தையெல்லாம் வ்யாபித்த ஹர்ஷமோ? என்றுமாம். [நெடியாய் செறிகழல்கள் தாள் நிமிர்த்துச் சென்றுலகமெல்லாம் நீயளந்தவன்று-அடியால் படிகடந்தமுத்தோ - அதன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ-அறிகிலமால்] 27

---

தோன்றுகிறபடியாலோ அல்லது முத்து செறிந்த தண்டை அணிந்திருக்கையாலோ திருவடிகளிலும முத்து உண்டு என்னக் குறையில்லை. அல்லது "முத்" என்று வடமொழியில் ஆனந்தத்தைக் குறிக்குமாகையாலே, எம்பெருமானைப் பார்த்து இப்போது உன்னிடம் காணப்படும் ஆனந்தம் திருவடிகளாலே உலகை அளந்ததால் உண்டான ஆனந்தமோ? அல்லது திருமுடியாலே ஆகாசத்தையெல்லாம் வியாபித்ததால் உண்டான ஆனந்தமோ என்று கேட்பதாகவும் கொள்ளலாம். (அறிகிலம்) இதை எம்மால் அறிய முடியவில்லை. (ஆல்) என்ன ஆச்சர்யம்! என்கிறார். (நெடியாய்) திரிவிக்ரமனே! என்கிறார்; அல்லது அனைவரிலும் மேம்பட்டவனே! என்கிறாராகவுமாம். [நெடியாய் செறிகழல்கள் தாள் நிமிர்த்துச் சென்றுலகமெல்லாம் நீயளந்தவன்று—அடியால் படிகடந்த முத்தோ—அது அன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ அறிகிலம் ஆல்] என்று கூட்டிப் பொருள்சொல்வது. "கழல் கொள் தாள்" என்றும் பாடம் கொள்வர். 27.

---

அரு:— இருபத்தேழாம் பாட்டு. அடியாலும் முடியாலுமோ? என்னுதல். அவற்றிலுண்டான முத்தாலேயோ என்னுதல் முத்தென்றது-அழகாதல். முத்துத்தானுதல். ஹர்ஷமாதல். அறிகிலம். ஆல்-ஆஶ்சர்யம். 27.

---

* 'முத்' என்னும் வடசொல் ஹர்ஷம் என்னும் பொருளையுடையது

28. அன்றேநங் கண்காணு மாழியான் காருருவம்
இன்றேநாம் காணு திருப்பதுவும்—என்றேனும்
கட்கண்ணால் காணுத வவ்வுருவை நெஞ்சென்னும்
உட்கண்ணேல் காணு முணர்ந்து

பதவுரை:— கண் கண்ணுல்—கண் என்று பெயருடைய புறக்கண்ணுல், என்றேனும் காணுத — எக்காலத்திலும் காணமுடியாத, அவ்வுருவை – அத்திருமேனியை, நெஞ்சு என்னும்—மனம் என்னும், உள் கண்—உள்ளே உள்ளகண், உணர்ந்து காணுமேல்—ஸாக்ஷாத்கரிக்குமாகில், 'அன்றே— அப்பொழுதே, ஆழியான் கார் உருவம் — திருவாழியைக் கையிலுடையவனுடைய கறுத்த திருமேனியை, நம் கண் காணும்—நம்முடைய வெளிக்கண்ணும் காணும்; நாம் காணுதிருப்பதுவும் — நாம் எம்பெருமானைப் பார்க்காமல் இருப்பதுவும், இன்றே—(நெஞ்சால் அவனைக் காணுத) இப் பொழுதே.

---

அவ:— இருபத்தெட்டாம் பாட்டில்; (அன்றே) ௧திரு வுலகளந்தருளின வடிவை அநுஸந்திக்கையாலே அவனைக் காண ஆசைப்பட்டு, இது கிடையாமையாலே ௨ வெறுத் தவர், 'அவன் பக்கல் குறையுண்டோ? நம்முடைய குறை யிறே' என்று த்ருப்தராகிருர்.

---

28. அவ:— சென்றபாட்டில் எம்பெருமான் உலகளந்த வடிவை அநுஸந்திக்கையாலே அந்த வடிவைப் புறக்கண் ணாலே காணவேண்டுமென்று ஆசைப்பட்டு, அப்படிக் காண

---

அரு:— இருபத்தெட்டாம் பாட்டு, ௩ த்ருப்தி சொல்லு கையாலே வெறுப்பு அர்த்தாத் வந்தது; ௪ "நெஞ்சென்னு

தாதல். (அறிகிலமால்) அறிகிறிலோம், இப்போது உனக்கோடுகிற * ஹர்ஷம் திருவடிகளில் கீழே பூமியையிட்டுக் கொண்ட ஹர்ஷமோ? திருமுடியாலே ஆகாஶாவகாஶத்தையெல்லாம் வ்யாபித்த ஹர்ஷமோ? என்றுமாம். [நெடியாய் செறிகழல்கள் தாள்நிமிர்த்துச் சென்றுலகமெல்லாம் நீயளந்தவன்று-அடியால் படிகடந்தமுத்தோ - அதன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ-அறிகிலமால்] 27

---

தோன்றுகிறபடியாலோ அல்லது முத்து செறிந்த தண்டை அணிந்திருக்கையாலோ திருவடிகளிலும முத்து உண்டு என்னக் குறையில்லை. அல்லது "முத்" என்று வடமொழியில் ஆனந்தத்தைக் குறிக்குமாகையாலே, எம்பெருமானைப் பார்த்து இப்போது உன்னிடம் காணப்படும் ஆனந்தம் திருவடிகளாலே உலகை அளந்ததால் உண்டான ஆனந்தமோ? அல்லது திருமுடியாலே ஆகாசத்தையெல்லாம் வியாபித்ததால் உண்டான ஆனந்தமோ என்று கேட்பதாகவும் கொள்ளலாம். (அறிகிலம்) இதை எம்மால் அறிய முடியவில்லை. (ஆல்) என்ன ஆச்சர்யம்! என்கிறார். (நெடியாய்) திரிவிக்ரமனே! என்கிறார்; அல்லது அனைவரிலும் மேம்பட்டவனே! என்கிறாராகவுமாம். [நெடியாய் செறிகழல்கள் தாள் நிமிர்த்துச் சென்றுலகமெல்லாம் நீயளந்தவன்று—அடியால் படிகடந்த முத்தோ—அது அன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ அறிகிலம் ஆல்] என்று கூட்டிப் பொருள்சொல்வது. "சுழல் கொள் தாள்" என்றும் பாடம் கொள்வர். 27.

---

அரு:— இருபத்தேழாம் பாட்டு. அடியாலும் முடியாலுமோ? என்னுதல். அவற்றிலுண்டான முத்தாலேயோ என்னுதல் முத்தென்றது-அழகாதல். முத்துத்தானுதல். ஹர்ஷமாதல். அறிகிலம். ஆல்-ஆஶ்சர்யம். 27.

---

* 'முத்' என்னும் வடசொல் ஹர்ஷம் என்னும் பொருளையுடையது

28. அன்றேநங் கண்காணு மாழியான் காருருவம்
இன்றேநாம் காணு திருப்பதுவும்—என்றேனும்
கட்கண்ணால் காணாத வவ்வுருவை நெஞ்சென்னும்
உட்கண்ணேல் காணு முணர்ந்து

பதவுரை:— கண் கண்ணால்—கண் என்று பெயருடைய புறக்கண்ணால், என்றேனும் காணாத — எக்காலத்திலும் காணமுடியாத, அவ்வுருவை – அத்திருமேனியை, நெஞ்சு என்னும் — மனம் என்னும், உள் கண்—உள்ளே உள்ளகண், உணர்ந்து காணுமேல்—ஸாக்ஷாத்கரிக்குமாகில், அன்றே— அப்பொழுதே, ஆழியான் கார் உருவம் — திருவாழியைக் கையிலுடையவனுடைய கறுத்த திருமேனியை, நம் கண் காணும்—நம்முடைய வெளிக்கண்ணும் காணும்; நாம் காணாதிருப்பதுவும் — நாம் எம்பெருமானைப் பார்க்காமல் இருப்பதுவும், இன்றே—(நெஞ்சால் அவனைக் காணாத) இப் பொழுதே.

அவ:— இருபத்தெட்டாம் பாட்டில்; (அன்றே) உதிரு வுலகளந்தருளின வடிவை அநுஸந்திக்கையாலே அவனைக் காண ஆசைப்பட்டு, இது கிடையாமையாலே உ வெறுத் தவர், 'அவன் பக்கல் குறையுண்டோ? நம்முடைய குறை யிறே' என்று த்ருப்தராகிறார்.

28. அவ:— சென்றபாட்டில் எம்பெருமான் உலகளந்த வடிவை அநுஸந்திக்கையாலே அந்த வடிவைப் புறக்கண் ணாலே காணவேண்டுமென்று ஆசைப்பட்டு, அப்படிக் காண

அரு:— இருபத்தெட்டாம் பாட்டு, உ த்ருப்தி சொல்லு கையாலே வெறுப்பு அர்த்தாத் வந்தது; உ "நெஞ்சென்னு

வ்யா:— (அன்றேயித்யாதி₃) ஸர்வேஶ்வரன் கறுத்த திருமேனியை நம்முடைய கண் அன்றே காணும். (என்றேனும் இத்யாதி₃) ஒருநாளும் ப₄க₃வத்₃விஷயத்தைக் காணாமையாலே b "பீலிக்கண்" என்றவோபாதி கண்ணென்று பேரான கண்ணால்காணப்போகாத அவனுடைய திருமேனியை நெஞ்சாகிற உட்கண் உணர்ந்து காணுமாகில் அன்றே நம்கண் காணுமாழியான் காருருவம்.

---

இயலாமையாலே முதலில் வெறுத்தவர், சிறிது சிந்தித்த பின்பு "நாம் காணாதது அவனுடைய குறை அன்று, நம்முடைய குறையே" என்று ஆறுதல் அடைகிறார்.

வ்யா:—(அன்றே நம் கண் காணும் ஆழியான் காருருவம்) திருவாழியாழ்வானைக் கையிலே த₄ரித்த ஸர்வேஶ்வரனுடைய கறுத்த திருமேனியை, நம்முடைய புறக்கண் அன்றுதான் காணும். அது என்று? எனில்: (என்றேனும் கண் கண்ணல காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உள்கண் உணர்ந்து காணுமேல்) ஒரு நாளும் எம்பெருமானைக் காணாமையாலே மயில் பீலிக்கண்போலே, கண்ணென்று பெயர்பெற்ற புறக்கண்ணாலே காண இயலாத அவனுடைய திருமேனியை நெஞ்சாகிய உட்கண் உணர்ந்து காணுமாகில், அன்று தான் நம்முடைய புறக்கண் ஆழியானுடைய காருருவத்தைக் காணும். (இன்றே நாம் காணாதிருப்பதுவும்) நெஞ்சாகிற உட்கண் உணர்ந்து காணாத இன்றே நாம் புறக்கண்ணால் காணாதிருப்பது. அந்த உட்கண் உணர்ந்து காணும் அன்று நம்புறக் கண்ணும் காணும். "யானும் என் நெஞ்சும் இசைந் தொழிந்தோம்' [26] என்று இவர் சொல்லியிருக்கும்போது உட்கண் இப்போது காணவில்லை என்று சொல்லுவதற்குக்

---

முட்கண்ணாலே உணர்ந்தால் இன்றும் காணலாம். அதில்லாமையாலே காணப்போகாது, ஆகையாலே அவன்பக்கல் குறையுண்டோ நம்மதன்றோகுறை" என்று த்ருப்தரா கிறார் என்றபடி. b "கட்கண்" -மீமிசையாலே கண்ணென்று

29. உணர வொருவர்க் கெளியனே செவ்வே
இணரும் துழாயலங்க லெந்தை — உணரத்
தனக்கெளிய ரெவ்வளவ ரவ்வளவ னானால்
எனக்கெளிய னெம்பெருமா னிங்கு.

---

(இன்றே நாங்காணாதிருப்பதுவும்) c நெஞ்சாகிற உட்கண் உணர்ந்து காணாதவின்றே நாம்காணாதிருப்பது;d உணர்ந்து காணுமன்று நங்கண் காணும். "யானுமென்னெஞ்சுமிசைந் தொழிந்தோம்" என்று சொன்னானாகில், உட்கண் காணா தொழிகையாவதென்னென்னில்; பரமபக்தி பிறந்து அவ் வஸ்துவையொழியச் செல்லாமை யாதொரு போது பிறக் கும். அப்போது காணும் நங்கண்; அவ்வஸ்துவை யொழியச் செல்லுமின்று காணப்போகாதென்கிறது. கட் கண் என்றது - பீலிபோலேயான புறக்கண். 28

---

கருத்தென்ன? எனில்—எம்பெருமானை விட்டுப் பிரிந்தால் க்ஷணநேரமும் தரிக்கமாட்டாமையாகிற பரமபக்தி உண் டாகி எம்பெருமானைப் பிரிந்து உயிர் தரிக்க முடியாமை யாகிற நிலை எப்போது பிறக்கிறதோ அப்போதே நம் புறக் கண் காணும் என்று கருத்து. எம்பெருமானை விட்டுப் பிரிந்து தரித்திருக்கும் இப்போது புறக்கண் காண இயலாது என்று கருத்து. "கட்கண்" என்றது மயிர்ப் பீலியில் உள்ள கண்ணைப்போலே கண் என்று பெயர் மாத்திரமேயான புறக்கண் என்று பொருள். 28

---

போராயிருக்கிற கண்ணென்றபடி. c. d ஜ்ஞாநமுண்டாகில் காணலாம். இல்லாதபோது காணப்போகாதென்றபடி. ["நெஞ்சென்னுமுட்கண்ணால் காண உணர்ந்தவன்று நங் கண்காணும். உணராத இன்றே நாம் காணாதிருப்பதுவும்] என்றந்வயம். 28

பதவுரை:— இணரும்—மலர்ந்த, துழாய் அலங்கல் எந்தை—துழாய் மாலையையுடைய எம்பிரான், ஒருவர்க்கு செவ்வே உணர எளியனே—(ஸ்வயத்நபரர்ான) எவருக்கும் நன்றாக அறிய ஸுலபனோ (அல்லன்), தனக்கு எளியர்—தன் அடியார்கள், எவ்வெளியர்—எவ்வளவு அன்பை உடையவர்களோ, அவ்வளவன் — அவ்வளவு அன்பையே அவர்களிடம் தான் உடையவனாயிருப்பன்; ஆனால் — ஆகை யாலே, எனக்கு — (அவனிடம் பேரன்பு கொண்ட) எனக்கு, எம்பெருமான் — என் ஸ்வாமியாகிய அவன், இங்கு உணர எளியன் — இவ்வுலகத்திலேயே அறிந்து காணும்படி ஸுலபனாவான்.

அவ:— இருபத்தொன்பதாம் பாட்டில்; (உணர) எல்லார்க்கும் இவ்வவஸ்தைத் பிறக்கையரிது; a எனக்கிவ்வ வஸ்தைத் பிறந்ததென்கிறார்.

வ்யா:— (உணரவித்யாதி) ஒருத்தருக்கும் b சத்ருக்தயா c இயத்தயா உணரப்போகாதான். (29) "யஸ்யாமதம் தஸ்ய

29. அவ:— "எனக்குப் பிறந்திருக்கும் பரபக்தி நிலை எல்லாருக்கும் பிறப்பது அரிது. அப்படிப்பட்ட பரபக்தி நிலை எனக்குப் பிறந்ததாகையாலே எம்பெருமான் எனக்கு எளியனாயிருக்கிறான்" என்கிறார்.

வ்யா:— (செவ்வே உணர ஒருவர்க்கு எளியனே) எவருக்கும் எம்பெருமானை 'இத்தகையவன்' என்று த்ருஷ்டாந்தம் காட்டிப் பேசுவதும், இப்படிப்பட்டவன் என்று அளவிட்டுப்பேசுவதும் இயலாது. (ஒருவர்க்கு) ஜ்ஞாநசக்திகளால் எவ்வளவு பெரியவராய் இருந்தாலும் அவராலும் முற்கூறிய படி தமது முயற்சியால் அவனை அறியமுடியாது.

29. யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ: |
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்॥
[கேநோபநிஷத் 2-3]

அரு:— இருபத்தொன்பதாம் பாட்டு. a "எனக்கெளியன்" என்கையாலே (எனக்கிவ்வவஸ்தைத்) என்கிறது. b(சத்ருக்தயா) த்ருஷ்டாந்ததயா. c (இயத்தயா) இவ்வளவென்று பரிச்சேதித்து.

मतं - अविज्ञातं विजानतां'' (யஸ்யாமதம் தஸ்யமதம்-அவிஜ்ஞாதம் விஜாநதாம்) (இணருந்துழாயலங்கலெந்தை) அபரிச்சிந்ந வஸ்துவினுடைய லக்ஷணம் தோளில் திருத்துழாய் மாலையையுடையனாகை. (இணரும்) தன்னிலத்திலும் இவன் தோளில் விகஸியாநிற்கும். தேவர்கள் தோளில் மாலை வாடாது. ஸர்வாதிகனாகையாலே இவன் தோளிலிட்டது அரும்பியாநிற்கும். (உணரவித்யாதி) தனக்கு நல்லவர்களுணர எவ்வளவர், அவ்வளவனாய்

[எவனுக்கு ப்ரஹ்மம் (அளவிட்டு) அறியப்படவில்லையோ அவனுக்கு (அது) அறியப்பட்டதாகிறது. எவனுக்கு (ப்ரஹ்மம்) அறியப்பட்டதாகிறதோ அவன் (அதை) அறியவில்லை. (அளவிட்டு) அறிந்தவர்களுக்கு அறியப்படாததாகவும், (அளவிட்டு) அறியாதவர்களுக்கு அறியப்பட்டதாகவுமாகிறது (பரப்ரஹ்மம்)] என்று உபநிஷத்தும் உரைத்ததன்றோ. அத்தகைய பொருள் எது? எனில்— (இணரும் துழாய் அலங்கல் எந்தை) அளவற்ற பரம்பொருளுக்கு லக்ஷணம் தோளில் திருத்துழாய் மாலையை உடையவனாய் இருக்கையேயாகும். "நாறு இணர்த்துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" என்று மோக்ஷமளிக்கவல்ல பரம் பொருளுக்குத் துழாய்மாலை அணிந்திருப்பதே இலக்கணம் என்று பரிபாடலில் சங்கத்தமிழரும் முழங்கினர். (இணரும்) மலரும். துழாய் மாலை எம்பெருமான் தோளில் இட்டவுடன் தனக்குரிய நிலத்தில் இருப்பதைக்காட்டிலும் மலர்ந்து நிற்கும். தேவர்கள் தோளில் இட்ட மாலை வாடாயிருக்கும். இவன் தேவாதி தேவனாகையாலே இவன் தோளிலிட்டது முன்னிலும் அழகாக மலரத் தொடங்கும். அப்படி ஒருவருக்கும் அறியமுடியாதவனானால் இவன் இல்லாத வஸ்துவாக வேண்டிவருமே? எனில்— (உணரத்தனக்கெளியர் எவ்வளவர் அவ்வளவன்) அளவிட்டு அறியமுடியாதவன் என்று சொன்னதேயொழிய அடியோடு அறியமுடியாதவன் என்று சொல்லவில்லை. தன்னடியார்கள் தன்னிடம் எவ்வளவு அன்பை உடையவர்களோ தானும்

1. (எளியர்) ஸ்நேஹிகள்.

நிற்கும். (30) "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த" (ப்ரியோ ஹி ஜ்ஞாநி நோऽத்யர்த்தம்) "தம்மையுகப்பாரைத் தாமுகப்பர்" என்னும் படியே. (ஆனால் எனக்கெளியனெம்பெருமானிங்கு) தனக்கு நல்லவர்கள் நினைத்தவளவிலே அமைக்குமாகையாலே என் ஸ்வாமி எனக்கெளியன். 29.

30. இங்கில்லை பண்டுபோல் வீற்றிருத்தல், என்னுடைய
செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம்— அங்கே
மடியடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம்மீண்
டடியெடுப்ப தன்றோ வழகு.

---

அவர்களிடம் அவ்வளவு அன்பை உடையவனுய்க் காட்சி அளிப்பான். 'உணர' என்றது அறிவின் வகையான அன்பைக் காட்டுகிறது.

30 தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: ஏகபக்திர் விசிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம
ப்ரிய: ॥ [கீதை 7-17]

[(என்னுடன்) எப்போதும் சேர்ந்திருப்பவனும், என்னிடம் மட்டும் அன்புசெய்பவனுமான ஞானி அந்த நால்வருள் மேலானவன். நான் ஞானிக்கு மிகவும் ப்ரியனன்றோ. (அப்படியே) அவனும் எனக்குப் பிரியமானவன்.] என்று கீதையிலும், 'தம்மையுகப்பாரைத் தாமுகப்பர்' [நாச் திரு 11-10] என்று நாச்சியாராலும் அருளிச்செய்யப்பட்டதன்றோ. (ஆனால் எனக்கெளியன் எம்பெருமான் இங்கு) ஆனகையாலே அவனை உட்கண்ணாலே காணக்கூடிய பரபக்தியுடைய எனக்கு என் ஸ்வாமியாகிய அவன் இவ்வுலகில மனக்கண்ணாலே காணும்படி எளியனாகவே இருக்கிறான். சென்றபாட்டில் "இன்றே நாம் காணாதிருப்பதுவும்" என்று பரபக்தி பிறக்காமையாலே புறக்கண்ணால் காண இயலவில்லை என்றார். "எனக்கெளியன்" என்று பரபக்தி நிலை விளைந்திருக்கையாலே 'மனக்கண்ணுக்கு எளியன்' என்கிறார். ஆகையால் இரண்டு பாட்டுக்களுக்கும் முரண் இல்லை. 29

பதவுரை: — இங்கு — (என்னுடைய கர்மங்களுக்கு) இந்த மனஸ்ஸில், பண்டு போல் — முன்போல், வீற்றிருத்தல் இல்லை — பரவி உட்கார்ந்திருக்க இடமில்லை; என்னுடைய செங்கண்மால் — என்ஸ்வாமியாய், சிவந்தகண்களையுடையவனை ஸர்வேஶ்வரனுடைய சீர்க்கும் - திருக்குணங்களுக்கும் (இடமில்லாதபடி), உள்ளம் சிறிது — என நெஞ்சு மிகச்சிறியதாயிருக்கிறது. வல்வினையார் தாம் — என்னுடையகொடிய பாபம்தான், அங்கே — (முன் அரசு செலுத்திய) அங்கேயே, மடி அடக்கி நிற்பதனில் — புடவையை ஒதுக்கிக்கொண்டு ஒடுங்கிக்கிடப்பதைக் காட்டிலும், மீண்டு — அங்கு நின்று போய், அடி எடுப்பதன்றே அழகு — கால் வாங்குவதன்றே அழகு.

---

அவ: — முப்பதாம் பாட்டில்; (இங்கில்லை) அவனருமையும் பெருமையுங்கிடக்கிடீர்; நம்மை நலிந்து போந்த பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமான கர்மங்களுக்கு நம்முடைய பக்கல் இருப்பிடமில்லை என்கிறார்.

வ்யா: — (இங்கித்யாதி) பண்டுபோல் இங்கு விஸ்த்ருதமாக இருக்கவொண்ணாது — வீற்றிருக்கவொண்ணாது.

---

30. அவ: — "அவனுடைய அருமையும் பெருமையும் கிடக்கட்டும். நமது நெஞ்சில் அவனுடைய குணங்களை அநுஸந்தித்த பிறகு, அநாதிகாலமாக நம்மைத் துன்புறுத்தியவையாய், அவனையடைவதற்குத் தடையாயிருந்தவையான கர்மங்களுக்கு நம் நெஞ்சில் இடமில்லை" என்கிறார்.

வ்யா: —(இங்கில்லை பண்டு போல் வீற்றிருத்தல்) அநாதிகாலமாய் இருந்தது போல் என் நெஞ்சில் ஆட்சி செலுத்திக்கொண்டு பரவி உட்கார்ந்திருக்கக் கர்மங்களுக்கு இடமில்லை. வீற்றிருத்தல்— வீறு தோற்ற இருத்தல், இப்போது

a (என்னுடையவித்யாதி) b வகுத்த விஷயத்துக்கும் இடம் போராது. c ஐஶ்வர்யவாத்ஸல்யஸூசகமான கண்களை யுடைய ஸர்வேஶ்வரனுடைய குணங்களுக்கு என்னுள்ளம் சிறிது. (அங்கே d மடியித்யாதி) அங்கேயொரு மூலையிலே ஒதுங்கித்திரிந்தாலோவென்னில்; முதன்மை செய்த வூரிலே புடைவையை ஒதுக்கிக்கொடு திரிவதில் அங்கு நின்றும் சடக்கெனக் கால்வாங்குகையன்றோ அழகு. 30

---

அப்படி என்ன வந்து விட்டது? எனில்—(என்னுடைய செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம்) என் ஸ்வாமியாய், சிவந்த கண்களை உடைய ஸர்வேஶ்வரனுக்கும் இடம் போதாதபடி என் நெஞ்சம் மிகச் சிறிதாய் இருக்கிறது. 'செங்கண்மால்' என்கையாலே இவன் ஸர்வேஶ்வரன் என்றும், அடியாரிடம் பேரன்புடையவன் என்றும் உணர்த்தப்படுகிறது. மால்—என்றது மிகப்பெரிய ஸர்வேஶ்வரன் என்றபடி. அங்கே "ஒருமூலையிலே நானும் ஒடுங்கிக் கொள்கிறேனே" என்று பாபத்திற்குக் கருத்தாகக் கொண்டு கூறுகிறார்—(அங்கே மடியடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம் மீண்டு அடி எடுப்பதன்றோ அழகு) ஆட்சி செலுத்தி வந்த இடத்திலே அடங்கி ஒடுங்கி மூலையில் நிற்பதைக் காட்டிலும், அங்கிருந்து புறப்பட்டு வெளிச்செல்வதே வல்வினையாராகிய பெரியவருக்கு கௌரவமாகும் என்கிறார். "வல்வினையார்" என்று பரிஹாஸோக்தி. மடி—முன்தானை. "மடியடக்கி" என்று முன்தானையை ஒடுக்கிக் கொண்டு அடங்கி ஒடுங்கி நிற்பதைக் காட்டுகிறது. எம்பெருமானுடைய குணங்களை அநுஸந்திப்பதால் பாபங்கள் நீங்குகின்றன என்பது இப்பாட்டின் திரண்டபொருள். 30.

---

அரு:—முப்பதாம் பாட்டு a b. c "சீர்க்கும்" - குணங்களிருக்க இடமொழிய, பாபத்துக்கு இடமில்லையென்றபடி. குணஸ்மரணத்தாலே பாபம்போமென்று தாத்பர்யம். d மடி -முன்றானை. 30

31. அழகு மறிவோமாய் வல்வினையைத்(யும்) தீர்ப்பான்
நிழலு மடிதாறு மானோம்—சுழலக்
குடங்கடலை மீதெடுத்துக் கொண்டாடி அன்றத்
தடங்கடலை மேயார் தமக்கு.

பதவுரை: — வல் வினையை - கொடிய பாபத்தை, தீர்ப்பான் — போக்கடிக்கைக்காக, அழகும் அறிவோமாய்—(அவனே நமக்கு உபாயம் என்னும்) அழகிய அறிவை யுடையோமாய், குடங்கள் தலைமீது எடுத்துக்கொண்டு சுழல ஆடி — (க்ருஷ்ணாவதாரத்தில்) குடங்களைத் தலைமேலே தரித்துக்கொண்டு, (அவை ஆகாசத்தில்) சுழன்று வரும்படி கூத்தாடி, அன்று — அதன் பிறகு, அ தடம் கடலை —அந்த விசாலமான திருப்பாற்கடலை, மேயார் தமக்கு — (குடமாடின ஶ்ரமபரிஹாரத்திற்காக) அடைந்த எம்பிரானுக்கு, நிழலும் அடிதாறுமானோம்— நிழல்போலவும் பாதுகைகள் போலவும் ஆனோம்.

---

அவ:— முப்பத்தோராம் பாட்டில்; (அழகும்) ஸர்வேஶ்வரனைக் கொண்டே விரோதியையும் போக்கி அங்குத்தைக்குக் கைங்கர்யம் பண்ணும்படியுமானோமென்கிறார்.

வ்யா:— a. (வல்வினையித்யாதி) b புதுப்புடைவை அழுக்குக் கழற்றுமாபோலே, எலியெலும்பரான நாம் கர்மத்

---

31. அவ:—அந்த ஸர்வேஶ்வரனைக் கொண்டே விரோதிகளையும் போக்கி அவனுக்குக் கைங்கர்யம் செய்யும் பேறு பெற்றோம் என்கிறார்.

---

அரு:— முப்பத்தோராம் பாட்டு. a. b [வல்வினையைத் தீர்க்கைக்காக அழகறிந்தோம்] அவனைக்கொண்டே பாபத்தைப் போக்கிக்கொள்ள வேணுமென்கிற ஜ்ஞாநத்தையுடையோமென்றபடி.

தாலே நம்முடைய பாபத்தைப்போக்குகையன்றிக்கே, ஸர்வேஶ்வரனைக்கொண்டு நம் பாபத்தைப்போககுமழகையுடையோமாய், ஸர்வேஶ்வரனுக்குச் சாயை போலவும், c பாதுகை, பாதரேகைபோலவுமானோம், d அடிதாறு-அடிக்களவாயிருக்குமது. e (சுழல இத்யாதி) ஆகாஶத்திலே சுழலும்படிக் கீடாகக் குடங்களையெடுத்தாடி, தன்னை மன்றிலே ஸர்வஸ்வதானம் பண்ணிக் குடமாடின f வேர்ப்புப்போகத்

---

வ்யா:—(வல்வினையைத்தீர்ப்பான் அழகும் அறிவோமாய் நிழலும் அடிதாறும் ஆனோம்) வலிமையற்ற எலும்பை உடைய எலியைப் போலே மிகக்குறைந்த சக்தியுடைய நாம் அழுக்கடைந்த புதுப்புடைவையை அழுக்கு எடுப்பதுபோலே நம்முடைய புண்ய கர்மத்தாலே நம்முடைய பாபத்தைப் போக்க முயலாமல், ஸர்வேஶ்வரனைக் கொண்டே நம்முடைய பாபத்தைப்போக்கும் அழகிய அறிவை உடையவர்களாய், அந்த ஸர்வேஶ்வரனுக்கு நிழல் போலவும் பாதுகை பாதரேகை போலவும் இருந்து கொண்டு கைங்கர்யம் செய்பவர்கள் ஆனோம். "அடிதாறு" என்று அடிக்கு அளவான பாதுகையையோ, அடியோடு பொருந்தியிருக்கும் பாதரேகையையோ குறிக்கிறது. அடிமை செய்வது யாருக்கு? என்பதை மேலே விளக்குகிறார்—(சுழலக் குடங்கள் தலைமீது எடுத்துக் கொண்டு ஆடி அன்று அத்தடங்கடலை மேயார் தமக்கு) ஆகாயத்தில் சுழன்று வரும்படி தலையிலே குடங்களை எடுத்துக் கொண்டு கூத்தாடி, நாற்சந்தியிலே தன் திருமேனியழகை அனைவர்க்கும் முழுதுவம் தானம்செய்து, அன்று அப்படிக் குடக் கூத்தாடின சிரமத்தாலே உண்டான

---

c "அடிதாறு" - பாதுகையாதல், பாதரேகையாதல். d பாதுகையானதெப்படியென்ன அருளிச்செய்கிறார் (அடிதாருவது) இத்யாதி. e "குடங்கடலை" குடங்கள் தலை. f ஆடினவன்றென்கையாலே( வேர்ப்புப்போக) என்கிறது 31

32. தமக்கடிமை வேண்டுவார் தாமோ தரனார்
தமக்கடிமை செய்யென்றால் செய்யாது — எமக்கென்று
தாம் செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர் நெஞ்சினார்
யாம்செய்வ திவ்விடத்திங் கியாது.

பதவுரை:— அடிமை — (ஆசாலேசமுடையார்க்கு) அடிமைப் படுகையை, தமக்கு வேண்டுவார் — தமக்கு விருப்புகிறவராய், தாமோதரனார் தமக்கு — (அதைக் காட்டுவதற்காக யசோதையினால் கட்டுண்டதினாலே ஏற்பட்ட தழும்பையுடைய) தாமோதரனுக்கு, அடிமை செய் என்றால் — கைங்கர்யம் செய்வாயாக என்று சொன்னால், செய்யாது — செய்யாமல், நெஞ்சினார் — என்னுடைய மனமானபெரியார், எமக்கு என்று — 'எனக்குப்பிரியத்தையே செய்யக்கடவேன்' என்று பிடிவாதம் கொண்டு, தாம் செய்யும் — தான் அடிக்கடிச் செய்துவரும், தீவினைக்கே — அகலும் செயலுக்கே, தாழ்வுறுவர் - செல்லுவர். இவ்விடத்து — இப்படி இருக்குமிடத்தில், இங்கு — இவ்வுலகத்தில், யாம் செய்வது யாது — நாம்செய்யக்கூடியதுஎன்ன இருக்கிறது?

---

திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற இவனுக்கு சாயை போலவுமானோம்; இளையபெருமாள் படைவீட்டிலும் காட்டிலும் ஒக்க அடிமைசெய்தாற்போலே க்ருஷ்ணாவதாரத்திலும் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுகிறவிடத்திலும் ஒக்க அடிமைசெய்யும்படியானோம். 31

---

வியர்வை போகும்படியாகத் திருப்பாற்கடலிலே சென்று கண் வளர்ந்த எம்பெருமானுக்கு நிழல்போல் விட்டுப்பிரியாமல் அருகில் இருப்பவர்களாகவும் ஆனோம்; பாதுகையும் பாதசேரகையும் போலே திருவடியுடன் பொருந்தி நின்று கைங்கர்யம் செய்பவர்களாகவும் ஆனோம் என்றபடி. லக்ஷ்மணன் அயோத்தியிலும் காட்டிலும் விழித்திருக்கும் போதும் தூங்கும்போதும் அடிமை செய்தது போலே, கிருஷ்ணாவதாரத்திலும் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளின விடத்திலும் ஒருபடிப்பட நிழல்போலிருந்து அடிமை செய்யும்படியானோம் என்று கருத்து. 31.

அவ:— முப்பத்திரண்டாம் பாட்டில்; (தமக்கு) தாம் அடிமை செய்ய நிச்சயிக்க, நெஞ்சு ப்ரக்ருதிஸம்பந்தத்தை உணர்ந்து, பிற்காலியா நின்றதென்கிறார்.

வ்யா:— ௧ (தமக்கடிமை வேண்டுவார்) "கைத்தது உகப்பார், புளித்தது உகப்பார்" என்னுமாபோலே தமக்கடிமை உகக்குமவர். அதெங்கே கண்டோமென்றால்— (தாமோதரனார்) அநுகூலையான தாயார்க்கு அடியுண்பது

---

32. அவ:—தாம் எம்பெருமானுக்கு அடிமை செய்ய நிச்சயித்தாலும், தம் நெஞ்சு "தேஹஸம்பந்தத்தை உடைய நாம் அவனை அணுகுவது தகாது" என்று நினைத்துப் பின்வாங்குகிறது என்கிறார்.

வ்யா:—(தமக்கடிமை வேண்டுவார்) தம்மிடம் சிறிது ஈடுபட்டிருப்பவர்களுக்கும் அடிமைப் பட்டிருப்பதை விரும்புகின்றவர். "கசந்தது விரும்புகிறவர்", "புளித்தது விரும்புகிறவர்" என்பது போலே அடியார்க்கு அடிமைப்பட்டிருக்கையாகிற ஆஸ்ரிதபாரதந்த்ரியத்தை விரும்புகிறவர் என்று பொருள்படுகிறது. இதை எங்கே கண்டோமென்றால் —(தாமோதரனார்) அன்புடைய தாயான யசோதைப்பிராட்டியாலே உரலோடே வயிற்றில் கட்டுண்டு, 'வெண்ணெய் திருடினன்' என்று அடியுண்ட இடத்திலே கண்டோம் என்கிறார். தாமோதர சப்தத்திற்கு 'கயிற்றாலே வயிற்றில் கட்டுண்டவன்' என்று பொருள். இங்கு 'அடிமை' என்று அடிமைப்படுதலைச் சொல்லுகிறது. அப்படியல்லாமல் அடிமை என்று அடியாரைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். தமக்கு அடிமைசெய்யும் அடியார்களை விரும்பியிருப்பவர் என்று பொருள். (தாமோதரனார் தமக்கு அடிமை செய் என்

---

அரு:— முப்பத்திரண்டாம் பாட்டு. ௧ "தமக்கு அடிமை வேண்டுவார்" - தாம் ஆஸ்ரிதர்க்கு அடிமை செய்கையை வேண்டியிருப்பாரென்றபடி; கீழ் மூலத்திலே அர்த்தமாக்கி.

33. யாதானும் மொன்றறியில் தன்னுகக்கி லென்கொலோ
யாதானும் நேர்ந்தணுகா வாறுதான் — யாதானும்
தேறுமா செய்யா வசுரர்களை நேமியால்
பாறுபா றாக்கினான் பால்,

---

கட்டுண்பதானவிடத்திலே கண்டோம். b (எமக்கித்யாதி) c எம்மைவிட்டுத் தமக்கென்னவேயொரு நினைவுடையராய். (தாம் செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர் நெஞ்சினார்) முதலியார். (யான்செய்வதிவ்விடத்திங்கு யாது) நம் உடைமையான நெஞ்சுக்கு ஆவோமோ? நம்மையுடையவர்க்கு ஆவோமோ? 32.

---

றால் செய்யாது.) 'அடியார்க்கு அடியனான அந்தக் கண்ணனுக்கு அடிமை செய்வாயாக' என்று நாம் கூறினால், நம்முடைய நெஞ்சு அதைச் செய்வதில்லை. (எமக்கென்று தாம் செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர்) "நான் விரும்பியதையே செய்வேன்'' என்று பிடிவாதம் கொண்டு, தாம் செய்யும் தகாத செயலையே செய்வர். தாம் செய்யும் தீவினையென்று அயோக்யன் என்று அகலுகையாகிற தகாத செயலைக் குறிக்கிறது. தீவினைக்கே என்கிற ஏகாரத்தாலே இப்படி அகல்வதை அடிக்கடி செய்வதைக் காட்டுகிறது. (நெஞ்சினார்) நான் சொல்வதைக் கேட்காமல் தன் வழியே போகும் பெரியவர்! (யாம் செய்வது இவ்விடத்து இங்கு யாது) எம்பெருமானோ நம்மை ஆட்கொள்ள விரும்புகிறான்; நெஞ்சமோ அவனிடமிருந்து அகல விரும்புகிறது. நம் உடைமையான நெஞ்சு சொன்னபடி கேட்பதா, நம்மை உடையவனான எம்பெருமான் விருப்பப்படி செய்வதா என்று நிர்ணயிக்க முடியவில்லை என்கை. 32

---

b. c "எமக்கென்று" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (எம்மைவிட்டு) இத்யாதி. தமக்கு ஆஶ்ரிதரை அடிமை கொள்ளவேண்டியிருப்பரென்று அர்த்தமாக்கி "தமக்கடிமைசெய்யென்றால் செய்யாது'' என்கிறது. 32

பதவுரை:— யாதானும் — எவ்விதத்திலும், தேறுமா செய்யா —(பூஜ்யவானுக்கு) நம்பிக்கையை விளைக்கும்செயலைச் செய்யாத, அசுரர்களை — அஸுரர்களை, நேமியால்—சக்ராயுதத்தால், பாறு பாறு ஆக்கினான் பால் —துண்டு துண்டாக்கின ஸர்வேஶ்வரனிடம், யாதானும் நேர்ந்து – (தன்னுடைய தல்லாத)ஏதேனுமொன்றைக்கொடுத்தாவது, அணுகா ஆறு தான் என் கொலோ— அவனைக் கிட்டாமலிருப்பது ஏன்? யாதானுமொன்று அறியில் (என்கொலோ)– (அவனுக்கு ஶரீரபூதமான வஸ்துக்களில்) ஏதேனுமொன்றை (உள்ளபடி) அறிந்தால்தான் என்ன? தன் உகக்கில் (என்கொலோ)—(இச்சேதநன்) தன்னிடமாவது அன்பு கொண்டால் என்ன?

---

அவ:— முப்பத்துமூன்ரும் பாட்டில்: (யாதானும்) அறிவுடைத்தாகி லவனைப்பற்ற வேண்டாவோ? என்கிறது,

வ்யா: a (யாதானுமொன்றறியில்) b ஏதேனுமொரு பதார்த்தத்தை அறியில், c "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்னும்படியே ஏதேனும் ஒன்றினுடைய ஜ்ஞானத்துக்கும் அவனை முன்னிட்டு அறிய வேண்டுகையாலே அவனை அறிந்ததாய்விடும்.

---

33. அவ:— அறிவுடையவராயிருந்தால் அவனைப் பற்ற வேண்டாமோ? என்கிறார்.

வ்யா:— (யாதானும் ஒன்றறியில் என் கொலோ) ஏதேனும் ஒரு பொருளையறிந்தால் ஆகாதோ? "ஒண் தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" [ முதல் திருவ 67 ] என்கிறபடியே எந்தப் பொருளைப் பற்றிய அறிவும் அந்தர்யாமியான அவனளவும் செல்லுகையாலே அவனை அறிந்ததாகிவிடும் என்று கருத்து.

---

அரு:—முப்பத்துமூன்ரும்பாட்டு . a b "யாதானுமொன்றறியில்" "இதம்" என்று புரோநிஷ்ட பதார்த்தங்களிலே ஒன்றையறியும்போதும்; ஸர்வஶப்தவாச்யன் அவனாகையாலே இத்தையறிகிற ஜ்ஞாநம் அவனளவும்போம் என்றபடி. c இவற்றையறிகிற ஜ்ஞானம் அவனளவும் போகிறபடி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (ஒண்டாமரையாள்)இத்யாதி.

(தன்னுகக்கில்) ஒன்றையறியாவிட்டாலும் தன்னையுகக்க வேணுமே; d தன்னையுகக்கையாவது-அவனை உகந்ததாய் விடும்; e அவனுகப்பொழியத் தனக்கொரு நன்மையில் லாமையாலே. (என்கொலோ இத்யாதி,) அவனதை அவ னுக்குக் கொடுத்தேயாகிலும் அவனைக்கிட்டவேண்டாவோ? f "நேர்ந்து" என்பானென்? என்னில்; ப்ராந்திதசை யிலே கண்டதெல்லாம் "எனக்கு" என்னுமத்தனை; ஸ்வ தந்த்ரனுகவுமிறே நினைத்திருப்பதும்; இத்தையெல்லாம் அழிக்கிருனுகையாலே "நேர்ந்து" என்னலாமிறே.

---

(தன்னுகக்கில் என்கொலோ) தன்னிலும் வேறுபட்ட ஒரு பொருளை அறியாவிட்டாலும், தன்னையாவது உகக்கவேண் டுமே; அது செய்தால் ஆகாதோ? அவனுடைய உகப்பைத் தவிர தனக்கு ஒரு நன்மை இல்லாமையாலே, தன்னை உகப்பது அவனை உகப்பதிலேயே முடியும் என்றுகருத்து. (என்கொலோ யாதானும் நேர்ந்து அணுகாவாறுதான்) ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாவது அவனைக் கிட்டாமலிருப்பது ஏன்? உண்மை யில் எல்லாப்பொருளுமே அவனுடையதாகையாலே, அவனு டைய பொருளை அவனுக்குக் கொடுத்தாவது அவனை அணுக வேண்டாமோ? என்று கருத்து. "நேர்ந்து" என்று பெரிய செயலைச் செய்வதுபோலே சொல்லுவதற்குக் கருத்தென்ன? எனில், அவனுடைய வஸ்துவைத் தன்னுடையது என மயங்கி யிருக்கும் நிலையிலே இந்தஜீவன் பார்த்ததையெல்லாம் 'எனக்கு' என்று எண்ணுகிருன். தன்னை ஸ்வதந்த்ரனுகவும் நினைத்

---

d, e தன்னையுகந்தால் அவனை யுகந்ததாம்படி எப்படி? என்ன அருளிச்செய்கிருர் (அவனுகப்பொழிய) இத் யாதி,. f நேர்கை - கொடுக்கை அவனதை அவனுக்காக்கினுல் நேர்ந்தென்று கனக்கச்சொல்

ஜ "தோள்களையார" என்று தொடங்கி, "கண்களாயிரத் தாய்" என்று உபகாரஸ்ம்ருதியாலே இவர் அவனுடைமை யைத் தம்மது என்று கொடுக்க, அவனும் தன்னதல்லா தது பெற்றாற்போலே விஸ்த்ருதனானனிறே; ஆகையால் அத்தலைக்கு b அவத்யத்தை விளைத்தேயாகிலும் கிட்டவேண்

---

திருக்கிறான். இப்படித் தன்னை ஸ்வதந்த்ரனாக எண்ணியிருப் பதையும் மாற்றிக்கொண்டு, தன்னுடையதாக எண்ணியிருப்ப தைக் கொடுக்கிறானாகையாலே "நேர்ந்து" என்று சொல்லலாம்.

தன்னுடையதல்லாததைத் தன்னுடையதாக மயங்கி இவன் கொடுத்தால் எம்பெருமான் மகிழ்வனோ? எனில்: "தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறு, தோள்களையாரத்தழுவி என்னுயிரை அறவிலை செய்தனன் சோதீ" [திருவாய் 8–1–10] என்று நம்மாழ்வார் எம்பெருமானிடம் நன்றியறிவாலே அவனுடைய உடைமையான தம் ஆத்மாவைத் தம்முடையது என்று எண்ணிக்கொடுக்க, "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத் தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய்" [திருவாய் 8-1-10] என்று எம்பெருமான் தன்னுடையதல்லாதது ஒன்றைப் பெற்றது போலே தோள்களும், தலைகளும், கண்களும் ஆயிரமாயிரமாகப் பணைக்கப் பெற்றானாகையாலே அவன் மகிழ்கிறான் என்பதில் ஐயமில்லை. ஆகையால், எம்பெருமானு டையதான ஆத்மாவையும் தன்னதாக்கிக் கொடுக்கையாகிற தவறான காரியத்தைச் செய்தாவது அவனை அணுகவேண்

---

லுமோ வென்? என்று ஶங்காபிப்ராயம். ஜ அவனதைத் தன்னதாக்கிக் கொடுத்தவிடமுண்டோவென்ன அருளிச் செய்கிறார் (தோள்களை) இத்யாதி. b (அவத்யம்) அவன் தன்னாத்மாவைத் தன்னதாக்கிக் கொடுக்கை. ப்ராந்தி தஶையிலே அவத்யத்தை விளைத்துக் கொடுக்கவேணு மென்றபடி. [ஒன்றையறியவே தன்னையறியப்படுமவனாய்,

டாவோ ? (யாதானுமித்யாதி₃) தன் விரோதி₄யைத் தான் போக்கிக்கொள்ளத் தானும் கையிலே திருவாழியைப் பிடித்தானோ? (யாதானுமித்யாதி₃) அஸுரவர்க்க₃த்திலே ஒருத்தன் அநுகூலிக்குமாகிலும் அவ்வர்க்க₃மாக நோக்கும். இவனுக்கு ஒருபடியும் விஶ்வஸிக்கப்போகாதபடி செய்த அஸுரர்களைத் திருவாழியாலே துணித்தாற்போலே தன் விரோதி₄யைப் போக்கினவன் பக்கலில் எல்லாம் நேர்ந்தாகிலும் கிட்டவேண்டாவோ? அஶக்தனுக்கு ஸர்வ

---

டாமோ? என்று தாத்பர்யம். (யாதானும் தேறுமா செய்யா அசுரர்களை நேமியால் பாறு பாருக்கினான் பால்) அடியார்களுடைய விரோதி₄களை அழிப்பதற்கே கையில் திருவாழியை ஏந்தினானேயொழிய, தனக்கு விரோதி₄ என்று ஒருவனையெண்ணி அவனைப் போக்குவதற்காகக் கையிலே திருவாழியைப்பிடித்தானோ? (யாதானும் தேறுமா செய்யா அசுரர்களை) அசுரர்களின் ஸமூஹத்தில் ப்ரஹ்லாத₃னைப் போன்ற ஒருவன் அனுகூலனானாலும் அவனைச் சேர்ந்த எல்லா அசுரர்களையும் ரக்ஷிப்பான். எல்லா வித₄த்திலும் இவனுக்கு நம்பிக்கையை விளைக்காத செயல்களைச் செய்த அசுரர்களையே திருவாழியாலே அழிப்பான் என்று கருத்து. "பாறு பாருக்கினான் பால் யாதானும் ஒன்றறியில்" என்று முற்பாதியோடு கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். அசுரர்களைத் திருவாழியாலே வெட்டி அழித்ததைப் போலே, தன் விரோதி₄யைப் போக்கி அழித்தவன் விஷயத்தில் ஏதேனும் ஒருபொருளை ஸமர்ப்பித்தாவது அணுகவேண்டாமோ? என்று திரண்ட பொருள். ஶக்தியில்லாதவன் எல்லா

---

ஒன்றையுகக்கவே தன்னையுகக்கப்படுமவனாய், விரோதி₄ நிரஸநத்தைப் பண்ணுவானுமாயிருக்கிறவன் பக்கலிலே யாதானும் நேர்ந்து அணுகார்வாறு என்கொலோ] என்றந்வயம். 33

34. பாலாழி நீகிடக்கும் பண்பையாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்—நீலாழிச்
சோதியா யாதியாய் தொல்வினையெம் பாற்கடியும்
நீதியாய் நிற்சார்ந்து நின்று.

பதவுரை:— நீல் ஆழி— கறுத்த கடல் போன்ற, சோதியாய் — ஒளி உள்ளவனே!, ஆதியாய்—காரணபூதனே! எம்பால் — எம்மிடத்திலுள்ள, தொல் வினை கடியும் — அநாதியான பாபத்தைப் போக்குவதையே, நீதியாய் — ஸ்வபாவமாய் உடையவனே!; நின் சார்ந்து நின்று—உன்னைப் பற்றி நின்று, நீ பால் ஆழி கிடக்கும் பண்பை — நீ திருப்பாற்கடலில் கிடக்கும் அழகை, யாம் கேட்டேயும் — நாம் கேட்கும்போதே, காலாழும் — என்னுடைய கால் தளர்ந்து விழும்; நெஞ்சு அழியும் — மனம் நிலைகலங்கும்; கண் சுழலும் — கண் ப்ரமிக்கும்.

---

ஶக்தியைப் பற்றவேணும்; ஆகையால் அவனையே பற்ற வேணும். 33.

அவ:— முப்பத்துநாலாம் பாட்டில்; (பாலாழி) ஏதேனும் நேர்ந்தாகிலும் அவனையே பற்றவேணுமென்றார். ஆகில், அவனைக்கிட்டவொண்ணாதென்கிறார்.

---

ஶக்தியையும் உடையவனையே பற்றவேண்டுமாகையாலே ஸம்ஸாரிஜீவன் எம்பெருமானையே பற்ற வேண்டும் என்று இப்பாட்டுக்குக் கருத்து. 33

34. அவ:—எதையாவது ஸமர்ப்பித்தாவது அவனைப் பற்ற வேண்டுமென்றார் சென்ற பாட்டில். அவனைக் கிட்ட வேண்டுமென்று அணுகினால், தம்முடைய அவயவங்கள்

வ்யா:— (நீலாழிச்சோதியாய் பாலாழி நீ கிடக்கும்) ஒரு வெள்ளைக் கடலிலே ஒரு கருங்கடல் சாய்ந்தாற்போலே இருக்கிறபடி. (நீ கிடக்கும்) "கிடந்ததோர் கிடக்கை" என்னும்படியே. (பண்பை யாம் கேட்டேயும்) அழகைக் கேட்டும். ஶ்ரவணமாத்ரத்திலே இப்படி அழிகிறவர், ஸாக்ஷாத்கரித்தால் என்படுகிறாரோ? (காலாழுமித்யாதி)

---

தளர்ந்து போகையாலே அவனை அணுக முடியவில்லை என்கிறார் இப்பாட்டில். ஆழ்வார்கள் பக்தி பரவசர்கள் என்பதைக் காட்டும் பாட்டு இப்பாட்டு.

வ்யா:—(நீலாழிச் சோதியாய் பாலாழி நீ கிடக்கும்) ஒரு வெள்ளைக் கடலிலே ஒரு கருங்கடல் சாய்ந்தாற்போலே இருக்கிறது—கறுத்த கடல்போலே ஒளியுடைய எம்பெருமான் பாற்கடலிலே பள்ளி கொண்டிருப்பது. (நீ கிடக்கும்) "கிடந்ததோர் கிடக்கை" [திருமாலை 23] என்கிறபடியே, நிலை யழகைக் காட்டிலும், வீற்றிருக்கும் அழகைக் காட்டிலும் கிடையழகு சிறப்புற்றதன்றோ! (பண்பை யாம் கேட்டேயும்) பாற்கடலில் நீ பள்ளி கொண்டிருக்கும் இந்த அழகைப் பற்றிக் கேள்விப்பட்ட மாத்திரத்திலேயே. கேள்விப்பட்ட மாத்திரத்தில் இப்பாடு படுபவர் நேரே பார்த்து விட்டால் எப்பாடு படுவரோ? கேள்விப்பட்ட மாத்திரத்தில் படும் பாட்டை விவரிக்கிறார் —(காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்) என்னுடைய கால்கள் தளர்ந்து விழும். மனம் நிலை கலங்கும், கண்கள் மயங்கும். 'கால்' என்றது கர்மேந்த்ரியங்கள் அனைத்துக்கும், 'கண்' என்றது ஜ்ஞாநேந்த்ரியங்கள் அனைத்துக்கும் உபலக்ஷணம். "காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கி—குரல் மேலுமெழா மயிர்க் கூச்சுமறு என தோள்களும் வீழ்வொழியா மாலுகளா நிற்கும்

---

அரு:— முப்பத்துநாலாம் பாட்டு. உ (ஆகில்) கிட்ட வேணுமாகில்.

b வடிவழகேயாய்ப்ராப்தியின்றிக்கேயிருக்கிறதோ? இதுக்குக் காரணமானவனே! c (தொல்வினையித்யாதி₂) — உபகாரகனுமானவனே! என்னுடைய விரோதி₄யை என் பக்கலில் நின்றும் போக்குகையே ஸ்வபா₄வமாக உடையனே! (நிற்சார்ந்து நின்று) உன்னைப் பற்றி நின்று, பாலாழிநீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும். 34

அவ: — முப்பத்தைந்தாம் பாட்டில்; (நின்றப்) இவன் செவிதாழ்த்தால் அவன் படும்படி சொல்லுகிறது.

---

என் மனனே! [பெரியாழ்திரு 5—3—5] என்றாரே பெரியாழ்வார். "அரவணைத்துயிலுமா கண்டு உடலெனக்கு உருகுமாலோ" [திருமாலை 19] "கண்ணிணைக் கண்ட கண்கள் பனியரும்புதிருமாலோ" [திருமாலை 18] என்று தொண்டரடிப்பொடிகளும் அருளினாரன்றோ. இப்படி வெறும் அழகேயாய் முன்றயில்லாமலிருக்கிறதோ? எனில்—(ஆதியாய்) என்னை உண்டாக்கினவனாய், எனக்கு வகுத்த ஸ்வாமியாய் இருப்பவனே! (தொல்வினை எம்பால் கடியும் நீதியாய்) என்னிடமுள்ள அநாதி₃யான பாபங்களைப் போக்குவதையே இயல்வாகக் கொண்டவனே! அழகுடையவனும் வகுத்த ஸ்வாமியாய் இருப்பதோடல்லாமல் என்விரோதி₄யைப் போக்கி உபகரிப்பவனாகவும் இருப்பவன் என்று கருத்து. (நிற்சார்ந்து நின்று) உன்னைப்பற்றி நின்று; "பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்று கூட்டிப் பொருள் கொள்ளவேணும். 34

35. அவ:— 'கேட்டேயும்' என்று சென்ற பாட்டில் எம்பெருமானைப் பற்றித் தாம் செவிதாழ்த்ததைச் சொன்னார்; இப்படிச் செவிதாழ்த்தார் திறத்தில் அவன் படும் பாட்டைச் சொல்கிறார் இப்பாட்டில்.

---

b மூலத்திலே அர்த்த₂மாக்கி அருளிச்செய்கிறார் (வடிவழகேயாய்) இத்யாதி₂. c, d விரோதி₄யைப்போக்குகை-உபகாரம். 34

35. நின்று மிருந்துங் கிடந்துந் திரிதந்தும்
ஒன்றுமோ வாற்றானென் னெஞ்சகலான் — அன்றங்கை
வன்புடையால் பொன்பெயரோன் வாய்தகர்த்து
மார்விடந்தான்
அன்புடைய னன்றே யவன்.

பதவுரை:— நின்றும் இருந்தும் கிடந்தும் திரிதந்தும் — (என்னைப் பெறுவதற்காக திவ்யதேசங்களில்) நின்றும் வீற்றிருந்தும் சயனித்தும் உலாவியும் (ஆக இப்படி இவ்வளவு செய்தும்), ஒன்றும் ஆற்றான் — ஒன்றும் செய்யாதவனாயிருக்கிறான்; என் நெஞ்சு அகலான் — என்னுடைய நெஞ்சைவிட்டுப் பிரியான்; அன்று — ந்ருஸிம்ஹாவதார காலத்தில், அம் கை வன் புடையால் — அழகிய கையைக் கொண்டு (கொடுத்த) வலிய அடியினால், பொன் பெயரோன் வாய் தகர்த்து — ஹிரண்யனுடைய வாயை நசுக்கி, மார்வு இடந்தான் — மார்பைக் கிழித்தவனாகிற அவன் — அப்பெருமான், அன்புடையனன்றே — (அடியாரிடத்தில்) அன்புடையவனல்லவா? (ஓ — ஆச்சரியம்)

---

வ்யா:— (நின்றும் இத்யாதி) உகந்தருளின தேசங்களிலே நிற்கிறதும் கண்வளர்ந்தருளுகிறதும் உலாவுகிறதுமெல்லாம் என்னைப்பெறுகைக்காக (ஒன்றுமோவாற்றான்) எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாதானாயிருக்கும். 'ஓ'' என்று ஆர்ச்சர்யத்திலே; அசைச்சொல்லாய்க் கிடக்

---

வ்யா:— (நின்றும் இருந்தும் கிடந்தும் திரிதந்தும்) கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திவ்யதேசங்களிலே நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் நடப்பதுமாகிற செயல்களைச் செய்வதெல்லாம் என்னைப் பெறுகைக்காக (ஒன்றுமோ ஆற்றான்) எல்லாச் செயல்களையும் செய்தபோதிலும் ஒன்றும் செய்யாதவனாக நினைத்திருக்கிறான். 'ஓ'' என்று

தவுமாம். (என்னெஞ்சகலான்) என்னெஞ்சுக்குப் புறம்பு காட்டுத் தீயோடொக்கும். த(அன்றித்யாதி) பிராட்டிபக்கல் பரிமாறும்போது கூசிப் பரிமாறவேண்டும்படியான கையைக் கொண்டு, முரட்டு ஹிரண்யனுடைய, பண்ணின ப்ரதிஜ்ஞையை "இல்லை" என்ற வாயை நெரித்து அவனு மார்பைக் கீண்டவன் அன்புடையனன்றோ? பிதா பகையாக, அவனிலண்ணிய உறவாய் வந்து உதவினவன்; அவனோ அன்புடையான்? அயோக்யனென்றகலுகிற நாமோ அன்புடையோம்? 35

---

ஆச்சர்யத்தைக் காட்டுகிறது. பொருளற்ற அசைச்சொல்லாகவும் கொள்ளலாம். (என் நெஞ்சு அகலான்) என் நெஞ்சுக்கு வெளியில் உள்ளதெல்லாம் காட்டுத் தீயாக நினைப்பவன்போலே என்நெஞ்சை விட்டு அகலாதவனும் இருக்கிறான். இப்படிப் பட்டவன் யாரெனில்—(அன்றங்கை வன்புடையால் பொன்பெயரோன் வாய்தகர்த்து மார்வு இடந்தான் அன்புடையனன்றே அவன்) பிராட்டியைத் தொடும்போதும் கன்றிப்போம்படியான கையைக்கொண்டு, தன் அடியானுன ப்ரஹ்லாதன் 'எங்கும்உளன் கண்ணன்' என்று பண்ணின ப்ரதிஜ்ஞையை இல்லை என்று கூறிய முரட்டு இரணியனுடைய வாயைப்புடைத்து அவன் மார்பைக்கிழித்த அந்த எம்பெருமான் அன்புடையவனல்லவோ? பெற்ற தகப்பனே பகையாக, அவனைக்காட்டிலும் நெருங்கிய உறவாய் வந்து அடியவனுன ப்ரஹ்லாதனுக்கு உதவின அவன் அன்புடையவனே? அவன் அணுகும்போதும் "அயோக்யன்" என்று எண்ணி அகலும் நாம் அன்புடையோமோ? என்கை. 35

---

அரு:— முப்பத்தைந்தாம்பாட்டு. த"அங்கை வன்புடையால்" - புடையென்று - வழியாய், வலிய ஸாதநமான அழகிய கையாலே என்றபடி. 35.

36 அவனு மிவனு முவனும் மற்றும்ப
ரவனு மவனென் றிராதே - அவனும்
அவனே யெனத்தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்
அவனே யெவனேலு மாம்.

பதவுரை:— அவன் — அந்த பகவான், அவனும் — துர்லபனுயிருப்பனே, இவனும் — ஸுலபனுயிருப்பனே, உவனும் — இரண்டுபடியாயுமிருப்பனே, உம்பர் அவனும் — (எல்லாவற்றுக்கும் மேலுள்ள) ஒருதேசத்திலேயிருப்ப னே, என்று இராதே — என்று ஸந்தேஹப்பட்டுக் கொண்டுஇருக்காமல், அவன் அவனே ஆம் என தெளிந்து —அவன் ஆஸ்ரித பாரதந்த்ரியத்தையுடையவனே என்று தெளிந்து, கண்ணனுக்கே தீர்ந்தால் — க்ருஷ்ணனுய் அவதரித்த அவனுக்கே அடிமையானல், அவனே எவனேலும் ஆம் — அக்கண்ணனே எல்லாவிதமான ரக்ஷகனுகவும் ஆவான்.

---

அவ:— முப்பத்தாரும் பாட்டில்; (அவனும்) அவனிப்படியிருக்க, அவன் பக்கலிலே ஸம்ஶயத்தை ப்ரவேஶிப்பித்துக் கைவாங்குகை கார்யமன்று என்கிறது.

வ்யா:—(அவனித்யாதி) a துர்லபனுயிருக்கும், b ஸுலபனுயிருக்கும்; c அப்படியேயிருக்கும், இப்படியேயிருக்கும்;

---

36 அவ:—"அவன் இப்படி நம்மிடம் அன்புடையவனுய் இருக்கும்போது, அவன் விஷயத்தில் ஐயம் கொண்டு நாம் பின் வாங்குவது தகாது" என்கிருர்.

வ்யா:—(அவன் அவனும்?)எம்பெருமான் திருப்பாற்கடல் காதனுயிருந்து அணுகுவதற்கு அரியவனுய் இருப்பனே?

---

அரு:— முப்பத்தாரும் பாட்டு.a(துர்லபன்) - திருப்பாற்கடல் நாயகன்; b (ஸுலபன்)-அர்ச்சாவதாரம். c இவற்றை விவரிக்கிருர் (அப்படியேயிருக்கும்) இத்யாதி.

d அதுக்கு மேலாயிருக்கும் என்று ஸம்ஶயித்துக் கைவிடப் பாராதே. e (அவனித்யாதி₃) f (31) 'आत्मानं नातिवर्तेथाः' (ஆத்மாநம் நாதிவர்த்தேதா₂:) என்னும்படியே பாரதந்த்ர

(இவனும்?) அர்ச்சாவதாரமாயிருந்துகொண்டு அணுகுவதற்கு எளியவனாய் இருப்பனோ? (உவனும்?) அந்தர்யாமியாயிருந்து கொண்டு யோகி₃களுக்கு எளியவனாயும், மற்றவர்களுக்கு எட்டாதவனாயும் இருப்பனோ? "அவன்" என்று தூரத்திலிருப்பவனைக் குறிக்கிறதாகையாலே அணுகுவதற்கு அரியவன் என்று பொருள்படுகிறது. "இவன்" என்று அருகிலிருப்பவனைக் குறிக்கிறதாகையாலே அணுகுவதற்கு எளியவன் என்று பொருள்படுகிறது. "உவன்" என்று இடைப்பட்ட தூ₃ரத்தில் இருப்பவனைக் குறிக்கிறதாகையாலே அணுகுவதற்கு அரியவனாகவும் எளியவனாகவும் இருப்பவன் என்று பொருள் படுகிறது.(மற்று உம்பர் அவனாய்?) பரமபத₃நாத₂னாய்இருந்து கொண்டு மிகவும் எட்டாதவனாய் இருப்பனோ? (என்றிராதே) இப்படியெல்லாம் ஐயமுற்று அவனைக் கைவிடப் பார்க்காமல்; "என்று இராதே" என்று அருளிச்செய்கையால் 'அவனும்' 'இவனும்' 'உவனும்' முதலான ஒவ்வொரு பதமும் நிச்சயத்தைக் காட்டவில்லை. கேள்விக்குறியோடு கூடியதாய் ஐயமுறுவதைக் காட்டுகிறது. (அவனும் அவனே எனத் தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்)

31\. ப₄ரதஸ்ய வச: குர்வந் யாசமாநஸ்ய ராக₄வ |
ஆத்மாநம் நாதிவர்த்தேதா₂: ஸத்யத₄ர்மபராக்ரம ||
ரா—அ (111 - 7)

[ராக₄வனே! ஸத்யமான தர்மத்தையும் பராக்ரமத்தையும் உடையவனே! யாசிக்கும் பரதனுடைய வார்த்தையின்படி செய்வதன் மூலம் உன்னுடைய ஸ்வரூபமான ஆச்ரிதபாரதந்த்ர்யத்தை மீறாமலிருப்பாயாக.] என்கிறபடியே அடியார்

d "உம்பர்" - மேலாய், பரமபத₃நாத₂ன். e. f "அவனும் அவனே" - அவனே அவனுமென்றாய். அவனுக்கு ஆஶ்ரித பாரதந்த்ர்யமே வடிவு என்றபடி.

37. ஆமா றறிவுடையா ராவ தரிதன்றே
நாமே யதுவுடையோம் நன்னெஞ்சே — பூமேய்
மதுகரமே தண்டுழாய் மாலாரை வாழ்த்தா
மதுகரமே வண்ணா லமை.

யமே அவனுக்கு ஸ்வரூபமென்று தெளிந்து ஸுலபனான க்ருஷ்ணனுக்கேயற்றுல். (அவனே எவனேலுமாம்) (32) 'यस्य मन्त्री च गोप्ता च सुहृच्चैव जनार्दनः'' (யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தநः) என்னும்படியே இவனுக்குஎல்லாப்படியும் ரக்ஷகனும். 36

களுக்கு வசப்பட்டிருக்கையே அவனுக்குக் கைவிடவொண்ணுத இயல்பு என்று தெளிவடைந்து, அடியவர்க்கு எளியவனுன கண்ணனுக்கே ஆட்பட்டால் ''அவன் அவனே ஆம் எனத் தெளிந்து'' என்று கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும். 'அவனே' என்றது 'கைவிடவொண்ணுத தன்மையான 'அடியார்க்கு வசப்பட்டிருக்கையை உடையவனே' என்று பொருள் படுகிறது. மேலே 'கண்ணனுக்கேதீர்ந்தால்' என்றிருப்பதாலே இப்படியே பொருள் கொள்ள வேண்டும். (கண்ணனுக்கே தீர்ந்தால்) ஓர் இடைச்சிக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி எளியவனுன் கண்ணனுக்கே அற்றுத் தீர்ந்தால். (அவனே எவனேலும் ஆம்)

32. யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ
ஜநார்த்தநः ।
ஹரிஸ்த்ரைலோக்யநாதஸ்ஸ கிந்து தஸ்ய ந
நிர்ஜிதம் ॥ [பார- வன (49-20)ஸஞ்ஜயவசநம்]

[மூவுலகங்களுக்கும் நாதனும், ஜநார்த்தனன் என்றும், ஹரி என்றும் சொல்லப்படுமவனுன அந்த பகவான், எந்த தர்ம புத்ரனுக்கு மந்திரியாகவும், ரக்ஷகனுகவும், நண்பனுகவும் இருக்கிருனே அந்த தர்மபுத்ரனுல் ஜயிக்கப்படாதது யாது?] என்கிறபடியே அவனே எல்லா உறவும் ஆகி, தன் அடியவனே எல்லா வகையிலும் ரக்ஷிப்பான். 36.

பதவுரை:— நல் நெஞ்சே — அநுகூலமான மனமே!, ஆறு ஆம் அறிவு — நல் வழியிலே செல்லும் புத்தியை, உடையார் ஆவது அரிதன்றே — உடையவர்களாவது கடினமல்லவா; நாமே அது உடையோம் — நாமிருவரும் அவ்வறிவையுடையவராயிருக்கிறோம்; பூ மேய் மதுகரம் மே — பூவிலே சேர்ந்திருக்கும் வண்டுகள் பொருந்திய, தண் துழாய் மாலாரை — குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடைய ஸர்வாதிகனை, அன்பால் — ப்ரீதியாலே, வாழ்த்து ஆம் அது — பல்லாண்டு பாடுகையாகிற அதிலே, கரமே அமை — உறுதியாகப் பொருந்து.

---

அவ:— முப்பத்தேழாம் பாட்டில்; இப்படியிருக்கை புறம்புள்ளார்க்கரிது, தமக்குண்டாயிற்று என்கிறார்.

வ்யா:— a (ஆமாறித்யாதி) b வழியான அறிவுடையாராவதரிதன்றே? யுக்தமான அறிவுடையாராகை கிடையாது. (நாமே அதுவுடையோம்) நாம் நல்ல அறிவுடையோம். (நல் நெஞ்சே) எல்லாத்துக்கும் c ஒருமிடறாகவிறே இது ஸித்,

---

37. அவ:—“இப்படி அவனுக்கே அற்றுத் தீர்ந்திருக்கை மற்ற எவர்க்கும் அரிது; நமக்கு உண்டாயிற்று” என்கிறார்.

வ்யா:—(ஆமாறு அறிவுடையார் ஆவது அரிதன்றே) ‘ஆறு ஆம் அறிவுடையார்’ என்று அந்வயித்துப் பொருள் கொள்ள வேண்டும். ‘நல்லவழியில் செல்லும் அறிவை உடையவராதல் அரிதலலவா?’ என்று பொருள். உலகில் அப்படிப்பட்ட அறிவுடையவர்களைக் காண முடியவில்லை என்று கருத்து. (நாமே அது உடையோம்) நாமே இப்படிக் கிடைத்தற்கரிய நல்லறிவைப் பெற்றிருக்கிறோம். (நல நெஞ்சே) இப்பெருமை அனைத்துக்கும் ஒருமிடறாக [ 1. ஒரு நெஞ்சமாக; 2. ஒத்தகருத்துடையதாக ] அல்லவோ நெஞ்சாகிற நீ அமைந்திருக்கிறாய்.

---

அரு:— முப்பத்தேழாம் பாட்டு. a b “ஆமாறு” - ஆறு வழியாய். (வழியானவறிவு) c (ஒருமிடறு) - சாடு.

38. அமைக்கும் பொழுதுண்டே யாராயில் நெஞ்சே
இமைக்கும் பொழுது மிடைச்சி—குமைத்திறங்கள்
ஏசியே யாயினு மீன்துழாய் மாயனையே
பேசியே போக்காய் பிழை.

தித்தது. (33) ''மந ஏவ'' (மந ஏவ) இத்யாதி,யாலே பந்த,மோக்ஷங்களிரண்டுக்குமடி இதிறே. d (பூமேயித்யாதி,) e பூவிலே பொருந்தும் வண்டு மேவின திருத்துழாய் மாலையை உடைய ஸர்வேஶ்வரனை அன்பாலே f வாழ்த்தாகிற அத்தை g த்ருட,மாக h அமை. 37

33 மந ஏவமநுஷ்யாணாம் காரணம் பந்த,மோக்ஷயோ:|
பந்தா,ய விஷயாஸங்கி, முக்த்யை நிர்விஷயம் மந:||
வி-பு (6-7-28)

[மனிதர்களுக்கு ஸம்ஸாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனம் தான் காரணம். சப்தாதிவிஷயங்களில் ஈடுபட்ட மனம் ஸம்ஸாரஹேதுவாகிறது. விஷயங்களில் பற்றற்ற மனம் முக்திஹேதுவாகிறது.] என்கிறபடியே ஸம்ஸாரத்தில் கட்டுப்படுவதற்கும் அதிலிருந்து விடுதலையடைவதற்கும் காரணம் மனமேயன்றோ. (பூ மேய் மது கரம் மே தண் துழாய் மாலாரை அன்பால் வாழ்த்து ஆம் அது கரமே அமை) பூவிலே பொருந்தியிருக்கும் வண்டோடு கூடிய திருத்துழாய் மாலையை உடைய ஸர்வேச்வரனை அன்பாலே பல்லாண்டு பாடுகையாகிற அதிலே உறுதியாகப் பொருந்துவாயாக. 'கரம்' என்றது 'கரம்' என்ற வடசொல்லாகையாலே 'உறுதி' என்று பொருள்படுகிறது. 37.

d e 'மே'-மேவி. f வாழ்த்தாமது g ''கரம்'' – க,ரமாய், (த்,ருடமாக) h ''அமை''-சமைவாய், பொருந்தென்றபடி 37

பதவுரை:— நெஞ்சே — மனமே! ஆராயில் — விசாரித்தோமானால், இமைக்கும் பொழுதும் — கண்ணிமைக்கும் காலமும், அமைக்கும் பொழுது உண்டே — ஆறியிருக்கைக்குப் போதுண்டோ? இடைச்சி — இடைச்சியான யசோதை, குமை திறங்கள் — (க்ருஷ்ணனை) துன்புறுத்த விதங்களைச் (சொல்லி), ஏசியே ஆயினும் — பழித்தேயாகிலும், ஈன் துழாய் மாயனையே — இனிய துழாய் மாலையையுடைய ஆச்சர்யபூதனையே, பேசியே போக்காய் — அநுஸந்தித்துப் பொழுது போக்குகிறாயல்லை; பிழை — (நீ செய்வது) தவறு.

---

அவ:— முப்பத்தெட்டாம் பாட்டில், (அமைக்கும்) தாம் வாழ்த்தச்சொல்ல நெஞ்சு இருக்க, அத்தைத் "தப்பச் செய்தோம்" என்கிறார்.

வ்யா:— (அமைக்குமித்யாதி) ஒரு க்ஷணமாத்ரமும் ஆறியிருக்கப் போதுண்டோ? நெஞ்சே! ஒரு ஆபாதப்ரதீதியன்றிக்கே, உள்ளே ஆராயப்புக்கால். (இமைக்கும் பொழுதும் இடைச்சி இத்யாதி) பரமபதத்திலே சென்று ஸாக்ஷாத்கரித்தார்க்கன்றோ விச்சே

---

38 அவ:—சென்றபாட்டில் எம்பெருமானை வாழ்த்தச் சொன்னவுடன் நெஞ்சு தன் தாழ்வை நினைத்துப் பின் வாங்க, "நீ செய்வது தவறு அவனைப்பேசியே பொழுதுபோக்குவாயாக" என்கிறார்.

வ்யா.— (இமைக்கும் பொழுது அமைக்கும் பொழுதுண்டே ஆராயில் நெஞ்சே) மேலெழுந்தவாரியாகப் பார்க்காமல் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால், எம்பெருமானைப் பேசாமல் காணநேரமும் ஆறியிருப்பதற்கு இடமுண்டோ? 'பரமபதத்திலே சென்றுஅவனைக் காண்பவர்களுக்கன்றோ இடைவெளியில்லாமல் அவனை அநுபவிக்க முடியும்" என்று நெஞ்சுசொல்லக் கூறுகிறார்.—(இடைச்சி குமைத்திறங்கள் ஏசியேயாயினும்ஈன் துழாய் மாயனையே பேசியே போக்காய்) பரமபதத்திற்குச் செல்லவேண்டியதில்லை. தன்னை மனிதர்களிலே

39: பிழைக்க முயன்றோமோ நெஞ்சமே பேசாய்
தழைக்குந் துழாய்- மார்வன் றன்னை-அழைத்தொருகால்
போயுபகாரம் பொலியக் கொள்ளாது அவன்புகழே
வாயுபகா ரங்கொண்ட வாய்ப்பு.

---

தமின்றிக்கே அநுபவிக்கலாவதுஎன்னில், அதுவேண்டா; தன்னை இதரஸஜாதீயனாக்கி ஸுலபனாக்க, "என் மகன்" என்று எடுத்ததே குடியாக, தாயார் குமைக்கும் திறங்களை, ஏசியேயாயினும் பேசிப் போக்குகிறிலை. (பிழை) தப்பு. ஈன்துழாய் மாயனையே பேசிப்பிழையைப் போக்காய் என்னவுமாம். ஸ்நேஹித்துச்செய்தவற்றை ஸ்நேஹமில்லாத நாம் பேசினால் அவனுக்கு ஏச்சாகாதோ? என்னில்; ஏச்சாகிலும் அவனைப் பேசாதேயிருக்கிறவிடம் தப்பு. 38

---

ஒருவனாய், கண்ணனாய் அவதரித்தபோது "தன்மகன்" என்றும் உரிமையாலே யசோதையாகிற தாய் கண்ணனை உரலோடு கட்டி அடித்து தண்டித்த விதங்களைச் சொல்லிப் பழித்தேயாவது இனிய துழாய் மாலையை உடைய ஆச்சர்ய பூதனான எம்பெருமானைப் பற்றிப் பேசியே பொழுது போக்கலாமே. அப்படிப்போக்காமல் இருக்கிறாயே. (பிழை) இது தவறு. அல்லது "ஈன்துழாய் மாயனையே பேசி பிழையைப்போக்குவாய்—பாபங்களைப் போக்குவாயாக." என்றும் பொருள் கொள்ளலாம். யசோதைப்பிராட்டி அன்போடு செய்த காரியத்தை அன்பில்லாத நாம் செய்தால் அவனுக்கு இது ஏச்சாகுமே? எனில்: (ஏசியே ஆயினும் பேசியே போக்காய் பிழை) ஏச்சாக இருந்தாலும் அவனைப் பேசிப் போது போக்காமலிருப்பது தவறு. 38

---

அரு:— முப்பத்தெட்டாம் பாட்டு. [நெஞ்சமே ஆராயில் இளைக்கும்பொழுதும் அழைக்கும்பொழுதுண்டே] க்ஷைகஸ்நேஹமின்றிக்கேசொல்லுகை. 38

பதவுரை:— நெஞ்சமே—மனமே!, தழைக்கும் —தளிர் விடுகிற, துழாய் — திருத்துழாயை, மார்வன் தன்னை — திருமார்பிலேயுடையவனான அவனை, அழைத்து —கூப்பிட்டு, ஒருகால்—ஒருகாலத்தில், போய்—பரமபதத்திற்குப் போய், பொலியஉபகாரம் கொள்ளாது— மிகவும்உபகாரத்தை ஏற்றுக் கொள்ளாமல், அவன் புகழே — அவனுடைய குணங் களையே, வாய் உபகாரம் கொண்ட வாய்ப்பு — வாய்க்கு நன் மையாக அங்கீகரித்த இச்செயலை, பிழைக்க முயன் றோமோ — தப்பச்செய்தோமோ?, பேசாய் — சொல்லு வாயாக.

---

அவ:— முப்பத்தொன்பதாம்பாட்டில்; (பிழைக்க) பேச வென்று புக்கவாறே, போ₄க்₃யமாய் நெஞ்சுக்குப் பொருந்தி னவாறே, 'நாம் பார்த்தவிடம் a தப்பச்செய்தோமோ நெஞ்சே!, என்கிறார்.

வ்யா:— (தழைக்குமித்யாதி₃) ஒரு வாடல்மாலையையிட் டாலும் தழைக்கும் துழாய் மார்வையுடையவனை அழைத்து அவன் கிட்டக்கொண்டு "பரமபத₃த்திலே b வந்து அஸங்கு சிதமான போ₄க₃த்தை c பு₄ஜிப்பிக்கிறேன்" என்னுதே,

---

39. அவ:— "ஆழ்வார் நியமித்தபடியே நெஞ்சு எம் பெருமானையே பேசப்புகுந்தது. அது நெஞ்சுக்கு மிகவும் இனியதாகவும் இருந்தது. 'நான் சொன்னது தவறில்லை பார்த்தாயா நெஞ்சே'" என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (தழைக்கும் துழாய் மார்வன் தன்னை) ஒரு வாடின மாலையைச் சாத்தினாலும் திருமேனியில் பட்ட வுடன் தழைக்கின்ற திருத்துழாய் மாலையை அணிந்த திருமார்பை உடையவனை. (அழைத்து ஒருகால போய் உபகாரம் பொலியக்கொள்ளாது) "அந்த எம்பெரு மானை அழைத்து அவன் வந்தவுடன் அவனருளாலே பரமபதத் திற்குச்சென்று எல்லையற்ற பேரின்பத்தை நெஞ்சாகிய உன்னை அனுபவிக்கச் செய்கிறேன்" எனக் கூறுமல்,

40. வாய்ப்போ இதுவொப்ப மற்றில்லை வாநெஞ்சே
போய்ப்போஒய் வெந்நரகில் பூவியேல்—தீப்பால
பேய்த்தா யுயிர்கலாய்ப் பாலுண்டு. அவளுயிரை
மாய்த்தானை வாழ்த்தே வலி.

பதவுரை:— வா நெஞ்சே—வாராய் மனமே!, இது ஒப்ப — இதற்கு ஸமாநமான, வாய்ப்பு—ஸமயம், மற்று இல்லை — வேறு கிடையாது; போய் போய் — மிகவும் அகன்று, வெம் நரகில்—(பிரிவாகிற) கொடிய நரகத்தில்,

---

வாய்க்குபகாரமாகக் கொண்ட இந்த வாய்ப்பு தப்ப முயன்றோமோ? சொல்லாய் என்கிறார். d ஜ்ஞாநமுண்டாயிருக்க ஶரீர ஸமநந்தரத்திலே கைங்கர்யம் பண்ணுகையாவது ப₄க₃வத்₃விஷயத்தில் ருசியில்லாமையிறே. 39

---

(அவன் புகழே வாய் உபகாரம் கொண்ட வாய்ப்பு பிழைக்கமுயன்றோமோ) அவன்கு₃ணங்களையே வாய் படைத்த பயனுக வாழ்த்தும்படி செய்த இச்செயல் தவறு செய்தது ஆகுமோ? (நெஞ்சமே பேசாய்) நெஞ்சே! நீயே சொல்லுவாய் என்கிறார். எம்பெருமானைப் பற்றிய நல்ல வழியில் செல்லும் அறிவு உண்டான பின்பு "இந்த சரீரம் கழிந்தவுடன் பரமபதத்தில் சென்று கைங்கர்யம் பண்ணலாம்" என்று ஆறியிருப்பது அந்த எம்பெருமான் விஷயத்தில் ஈடுபாடு இல்லாமல் இருப்பதை ஒக்குமன்றோ? என்று கருத்து. 39

---

அரு:— முப்பத்தொன்பதாம் பாட்டு. a (தப்பச்செய்தோமோ?) தப்பச்செய்யவில்லையே, நன்றாகச்செய்தோம் நெஞ்சே! என்கிறார். b (வந்து) பரமபத₃த்திலே போய் என்றபடி. c நெஞ்சே உன்னை (பூ₄ஜிப்பிக்கிறேன் என்றதே) d பரமபத₃த்துக் கைங்கர்யம் இங்கே கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ஜ்ஞாநமுண்டாயிருக்க) இத்யாதி₃. 39

பூவியேல்— என்னைப்புகுவிக்காதே; தீப்பால — கொடிய தன் மையை உடையவளாய், பேய் தாய்— தாயுருவங்கொண்ட பேயான பூதனையின், உயிர் — பிராணனை, பால் கலாய் உண்டு — பாலோடே கலந்து குடித்து, அவள் உயிரை மாய்த்தானை — அவளுடைய உயிரை அழித்தவனை, வாழ்த்தே—வாழ்த்துவதே, வலி —(நமக்கு) பலமாகும்.

---

வ்யா:— தீர்ப்பதாம் பாட்டில், (வாய்ப்பேத்யாதி) இத் தோடொக்கும் நேர்பாடு மற்றில்லை நெஞ்சே! (போயித் யாதி) "அயோக்யன்" என்று அகலுகையாகிற கொடிய நரகத்தில் புகுவியாதேகொள். 34 "निरयो यस्त्वया विना"

---

40. அவ:— நெஞ்சு மறுபடியும் தன் தகுதியின்மையை நினைத்து அகன்றுவிடாமல் இருப்பதற்காக, "இப்படி அவனை பேசிப்பேர்த்துப்போக்கும் நல்ல வாய்ப்பு விளைந்திருக்கும்போது நீ மறுபடி அவனை விட்டுப் பிரிவதில் முற்படாதே" என்று நெஞ்சை நியமிக்கிறார்.

வ்யா:— (வாய்ப்போ இது ஒப்ப மற்றில்லை வா நெஞ்சே), வாராய் நெஞ்சே! அவனைப்பேசிப் போது போக்கும் இது போன்றதொரு வாய்ப்பு வேறொன்றுமில்லை. (போய்ப் போய் வெந்நரகில் பூவியேல்) உன் இயல்வின்படி மறுபடி யும் மறுபடியும் உன் தகுதியின்மையை நினைத்து அகலுவ தாகிற கொடிய நரகத்தில் என்னைப் புகச்செய்யாமல் இருப் பாயாக.

34. யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ்த்வயா விநா ।
இதி ஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ ॥
[ரா. அ 30—18]

---

அரு:— நீர்ப்பதாம் பாட்டு. 34 அகலுகை நரகமோ வென்ன அருளிச்செய்கிறார் (நிரயோ யஸ் த்வயா விநா) என்று.

41\. வலிய மெனநினைந்து வந்தெதிர்ந்த மல்லர்
வலிய முடியிடிய வாங்கி — வலிய நின்
பொன்னாழிக் கையால் புடைத்திடுதி கீளாதே
பன்னாளும் நிற்கு மிப்பார்.

பதவுரை:— வலியம் என நினைந்து — நாமே பலமுடையோம் என்று எண்ணி, வந்து—(சண்டை செய்ய) வந்து, எதிர்ந்த—எதிர்த்த. மல்லர் — (சாணூர முஷ்டிகர்கள் என்னும்) மல்லர்களுடைய, வலிய முடி — பலம் பொருந்திய தலையை, இடிய—இடிந்து விழும்படி, வாங்கி—பறித்து, பொன் ஆழி — அழகிய சக்கரத்தைத்தரித்த, உன்—உன்

---

(நிரயோ யஸ் த்வயா விநா) b (பேய்த்தாய் இத்யாதி) ம பெற்ற தாய் வேஷத்தைக்கொண்டு வந்த பேயினுடைய உயிரைப் பாலோடே கலசியுண்டு அவளுயிரை முடித்தவனை வாழ்த்துகை நமக்கு மிடுக்கு. வாழ்த்துகையிலே துணியென்றுமாம், 40

---

[ராமபிரானே! உம்முடனிருப்பதுவே எனக்கு ஸ்வர்க்கம். உம்மைவிட்டுப் பிரிந்திருப்பதுவே எனக்கு நரகம். (என்னுடைய) மேலான அன்பை இம்மாதிரி அறிந்து என்னுடன்கூட (வனத்திற்குச்) செல்வீராக.] என்று எம்பெருமானை விட்டுப் பிரிந்திருப்பதே நரகம் என்று சீதாப்பிராட்டி அருளினாளன்றோ. (தீப்பால பேய்த் தாய் உயிர்கலாய்ப் பாலுண்டு அவள் உயிரை மாய்த்தானை வாழ்த்தே வலி) பெற்றதாயின் உருவத்தைக் கொண்டு வந்த கொடிய பேயான பூதனையின் உயிரை அவளுடைய முலைப்பாலோடே கலந்து குடித்து அவளுடைய வாழ்வை முடித்தவனை வாழ்த்துவதே நமக்குப் பலமாகும். (வாழ்த்தே வலி) வாழ்த்துவதிலே துணிவு கொள்வாயாக என்றும் பொருள்கொள்ளலாம். 40

---

b. ம ''தீப்பால பேய்த் தாய்'' பொல்லாத ஸ்வபாவத்தையுடைய பேய்ச்சி. உயிர்கலாய்-கலசி. 40

னுடைய, வலிய கையால் — பலம் மிகுந்த திருக்கையால், கீளாதே—கிழித்துப்போடாதே, புடைத்திடுதி—(கைநோகும்படி) அடித்துவிட்டாய்; (அதனாலேயே) இப்பார் பல் நாளும் நிற்கும் — இந்த பூமி பலகாலம் நிலைபெற்றது.

---

அவ:— நாற்பத்தோராம் பாட்டில்; (வலியமென) பூதநா ப்ரஸங்கத்தாலே மல்லரை நிரஸித்தபடி சொல்லுகிறது.

வ்யா:— a (வலியமித்யாதி) b வெல்வோமென்று நினைத்து வந்தெதிர்த்த மல்லருடைய திண்ணியதான முடியை வாங்கி. மிடுக்கையுடைத்தான திருவாழியைப் பிடித்த கையாலே கேசியைப்போலே வாயைக்கிழியாதே மல்லுக்கீடாகப் புடைத்திடுதி. (பல்நாளும் c நிற்குமிப்பார்)

---

41. அவ:— சென்ற பாட்டில் பூதனையை அழித்தது பற்றிய பேச்சு எழுந்தவுடன் அந்த அவதாரத்திலேயே மல்லரை அழித்ததைக் கூறுகிறார் இப்பாட்டில்.

வ்யா:— (வலியம் என நினைந்து வந்து எதிர்ந்த மல்லர் வலிய முடி இடிய வாங்கி வலிய நின் பொன் ஆழிக் கையால் புடைத்திடுதி கீளாதே) "நாம் கண்ணனை வெல்லத் தக்க பலமுடையோம்" என்று நினைத்து அவனோடு சண்டை செய்யவந்து எதிரிட்ட சாணூரன் முஷ்டிகன் என்னும் மல்லர்களுடைய வலிமைமிக்க தலையை இடிந்து விழும்படி பறித்து, பலத்தை உடைய உன்னுடைய சக்கரமேந்திய திருக்கைகளாலே, 'கேசி' என்னும் அசுரனைப்போலே வாயைக் கிழிக்காமல் மற்போருக்குத்தக்கபடி புடைத்து விட்டாய், (பல்நாளும் நிற்கும் இப்பார்) முரட்டு மல்லர்களைத் தனியே

---

அரு:— நாற்பத்தோராம் பாட்டு. a. b "முடியிடிய" முடியிடியும்படி. புடைத்திடுதி. c d. e f "இப்பார்"-பாசி

d தனியே முரட்டு மல்லரை வென்ற வெற்றிக்கு என்றும் ஸாக்ஷி பூ₄மியிறே. e அம்மல்லரை ஜயித்த ஜயத்தாலே யிறே பூ₄மி நிலைநின்றதென்றுமாம். (கீளாதே பல்நாளும் c நிற்குமிப்பார்) f ஸு₁குமாரமான திரு(வடி)க்கைகளைக் கொண்டு முரட்டு மல்லரோடே பொருகிறபடி கண்டால் இப்பூமியில் சேதநர் முடியவேண்டாவோ? அது கண்டு ஸஹித்திருந்த இவர்களுக்கு தூரே பிராயம், (35) '' ந ஸமம் யுத்₃த₄மித்யாஹு:'' (ந ஸமம் யுத்₃த₄மித்யாஹு: ) என்றமாத்ரமும் சொல்லாத இவர்களுக்கு ஒருநாளும் அழிவில்லை என்றுமாம். 41

---

நின்று வென்ற வெற்றிக்கு என்றும் ஸாக்ஷியாய் இருப்பது இப்பூமி. 'நிற்கும்'' என்றது ஸாக்ஷியாய் நிற்கும் என்றபடி. ''பார்'' என்றது பாரில் உள்ளவர்களைக் குறிக்கிறது. அல்லது ''அந்த மல்லரை ஜயித்த வெற்றியாலன்றோ பூமி இன்னும் நிலைநிற்கிறது; இல்லாவிடில் அழிந்துபோயிருக்குமே'' என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது 'கீளாதே பல்நாளும் நிற்கும் இப்பார்'' என்று கூட்டி ''மென்மை மிக்க திருக்கைகளைக் கொண்டு முரட்டு மல்லர்களோடு மல யுத்₃த₄ம் செய்ததைக் கண்டால் இந்த பூ₄மியில் உள்ளவர்கள் உயிரை இழந்திருக்க வேண்டாமோ? அதைக்கண்டும் த₄ரித்திருந்த இவர்களுக்கு ஆயுள் நீண்டதே'' என்றும் பொருள் கொள்ளலாம்.

35. பூ₄மௌ ஸ்தி₂தஸ்ய ராமஸ்ய ரத₂ஸ்த₂ஸ்ய ச ரக்ஷஸ: |
த ஸமம் யுத்₃த₄மித்யாஹுர் தே₃வக₃ந்த₄ர்வதா₃நவா:||
[ரா யு 103-5]

['பூமியிலிருக்கும் ராமனுக்கும், ரதத்திலிருக்கும் ராக்ஷஸனுக்கும் யுத்தம் ஸமமானதல்ல' என்று தேவர்களும், கந்

---

லுள்ளார்; ''நிற்கும்''- ஸாக்ஷி நிற்குமென்னுதல், ஸத்தை நிற்குமென்னுதல், ஈடுபட்டழியாதே நிற்குமென்னுதல். 41.

42. பாருண்டான் பாருமிழ்ந்தான் பாரிடந்தான் பாரளந்தான்
பாரிட முன்படைத்தா னென்பரால் — பாரிட
மாவானுந் தானானா லாரிடமே மற்றொருவர்க்
காவான் புகாவா லவை.

பதவுரை:— பார் உண்டான் — (பகவான்) பூமியை விழுங்கினான், பார் உமிழ்ந்தான் — உலகத்தை வெளிப் படுத்தினான், பார் இடந்தான் — ப்ருதிவியைக் குத்தியெடுத்தான், பார் அளந்தான்—நிலம் முழுவதையும் (திருவடிகளால்) அளந்தான், பார் இடம் முன்படைத்தான் — மஹாப்ரளயகாலத்தில் இவ்வுலகையெல்லாம் ஸ்ருஷ்டித்தான், என்பர்—என்று (ஞானிகள்) சொல்லுவர்; (இக் காரணங்களாலேயே) பார் இடம் ஆவானும் தான் — இடமுடைத்தான உலகம் முழுவதுமாகிறவனும் தானே, ஆனால்—இப்படியாகில். ஆர் இடமே— (இவ்வுலகெல்லாம்) யாரைச் சேர்ந்த இடம்? அவை—அந்த உலகங்கள், மற்று ஒருவர்க்கு ஆவான் புகா — மற்றொருவருக்கு சேஷமாக ஆகமாட்டா.

---

அவ:— நாற்பத்திரண்டாம் பாட்டில், (பாருண்டான்) ஸர்வேஸ்வரனே ஆஸ்ரயமாகவேண்டாவோ? என்கிறது.

---

தத்வர்களும், அஸுரர்களும் சொன்னார்கள்.] என்கிறபடியே முரட்டு மல்லர்களோடு சிறுவனான கண்ணன் போர்புரிவதைப் பார்த்து பயப்படாத இவர்களுக்கு ஒருநாளும் அழிவில்லை என்று கருத்து. இங்கும் பார் என்றது பூமியில் உள்ளவர்களைக் குறிக்கிறது. "கீளாதே நிற்கும்" என்றது அழியாமல் நிற்கும் என்றபடி. 41

42. அவ:— சென்ற பாட்டிலே எம்பெருமானாலே பூமி நிலைநின்றது என்றார். "இது ஒன்றோ? அவன் பூமியை ரக்ஷித்த ப்ரகாரங்கள் பல பலவன்றோ; அத்தகைய அவனைத் தவிர வேறு எவர் இந்த பூமிக்குத் தஞ்சமாக முடியும்?" என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (பாருண்டானித்யாதி.) ப்ரளயம் வருகிறது என்று தன் வயிற்றிலே வைத்து ரக்ஷித்தும், வெளிநாடு காண உமிழ்ந்தும், அண்டபித்தியில் நின்றும் பூமியை வராஹரூபமாய் ஒட்டுவிடுவித்தும், மஹாபலி அபஹரிக்க எல்லை நடந்தும், கரணகளேபரவிதுரமாய் போகமோக்ஷ ஶூந்யமான இவற்றை ஸ்ருஷ்டித்தும், இப்படி ஆனைத் தொழில்கள் செய்வானென்று நிர்தோஷப்ரமாணமும் ப்ரமாணத்தை அங்கீகரித்த ருஷிகளும் சொல்லுகையாலே,

---

வ்யா:— (பார் உண்டான்) ப்ரளயகாலத்தில் ப்ரளய ஜலத்தில் அகப்பட்டுத் துன்புறுதபடி தன் வயிற்றிலே வைத்து ரக்ஷித்தான். (பார் உமிழ்ந்தான்) உண்ட உலகங்களை வெளிநாடு காண உமிழ்ந்து ரக்ஷித்தான். (பார் இடந்தான்) ஹிரண்யாக்ஷன் பூமியை ஒளித்தபோது அண்டச் சுவரிலிருந்து பூமியை வராஹரூபமெடுத்துப் பிரித்தெடுத்து ரக்ஷித்தான். (பார் அளந்தான்) மஹாபலி உலகங்களை இந்திரனிடமிருந்து அபஹரித்தபோது திரிவிக்கிரமனாகி உலகனைத்தையும் அளந்து, அவற்றை இந்திரனுக்கு மீட்டுக் கொடுத்து ரக்ஷித்தான். (பார் இடம் முன் படைத்தான்) ஶரீரேந்த்ரியங்கள் இல்லாமல் இவ்வுலக போகங்களுக்கோ மோக்ஷத்திற்கோ தகுதியற்றுக்கிடந்த சேதனரை அவற்றுக்குத் தகுதி உண்டாகும்படி ஸ்ருஷ்டிகாலத்தில் படைத்து ரக்ஷித்தான். (என்பரால்) இவ்வண்ணமாகப் பரம்பொருளைத் தவிர வேறு எவராலும் செய்ய இயலாத பெருஞ்செயல்களைச் செய்தவன் இவனே என்று குற்றமற்ற ப்ரமாணமான வேதமும் அதை ஏற்றுக்கொண்ட ரிஷிகளும் சொல்லுகிறார்கள். (பார் இடம் ஆவானும் தான்) இப்படி எல்லாவகையிலும் ரக்ஷிக்கையாலும், உலகனைத்தையும் ஶரீரமாகக்கொண்டு அதற்கு அந்தர்யாமியாய் இருக்கையாலும் உலகாகின்றவனும் அவனே. 'பாரிடமாவானும் தான் என்றால் உலகிற்கும் அவனுக்கும் ஸ்வரூபத்தின் ஐக்கியம் தோற்றுதோ?' எனில் தோஷங்கள் நிறைந்த உலகுக்கும் அவனுக்கும் ஸ்வரூபத்தின் ஐக்கியம் கூடாதாகையாலும், "பாருண்டான்" என்று

a ஜகத்தாகிறுன் ஈச்வரன். b ரக்ஷ்யரக்ஷகபாவாதிஸம்பந்தங்களாலே ஐக்யம்; ஸ்வரூபத: அன்று. (36) "𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" (ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம) என்று ப்ரபஞ்சத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஐக்யத்தைச்சொல்லி (36) "𑌤𑌜𑍍𑌜𑌲𑌾𑌨𑌿𑌤𑌿"(தஜ்ஜலாநிதி) என்று ஹேதுசொன்னுற்போலே. (ஆனுலாரிடமே) இப்படியானுல் இஜ்ஜகத்துக்கு ஆச்ரயமாவாரார்? (மற்றெருவர்க்காவான்புகாவாலவை) c,d ஜகத்தில் இச்சேதநர் வேறெருவனுக்கு சேஷமாவான் புகா. e உண்டுமிழ்ந்தென்கிற தொழில்கள் வேறெரு வ்யக்திக்கு ஆகா என்றுமாம். 42

---

தொடங்கி அவன் ரக்ஷகனுகவும் காரணமாகவும், வியாபகனுகவும், இவ்வுலகம் அவனுல் ரக்ஷிக்கப்படுவதாகவும், அவனுக்குக் கார்யமாகவும் அவனுல் வியாபிக்கப்படுவதாகவும் இருப்பதாகவும் கூறி ரக்ஷ்யரக்ஷக பாவம், கார்யகாரண பாவம், சரீரசரீரிபாவம் ஆகிய ஸம்பந்தங்களே உலகை அவனேடு ஒன்ருகக் கூறுவதற்குக் காரணம் என்று காட்டுகையாலும் ஸ்வரூபத்தின் ஐக்கியம் பொருந்தாது.

36. ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி சாந்த
உபாஸீத [சாந்தோ 3-14-1]

['ப்ரஹ்மத்திடமிருந்து உண்டானதாலும் ப்ரஹ்மத்தினிடம் லயிப்பதாலும், ப்ரஹ்மத்தால் உயிர்வாழ்கையாலும், இவையெல்லாம் ப்ரஹ்மமேயாகும்' என்று (நினைத்துக்கொண்டு) சாந்தனுக உபாஸிக்கக்கடவன்.] என்றுவேதவாக்யமும் 'உலகனைத்தும் ப்ரஹ்மமே' என்று கூறி அதற்குக் காரணம் கார்யகாரணபாவமும் சரீரசரீரிபாவமும் என்று கூறிற்றன்றே. (ஆனுல் ஆரிடமே) இப்படி உலகுக்கு இவன் எல்லாமானுல் இவ்வுலகுக்குத் தஞ்சமாய் இருப்பது யார்? (மற்று ஒருவர்க்கு ஆவான் புகா அவை) இவ்வுலகிலுள்ள சேதநர்கள் வேறெருவருடைய உடைமையாகமாட்டா. "அவை" என்று "பார்" என்று சொல்லப்பட்ட உலகிலுள்ள சேதநரைக் குறிக்கிறது. அல்லது "உண்டான் உமிழ்ந்தான்" முதலான பதங்களால் சொல்லப்பட்ட செயல்கள் வேறெருவருக்குஆகமாட்டா என்று கூறுவதாகவும் கொள்ளலாம். "ஆல்" என்பது பொருளற்ற அசை. 42

43. அவய மெனநினைந்து வந்தசுரர் பாலே
நவையை நளிர்விப்பான் றன்னைக்—கவையில்
மனத்துயர வைத்திருந்து வாழ்த்தாதார்க் குண்டோ
மனத்துயரை மாய்க்கும் வகை.

பதவுரை:— அவயம் என நினைந்து — (நீயே எங்களுக்கு) அடைக்கலம் என எண்ணி, வந்த சுரர் பாலே— வந்த தேவதைகளிடத்திலுள்ள, நவையை— துக்கத்தை, நளிர்விப்பான் தன்னை — நடுங்கிப் போம்படி பண்ணின ஸர்வேஶ்வரனை, கவை இல் மனத்து — ஸம்சயம் அற்ற மனத்தில், உயரவைத்து— உன்னதமாக வைத்து, இருந்து— நிலையாயிருந்து, வாழ்த்தாதார்க்கு — மங்களாசாஸனம் செய்யாதவர்களுக்கு, மனம் துயரை மாய்க்கும் வகை உண்டோ — மனஸ்ஸிலேயுள்ள துக்கத்தைப் போக்க வழியுண்டோ?

---

அவ:— நாற்பத்துமூன்றும்பாட்டில்; (அவயம்) ப்ரபல ப்ரதிப₃ந்த₄கங்களைப் போக்குமவனைப் பற்றாதார்க்கு வரும் மநோது₃:க்க₂ங்களைப் போக்கவொண்ணாது.

---

43. அவ:—"சேதநர்க்கு வரும் பெரிய தடைகளையும் போக்குகின்ற எம்பெருமானைப் பற்றாதவர்களுக்கு இவ்வுலகில் வரும் மனத்துன்பங்களைப் போக்க முடியாது" என்கிறார்.

---

அரு:— நாற்பத்திரண்டாம் பாட்டு. a, b "பாரிடமாவான்" என்று ஸ்வரூபைக்யஞ்சொல்லுகிறதோவென்ன அருளிச்செய்கிறார் (ரக்ஷ்யரக்ஷகப₄ாவ) இத்யாதி₃. c, d, e "அவை"-சேதநராதல், கீழ்ச்சொன்ன வ்யாபாரமாதல். ஆவான் புகா; ஆல்- அசை. 42

a ஜகத்தாகிறன் ஈச்வரன். b ரக்ஷ்யரக்ஷகபாவாதிஸம்பந்தங்களாலே ஐக்யம்; ஸ்வரூபத: அன்று. (36) "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம) என்று ப்ரபஞ்சத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஐக்யத்தைச்சொல்லி (36) "தஜ்ஜலாநிதி" (தஜ்ஜலாநிதி) என்று ஹேதுசொன்னாற்போலே. (ஆனலாரிடமே) இப்படியானால் இஜ்ஜகத்துக்கு ஆச்ரயமாவாரார்? (மற்றொருவர்க்காவான்புகாவாலவை) c,d ஜகத்தில் இச்சேதநர் வேறொருவனுக்கு சேஷமாவான் புகா. e உண்டுமிழ்ந்தென்கிற தொழில்கள் வேறொரு வ்யக்திக்கு ஆகா என்றுமாம். 42

---

தொடங்கி அவன் ரக்ஷகனாகவும் காரணமாகவும், வியாபகனாகவும், இவ்வுலகம் அவனால் ரக்ஷிக்கப்படுவதாகவும், அவனுக்கு கார்யமாகவும் அவனால் வியாபிக்கப்படுவதாகவும் இருப்பதாகவும் கூறி ரக்ஷ்யரக்ஷக பாவம், கார்யகாரண பாவம், சரீரசரீரிபாவம் ஆகிய ஸம்பந்தங்களே உலகை அவனோடு ஒன்றாகக் கூறுவதற்குக் காரணம் என்று காட்டுகையாலும் ஸ்வரூபத்தின் ஐக்கியம் பொருந்தாது.

36. ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத [சாந்தோ 3-14-1]

['ப்ரஹ்மத்திடமிருந்து உண்டானதாலும் ப்ரஹ்மத்தினிடம் லயிப்பதாலும், ப்ரஹ்மத்தால் உயிர்வாழ்கையாலும், இவையெல்லாம் ப்ரஹ்மமேயாகும்' என்று (நினைத்துக்கொண்டு) சாந்தனாக உபாஸிக்கக்கடவன்.] என்றுவேதவாக்யமும் 'உலகனைத்தும் ப்ரஹ்மமே' என்று கூறி அதற்குக் காரணம் கார்யகாரணபாவமும் சரீரசரீரிபாவமும் என்று கூறிற்றன்றோ. (ஆனல் ஆரிடமே) இப்படி உலகுக்கு இவன் எல்லாமானால் இவ்வுலகுக்குத் தஞ்சமாய் இருப்பது யார்? (மற்று ஒருவர்க்கு ஆவான் புகா அவை) இவ்வுலகிலுள்ள சேதநர்கள் வேறொருவருடைய உடைமையாகமாட்டா. "அவை" என்று "பார்" என்று சொல்லப்பட்ட உலகிலுள்ள சேதநரைக் குறிக்கிறது. அல்லது "உண்டான் உமிழ்ந்தான்" முதலான பதங்களால் சொல்லப்பட்ட செயல்கள் வேறொருவருக்குஆகமாட்டா என்று கூறுவதாகவும் கொள்ளலாம். "ஆல்" என்பது பொருளற்ற அசை. 42

43. அவய மெனநினைந்து வந்தசுரர் பாலே
நவையை நளிர்விப்பான் றன்னைக்—கவையில்
மனத்துயர வைத்திருந்து வாழ்த்தாதார்க் குண்டோ
மனத்துயரை மாய்க்கும் வகை.

பதவுரை:— அவயம் என நினைந்து — (நீயே எங்களுக்கு) அடைக்கலம் என எண்ணி, வந்த சுரர் பாலே— வந்த தேவதைகளிடத்திலுள்ள, நவையை— துக்கத்தை, நளிர்விப்பான் தன்னை — நடுங்கிப் போம்படி பண்ணின ஸர்வேஶ்வரனை, கவை இல் மனத்து — ஸம்சயம் அற்ற மனத்தில், உயரவைத்து — உன்னதமாக வைத்து, இருந்து— நிலையாயிருந்து, வாழ்த்தாதார்க்கு — மங்களாசாஸனம் செய்யாதவர்களுக்கு, மனம் துயரை மாய்க்கும் வகை உண்டோ — மனஸ்ஸிலேயுள்ள துக்கத்தைப் போக்க வழியுண்டோ?

---

அவ:— நாற்பத்துமூன்றும்பாட்டில்; (அவயம்) ப்ரபல ப்ரதிபந்தகங்களைப் போக்குமவனைப் பற்றாதார்க்கு வரும் மநோதுஃக்கங்களைப் போக்கவொண்ணாது.

---

43. அவ:—"சேதநர்க்கு வரும் பெரிய தடைகளையும் போக்குகின்ற எம்பெருமானைப் பற்றாதவர்களுக்கு இவ்வுலகில் வரும் மனத்துன்பங்களைப் போக்க முடியாது" என்கிறார்.

---

அரு:— நாற்பத்திரண்டாம் பாட்டு. a, b "பாரிடமாவான்" என்று ஸ்வரூபைக்யஞ்சொல்லுகிறதோவென்ன அருளிச்செய்கிறார் (ரக்ஷ்யரக்ஷகபாவ) இத்யாதி. c, d, e "அவை"-சேதநராதல், கீழ்ச்சொன்ன வ்யாபாரமாதல். ஆவான் புகா; ஆல்-அசை. 42

வ்யா:— (அவயமித்யாதி) (37) "परावरेशं शरणं" (பராவரேமம் மரணம்) என்னும்படி "அபயம்" என்று நினைத்து வந்த தேவதைகளை அந்த a துःக்கத்தை நடுங்கப்பண்ணிப் போக்குமவன் தன்னை. b நவையென்று துःக்கஹேதுவான b₁ குற்றமாகவுமாம். (கவையித்யாதி) இவ்விஷயங்களைப் பற்றுவோமோ? ஈஶ்வரனைப் பற்றுவோமோ? அயோக்யரென்றகலுவோமோ? அகலாதொழிவோமோ? என்று

---

வ்யா:—(அவயம் என நினைந்து வந்த சுரர்பாலே நவையை நளிர்விப்பான் தன்னை)

37. யதாவத் கதிதோ தேவைர் ப்ரஹ்மா ப்ராஹ ததः ஸுராந்।

பராவரேமம் மரணம் வ்ரஜத்வமஸுரார்த்தநம் ॥
[வி. பு. 1-9-35]

[தேவர்களால் தங்கள் துன்பங்களை நன்கு அறிவிக்கப்பட்ட பிரமன் "மேலானவர்களோடு, கீழானவர்களோடு வாசியற எலலாருக்கும் ஈச்வரனுயிருப்பவனும், அஸுரசத்ருவானவனுமான பகவானை சரணமடையுங்கள்" என்று தேவர்களிடம் சொன்ஞன்.] என்கிறபடியே "அபயம்' [தஞ்சம்] என்று நினைத்துவந்த தேவர்களை அவர்களுககு வரும் துன்பததை நடுங்கி நீங்கும்படி செய்கின்றவன். 'நவை" என்று துன்பத்தைச் சொல்லுகிறது; அல்லது துனபத்திற்குக் காரணமான பாபத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (கவை இல் மனத்து உயரவைததிருந்து வாழ்த்தாதார்க்கு உண்டோ மனத்துயரை மாய்க்கும் வகை) ஐடமற்ற மனத்தில் அந்த எம்பெருமானை மிக உயர்ந்த இடததில் வைதது நிலையாயிருந்து பல்லாண்டு பாடாதவர்களுக்கு மனத்துன்பத்தைப் போக்குவதற்கு வழியுண்டோ? "கவை" என்று

---

அரு:— நாற்பத்துமூன்றும் பாட்டு. a. b "நவை"— துःக்கமாதல், பாபமாதல்.

44. வகைசேர்ந்த நன்னெஞ்சும் நாவுடைய வாயும்
மிகவாய்ந்த வீழா வெனிலும்—மிகவாய்ந்து
மாலைத்தாம் வாழ்த்தா திருப்ப ரிதுவன்றே
மேலைத்தாம் செய்யும் வினை.

பதவுரை:— வகை சேர்ந்த—(ஞானம் வெளிப்படும்)வழியாகச் சேர்ந்திருக்கும், நல் நெஞ்சும் — மேலான மனமும், நாவு உடைய — நாக்கையுடைய, வாயும்—வாயும், மிக வாய்ந்து—மிகவும் ஈடுபட்டு, வீழா எனிலும் — (எம்பெருமானை) அடையாவிடிலும், மிக வாய்ந்து— மிகவும் சிரமப்பட்டு, மாலை —ஸர்வேஶ்வரனை, தாம் வாழ்த்தாதிருப்பர்—ஸம்ஸாரிகள் மங்களாசாஸனம் செய்யாதிருப்பார்; மேலை —அநாதிகாலமாய். தாம் செய்யும் வினை — தாங்கள் செய்யும் பாபத்தின் பலன், இது அன்றே — இதுவல்லவா?

---

இரண்டுமின்றிக்கேயிருக்கிற மநஸ்ஸிலே இவனை உயர வைத்து மங்களாஶாஸனம் பண்ணுதார்க்குமுண்டோ மனத் துயர் மாய்க்கும் ப்ரகாரம்? 43

---

'ஶப்தாதி முதலான விஷயங்களைப் பற்றுவோமோ அல்லது ஈச்வரனைப் பற்றுவோமோ?' என்னும் ஐயத்தையும், 'நமக்குத் தகுதியில்லை என்று அகல்வோமோ அல்லது அகலாதிருப் போமோ?' என்ற ஐயத்தையும் குறிக்கிறது. மனத்திலே உயர்ந்த இடத்தில் வைக்கையாவது—அவனே ப்ராப்யம் ப்ராபகம், தாரகம், போஷகம், போக்யம் முதலான எல்லாம் என்று நினைக்கை. 43

**வ்யா:— நாற்பத்துநாலாம்பாட்டில்; (வகை) இதுக்கு பட்டர் ஒருபடியும் பிள்ளைதிருநறையூரரையர் ஒருபடியு மருளிச்செய்வர். (வகைசேர்ந்த நல்நெஞ்சும்) ஶரீரபரிக்ரஹம் பண்ணின ஆத்மாவுக்கு ஜ்ஞாநப்ரஸரத்துக்காகச் சேர்ந்த நெஞ்சும். (நாவுடைய வாயும்) ஸர்வேஶ்வரனை ஸ்துதிக்கக்கண்ட வாயும். (மிக வாய்ந்துவீழாவெனிலும்) குணத்ரயவஶ்யராகையாலே ரஜஸ்தமஸ்ஸுக்கள் வர்த்தித்தபோது இவன் பக்கல் வந்தனவில்லையாகிலும். (மிக வித்யாதி) (38) ''सत्वात् सञ्जायते ज्ञानं'' (ஸத்வாத் ஸஞ்ஜா**

---

44. அவ:—எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடாமல் துன்பத்தில் உழலும் ஸம்ஸாரிகளைப் பற்றிய பேச்சு சென்ற பாட்டில் வந்தவுடன் 'அது அவர்களுடைய பாப பலமே' என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— இப்பாட்டிற்கு பட்டர் ஒருவகையாகவும் பிள்ளை திருநறையூரரையர் ஒருவகையாகவும் அர்த்தம் அருளிச் செய்வர். முதலில் பட்டர் நிர்வாஹம் விவரிக்கப்படுகிறது. (வகை சேர்ந்த நல்நெஞ்சும்) ஶரீரத்தோடு கூடிய சேதநனுக்கு ஜ்ஞாநம் வெளிப்படும் வழியாகச் சேர்ந்திருக்கும் மேலான மனமும். (நாவுடைய வாயும்) ஸர்வேஶ்வரனைத் துதிப்பதற்காகவே நாவோடு படைக்கப்பட்ட வாயும். (மிக வாய்ந்து வீழா எனிலும்) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களுக்குப் இவர்கள் வசப்பட்டவர்களாகையாலே ரஜோகுணமும் தமோகுணமும் பெரும்பாலும் விஞ்சியிருக்கையாலே எம்பெருமான் விஷயத்தில் மிகப்பொருந்தி ஈடுபட இல்லையானாலும். (மிகவாய்ந்து மாலைத்தாம் வாழ்த்தாதிருப்பர்)

**38. ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச |**
**ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞாந மேவச ||**
**[கீதை 14—17]**

யதே ஜ்ஞாநம்) என்று ஸத்வகார்யமான ஜ்ஞாநத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்களைத் தள்ளி ஸர்வேஶ்வரனை வாழ்த்தாதேயிருப்பர்கள். (இதுவித்யாதி₃) இதுவன்றே a ஸம்ஸாரம் நித்யமாக இவர்கள் பண்ணின பாபம்.

b ஈஶ்வரனுடைய கு₃ணங்களிலே சேர்ந்த நெஞ்சும் கு₃ணமொன்றையுமே ஏத்தும் வாயும் அல்லாத கு₃ணங்களிலும் உள்புக்கதில்லையாகிலும் எல்லா கு₃ணங்களிலும்

---

[ஸத்வகுணத்திலிருந்து ஞானமுண்டாகிறது. ரஜோகுணத்திலிருந்து (ஸ்வர்க்கம் முதலிய பலன்களில்) ஆசை உண்டாகிறது. தமோகுணத்திலிருந்து கவனமின்மையாலேற்படும் அஸத்கர்மப்ரவ்ருத்தியும், விபரீத ஜ்ஞாநமும், அஜ்ஞானமும் ஏற்படுகின்றன.] என்கிறபடியே ஸாத்விகமான ஆகாரம் ஸாத்விகர்களோடு தொடர்பு முதலானவற்றாலே ஸத்வகு₃ணத்தை வளர்த்து அதனால் உண்டாகும் ஞானத்தாலே ரஜஸ் தமோகு₃ணங்களைத் தள்ளி அறிவுடைய சேதநன் ஸர்வேச்வரனை வாழ்த்தவேண்டும்; ஆனால் பெரும்பாலான் சேதநர்கள் இப்படி வாழ்த்தாதிருக்கிறார்கள். (இது வன்றே மேலைத்தாம் செய்யும் வினை) இதுவல்லவோ இவர்கள் மேல்வரும் காலத்திலும் ஸம்ஸாரியாகவே இருக்கும்படியாக இவர்கள் செய்யும் பாபச்செயல், மேலை — மேல்வரும் காலத்திற்காக.

இனி, பிள்ளை திருநறையூரரையர் நிர்வாஹம் விவரிக்கப்படுகிறது. (வகை சேர்ந்த நல் நெஞ்சும் நாவுடைய வாயும்) எம்பெருமானுடைய ஒரு குணத்திலேயே ஈடுபடும் நல்ல மனமும் அதையே துதிக்கும் நாவுடைய வாயும். (மிக வாய்ந்து வீழா வெனிலும்) எம்பெருமானுடைய மற்ற குணங்களிலும் இந்த மனமும் வாயும் ஈடுபடுவதில்லையாகிலும். (மிக

---

அரு:— நாற்பத்துநாலாம்பாட்டு. a "மேலை" = மேலைக்கு;—(ஸம்ஸாரம் நித்யமாக). b அரையர் நிர்வாஹம்—

45. வினையார் தரமுயலும் வெம்மையை(யே) யஞ்சித்
தினையாம் சிறிதளவும் செல்ல—நினையாது
வாசகத்தா லேத்தினேன் வானோர் தொழுதிறைஞ்சும்
நாயகத்தான் பொன்னடிக்கள் நான்.

பதவுரை— வினையார்— (ப,க,வானிடமிருந்து) பிரிகை யானது, தர முயலும்— தருகைக்கு முயல்கிற, வெம்மையை அஞ்சி— துன்பத்தை நினைத்துப் பயப்பட்டு, தினையாம சிறிது அளவும்— மிகச் சிறிய பொழுதும், செல்ல நினையாது— அவனை யொழியக் காலம்கழிய நினையாமல், நான்— நான், வானோர்—நித்யஸூரிகள், தொழுது இறைஞ்சும்— மனோ வாக்குகளால் வணங்கும், நாயகத்தான்—ஸ்வாமியினு டைய, பொன் அடிக்கள்—அழகிய திருவடிகளை, வாசகத் தால் ஏத்தினேன்—வாயால் துதித்தேன்.

---

உள்புகுப்படி ஆராய்ந்து ஸர்வேஶ்வரனை ஏத்தாதிருப்பர் கள்; c இதுவன்றோ c, பண்ணின c, பாபத்தினுடைய ப,லம் என்று பிள்ளை திருநறையூரரையர் நிர்வாஹம். 44

---

ஆய்ந்து மாலைத் தாம் வாழ்த்தாது இருப்பர்) எம்பெருமா னுடைய எல்லா குணங்களிலும் உள்புகுந்து ஆராய்ந்து அறிவுடைய சேதநன் ஸர்வேச்வரனைத் துதிக்கவேண்டும். ஆனால் பெரும்பாலானவர்களுக்கு அப்படித் துதிக்க முடிவ தில்லை. (இதுவன்றோ யேலைத் தாம் செய்யும் வினை) இப்படி எம்பெருமானுடைய எல்லா குணங்களிலும் மனமும் நாவும் ஈடுபடாது இருப்பது முற்பிறவிகளில் நாம் பண்ணின பாபத்தினுடைய பலனே. 'வினை' என்பது பட்டர் நிர்வா ஹத்தில் வாழ்த்தாதிருப்பதாகிற பாபச்செயலைக் குறிக்கிறது. திருநறையூரரையர் நிர்வாஹத்தில் முன்செய்த பாபத்தின் ப,லனைக் குறிக்கிறது. 44

---

(ஈஶ்வரனுடைய) இத்யாதி, c மேலே — பண்டு 8, 0, 0
''வினை'' பாபமாதல், பாபப,லமாதல். 44

அவ: — நாற்பத்தைந்தாம் பாட்டில்; (வினை) நீரிதில் செய்ததென்னென்னில், பிரிந்தால் வரும் அநர்த்தத்தை நினைத்து அவன் திருவடிகளை ஏத்தினேனென்கிறார்.

வ்யா:- a (வினையாரித்யாதி) b பிரிவாலே பிறக்கும் வெம்மையை அஞ்சி க்ஷணமாத்ரமும் அவனையொழியக் காலம் செல்லப்பாராதே வாகிந்த்ரியத்தைக் கொண்டு

---

45. அவ:— சென்ற பாட்டில் ஸம்ஸாரிகள் பூர்வ ஜன்மபாபத்தாலே பகவத்விஷயத்தில் ஈடுபடாதிருப்பர் என்றார். 'நீர் என் செய்தீர்?' என்னும் கேள்வி எழ, 'எம்பெருமானைப் பிரிந்தால் வரும துன்பத்தை நினைத்து அவன் திருவடிகளைத் துதித்தேன்' என்கிறார்.

வ்யா:— (வினையார் தரமுயலும் வெம்மையை அஞ்சி தினையாம சிறிதளவும் செல்ல நினையாது வாசகத்தால் ஏத்தினேன்) பாபத்தின் பலமான பிரிவாலே பிறக்கும் துன்பத்தைக்கண்டு பயப்பட்டு மிகச்சிறிய காலமும் அவனைப் பிரிந்து போதுபோக்க நினையாமல் என்னுடைய வாக்காகிற இந்திரியத்தைக் கொண்டு அவனைத் துதித்தேன். 'இங்கில்லை' [30] என்னும் பாட்டில் பாபங்களுக்குத் தன் நெஞ்சில் இடமில்லை என்று கூறுகையாலும் மேலே "வாரோ மறிகடலோ" [54] என்னும் பாட்டிலும் பாபங்கள் தம்மை விட்டு ஓடிவிட்டன என்று கூறுகையாலும், இங்கு "வினையார்" என்றது பாபத்தைக் குறிக்கமாட்டாது. முன்வினைப் பயனாக விளைந்துள்ள [பகவானிடமிருந்து] பிரிவையே குறிக்கும். "செல்ல நினையாது" என்றது அவனையொழியப் போதுபோக்க நினையாமல் என்று பொருள்படும். 'வாசகம்" என்று வாக்காகிற இந்தரியத்தைக் குறிக்கிறது. துதித்தது

---

அரு: — நாற்பத்தைந்தாம பாட்டு. a, b "வினையார்" வினையென்று பாபகார்யமான விஶ்லேஷம்; 'தரமுயலும்" கொடுக்க உத்யோகிக்கிற; இத்தால்(பிரிவாலே பிறக்கும்) என்றபடி. 45.

46. நான்கூறும் கூற்றுவ தித்தனையே நாளும்
தேங்கோத நீருருவன் செங்கண்மால்—நீங்காத
மாகதியாம் வெந்நரகில் சேராமல் காப்பதற்கு
நீகதியா நெஞ்சே நினை.

பதவுரை:— தேங்கு ஏதம் நீர் உருவன்—தேங்கின கடலின் நீர் போன்ற நிறத்தையுடையவனாய், செம் கண்மால்—சிவந்திருக்கும் கண்களையுடையனான ஸர்வேஶ்வரன், நீங்காத மாகதியாம்—மீட்சியில்லாத ப்ராப்யமானவன்; வெம் நரகில்—கொடிய ஸம்ஸாரத்தில், சேராமல்—நாம் விழாமல், காப்பதற்கு—ரக்ஷிப்பதற்கு, கதியாம்-உபாயமுமானவன். நெஞ்சே—நெஞ்சே, நீ—நீ, நினை—(இதை) எண்ணுவாயாக; நான்—(இதையறிந்த) நான், நாள் நாளும்—தினந்தோறும், கூறும் கூற்றுவது—சொல்லும் சொல்லாவது, இத்தனையே—இவ்வளவே.

---

ஏத்தினேன். (வானோரித்யாதி) நித்ய ஸூரிகள் மநோவாக்காயங்களாலே அடிமை செய்யும் ஸர்வேஶ்வரனுடைய விலக்ஷணமான திருவடிகளைப்பெற்று, அதைப் பிழைக்கவொண்ணாதென்று ஏத்தினேன். 45

---

எதை? என்னும் கேள்விக்கு பதில் கூறுகிறார் — (வானோர் தொழுது இறைஞ்சும் நாயகத்தான் பொன் அடிக்கள் நான்) நித்யஸூரிகள் மனம் மொழி மெய் என்னும் முக்கரணங்களாலும் அடிமை செய்யும் ஸர்வேஶ்வரனுடைய சிறந்த திருவடிகளைப் பெற்று அதைக்கண நேரமும் கைவிடக்கூடாது என்னும் நினைவாலே துதித்தேன். 'தொழுது' என்றது மனத்தாலும், உடலாலும் தொழுவதையும் 'இறைஞ்சும்' என்றது வாக்கால் துதிப்பதையும் கூறுகிறது. 'பொன் அடிக்கள்' என்று பொன்போலே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருக்கும் திருவடிகள் என்று கருத்து. 45

அவ:— நாற்பத்தாரும் பாட்டில்; (நான் கூறும்) கீழே தேஹயாத்ரை செல்லும்படி சொல்லிற்று; இதில் "ப்ராப்ய ப்ராபகங்கள் அவனேயென்று நினைத்திரு" என்கிறார்.

வ்யா:— (நான் கூறும் கூற்ருவதித்தனையே) ஒரு நாளேயோ இப்படி சொல்லுவதென்னில், — (நாளும்) என்றுமித்தனையே. (தேங்கோதமித்யாதி) தேங்கின கடல் போலேயிருந்த திருமேனியையும், ஐஶ்வர்யஸூசகமான கண்களையுமுடைய ஸர்வேஶ்வரனை, மீட்சியில்லாத ப்ராப்ய மாகவும்.ஸம்ஸாரத்திலேசேராதபடிக்கீடான ப்ராபகமாகவும்

---

46. அவ.— சென்ற பாட்டில் 'எம்பெருமானைத் துதிப் பதையே போதுபோக்காகக்கொண்டேன்' என்ருர்; இப்பாட்டில் 'அவனையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் நினைத் திரு' என்று நெஞ்சைப்பார்த்துக் கூறுகிருர்.

வ்யா:— (நான் கூறும் கூற்றாவது இத்தனையே) நான் சொல்லும் சொல் இவ்வளவேயாகும். 'ஒருநாள் ஒருபோதில் சொல்லுவதோ இது?' எனில்: (நாளும்) நாள் நாளும்; என் றும் எல்லாப்போதிலும் இதுவே சொல்லுவது. அது யாது என்பதை மேலே கூறுகிருர்—(தேங்கு ஓதம் நீர் உருவன் செங் கண்மால் நீங்காத மாகதியாம்) தேங்கின கடல் போலே இருந்த திருமேனியையும், 'இவனே ஸர்வேஶ்வரன்' என்ப தைக்காட்டுகின்ற திருக்கண்களையும் உடைய ஸர்வேஶ்வரனே மீட்சியில்லாத ப்ராப்யமாவான். 'நீங்காத' என்றது இவ் வுலகப் பலன்களைப்போலே புனராவ்ருத்தி (மீட்சி) இல்லாமை யைக் குறிக்கிறது. (வெந்நரகில் சேராமல் காப்பதற்கு கதி யாம்) ஸம்ஸாரமாகிற கொடிய நரகத்தில் சேராமல் காப்ப தற்கு உபாயமாகவும் இருக்கிருன். (நெஞ்சே நீ நினை) நெஞ்சே! இதை நீ நினைப்பாயாக. "நீங்காத மாகதியா, வெந்நர கில் சேராமல் காப்பதற்கு கதியா நீ நினை" என்று கொண்டு

47. நினைத்திறைஞ்சி மானிடவ ரொன்றிரப்ப ரென்றே
நினைத்திடவும் வேண்டாநீ நேரே—நினைத்திறைஞ்ச
எவ்வளவ ரெவ்விடத்தோர் மாலே, அதுதானும்
எவ்வளவு முண்டோ வெமக்கு.

பதவுரை:— மாலே—(அளவிட்டறியமுடியாத) ஸர்வேச்வரனே!, ''மானிடவர்—மநுஷ்யர்கள், நினைத்து—நினைத்து, இறைஞ்சி—வணங்கி, ஒன்று இரப்பர் — ஒரு சிறுபயனை யாசிப்பார்கள்'', என்று—என்று, நீ—நீ, நினைத்திடவும் வேண்டா— நினைக்கவும் வேண்டா; நேரேநினைத்து (உன்னை) உள்ளபடி அறிந்து, இறைஞ்ச—வணங்குவதற்கு, எவ்வள

---

நெஞ்சே a நினை, b இத்தால் ப்ராப்ய ப்ராபகங்களுமவனே என்னுமிடமும் ப்ராப்தாவுக்கு ப்ரதிபத்திமாத்ரமே என்னுமிடமும் ப்ரபந்நனுக்கு இருகால் மட்டொ(ற்றொ)ன்றும் சொல்லவேண்டுவதில்லை என்னுமிடமும் சொல்லுகிறது. 46

---

''மீட்சியில்லாத ப்ராப்யமாகவும், ஸம்ஸாரமாகிய கொடிய நரகில் சேராமல் காப்பதற்கு உபாயமாகவும், நெஞ்சே! நீ நினைப்பாயாக'' என்றும் பொருள் கொள்ளலாம். இரண்டு விதமான அந்வயத்திலும் ப்ராப்யமும் ப்ராபகமும் எம்பெருமானே என்னும் அர்த்தம் தேறுகிறது. (நினை) எம்பெருமானை அடைபவனான ஜீவனுக்கு அவனை ப்ராப்யப்ராபகங்களாக நினைப்பதொன்றே செய்யவேண்டியது, 'ஸக்ருதேவ ப்ரபந்நாய' [ஒரு முறையே சரணமடைந்தவன் பொருட்டு] என்கிற ராமசரம ச்லோகத்தின்படி ஒரு முறை நினைப்பதற்கு மேலே இரண்டாவது முறை வேறொன்றும் செய்யவேண்டியதில்லை யென்று கருத்து. 46

---

அரு:— தாற்புத்தரும் பாட்டு. a. b. ''நினை'' என்கையாலே, ப்ரதிபத்தியும், அதுதான் ஒருகால் என்னுமிடமும் தோற்றுகிறது. 46

வர் — (ஸம்ஸாரிகள்) எவ்வளவு ஞானமுடையவர்? எவ்விடத்தோர் — எந்த தேசத்திலிருப்பவர்? அது தானும் — (வேறு பயனை யாசிக்கையாகிற) அதுதான், எவ்வளவும் — சிறிதும், எமக்கு உண்டோ — (உன் கடாக்ஷம் பெற்ற) எங்களுக்கு உண்டோ?

---

அவ: — நாற்பத்தேழாம் பாட்டில்; (நினைத்து) "நீர் நம்மை ப்ராப்யப்ராபகமாகவும், நம்மை ஏத்துகையே தேஹயாத்ரையாகவுமாக இராநின்றீர்; இதுக்கு விபரீதமாயிருப்பானேன் ஸம்ஸாரம்?" என்ன, "உன் கடாக்ஷமில்லாதபடியிருக்கை குற்றமோ?" என்கிறார்.

வ்யா: — (நினைத்தித்யாதி) நம்மை நினைத்து நம் காலிலே விழுந்து உம்மைப்போலே நம்மையே ப்ரயோஜனமாகப்பற்றுதே, ப்ரயோஜநாந்தரத்துக்கும் அடியொப்பரென்று நினைக்கவேண்டா. a (நேரே இத்யாதி) b நீயே

---

47. அவ: — "நீர் நம்மை ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும், நம்மைத் துதிப்பதையே பொழுது போக்காகவும் கொண்டிருக்கின்றீர். ஸம்ஸாரமண்டலத்திலிருக்கும் மற்றுள்ளார் இதற்கு நேர்மாறாக இருக்கிறார்களே" என்று எம்பெருமான் திருவுள்ளமாக, "உன் கடாக்ஷமில்லாதார் இப்படியிருப்பது பற்றி நீ அவர்களை வெறுக்க வேண்டா" என்கிறார்.

வ்யா: — (நினைத்திறைஞ்சி மானிடவர் ஒன்றிரப்பர் என்றே நீ நினைத்திடவும் வேண்டா) "நம்மை நினைத்து, நம் காலிலே விழுந்து மற்றுள்ள மனிதர்கள் உம்மைப்போலே நம்மையே பயனாகப்பற்றாமல், மிகத்தாழ்ந்த மற்ற பயன்களை யாசிக்கிறார்களே" என்று நீ நினைக்கவேண்டா. (நேரே நினைத்திறைஞ்ச எவ்வளவர் எவ்விடத்தோர்) "நீயே இயல்வான

---

அரு: — நாற்பத்தேழாம் பாட்டு. a, b, c "எவ்வளவர்" எவ்வளவிலுள்ளார் — எப்படிப்பட்ட ஜ்ஞானத்தையுடையார்?

48. எமக்கியாம் விண்ணாட்டுக் குச்சமதாம் வீட்டை
அமைத்திருந்தோ மஃதன்றே யாமாறு— அமைப்
பொலிந்த
மென்தோளி காரணமா வெங்கோட்டே றேழுடனே
கொன்றானை யேமனத்துக் கொண்டு.

---

ப்ராப்யமும் ப்ராபகமும் என்று நினைத்திறைஞ்ச எங்குள் ளார்க்குப்போம்? c எவ்வளவிலுள்ளார்க்குப்போம்? (மாலே) உன்னைச் சிலவராலே பரிச்சேதிக்கப்போமோ? d (அது தானுமெவ்வளவுமுண்டோவெமக்கு) உன் கடாக்ஷம் பெற் றவர்களுக்கு e ப்ரயோஜநாந்தரத்திலே முதலடியிட வேண்டா; உன்கடாக்ஷமில்லாதார் இப்படி செய்தாரென்று உனக்கு வெறுக்கவொண்ணுமோ? 47.

---

ப்ராப்யமும் ப்ராபகமும்" என்று உள்ளபடி நினைத்து உன்னைத் துதிப்பதற்கு எங்குள்ளவர்களால்முடியும்? எவ்வளவு அறிவுள் ளவர்களால் இயலும்? பரமபதத்திலுள்ள எலலா மறிந்த நித்ய முக்தர்களுக்கன்றோ இயலும் என்று கருத்து. (மாலே) பெரியவனே! மிகப்பெரியவனான உன்னை மிகச்சிறியவர் களான இங்குள்ளவர்களாலே அளவிட்டு அறியமுடியுமோ? என்று கருத்து. (அதுதானும் எவ்வளவும் உண்டோ எமக்கு) இந்த ஸம்ஸாரிகளைப் போலே மற்ற பயன்களைக் கொள்ளும் தாழ்வு எனக்குச் சிறிதேனும் உண்டோ? உன் கடாக்ஷம் பெற்ற என்னைப் போன்றவர்களுககு மற்ற பயன் களோடு சிறிதும் சேர்த்தியில்லை. உன் கடாக்ஷம் இல்லாத ஸம்ஸாரிகள் மற்றபயன்களைப் பெற்றுப் போகிறார்கள் என் பது வியப்பல்லவே. இதற்காக அவர்களை நீ வெறுக்க முடியுமோ? என்று கருத்து. 47

---

d. e அதுதானும்— அந்தப்ரயோஜனத்தைக்கொள்ளுகை. 47

பதவுரை:— அமை பொலிந்த— மூங்கிலைப்போலே விளங்குகிற, மென் தோளி காரணமா— மென்மையான புஜங்களை யுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக, வெம் கோடு—கொடிய கொம்புகளையுடைய ஏழு ஏறு—ஏழு எருதுகளையும், உடனே — ஒரே சமயத்திலே, கொன்றானையே—கொன்ற க்ருஷ்ணனையே, மனத்துக்கொண்டு — உள்ளத்திலே வைத்து, நாம்— நாம், விண்ணாட்டுக்கு உச்சமதாம் வீட்டை — ஸ்வர்க்கம் முதலியவற்றுக்கு மேலிருக்கும் பரமபதத்தை, எமக்கு அமைத்திருந்தோம் — எங்களுக்கு ஆசைப்பட்டிருந்தோம், அஃதன்றே ஆம் ஆறு — அது அல்லவோ தக்க வழி.

---

அவ:— நாற்பத்தெட்டாம் பாட்டில்; "எமக்கு ப்ரபல ப்ரதிபந்தகம் போக்குமவனை உபாயமாக நெஞ்சிலேகொண்டு அவனால் பெறுவது பரமபதமென்று நினைத்திருந்தோம்; இதன்றோ இருக்கும்படி" என்கிறார்.

வ்யா:— நமக்கு நாம் ப்ரஹ்மாதிகளுக்கு a மேலான பரமபதத்தைப் b பாரித்திருந்தோம். இதுவன்றே செய்யும்

---

48. அவ:— "எம்முடைய வலிமை மிக்க தடைகளைப் போக்குகின்ற எம்பெருமானை உபாயமாக மனத்தில் கொண்டு, அவனால் அடைவதும் பரமபதமும் என்று எண்ணியிருந்தோம். இதுவன்றோ நாம் இருக்கவேண்டிய வழி" என்கிறார்.

வ்யா:— (எமக்கு யாம் விண்ணாட்டுக்கு உச்சமதாம் வீட்டை அமைத்திருந்தோம்) நமக்கு நாம் பிரமன் உருத்திரன் இந்திரன் முதலானவர்களுடைய லோகங்களுக்குமேலே இருக்கும் பரமபதத்தை ஆசைப்பட்டிருந்தோம். (அஃதன்றே

---

அரு:— நாற்பத்தெட்டாம்பாட்டு. a "உச்சமதாம்" மேலான வீட்டை; b "அமைத்திருந்தோம்" அமைவு-சமை

வழி. ப்₃ரஹ்மாதி₃களுடைய லோகத்துக்கு மேலாய், பரம பத₃த்துக்குப் புறம்பாயிருக்கும் கைவல்யமோக்ஷத்தை, அமைத்திருந்தோம் — c வேண்டாவென்றிருந்தோம் என்றுமாம். d பெருமாள் கு₃ணங்களிலே பழகின உடம்பொழியப் பரமபதம் வேண்டாவென்றிருந்தாற்போலே. அஸாத₄ரணையாய் வேய்போலே விளங்கி ம்ருது₃வான தோளையுடைய

ஆமாறு) இப்படியிருப்பதல்லவோ நாம் இருக்கவேண்டிய வழி. "நீர் அதை அடைவதற்குத் தடைகள் பல உண்டே. அவற்றை எப்படிப் போக்குவீர்" என்னும் கேள்விஎழ, "நப்பின்னைப் பிராட்டியை அடைவதற்குத் தடையாயிருந்தவற்றைப் போக்கியவன் அவற்றைப்போக்குவான்" என்கிறார் மேலே-(அமைப் பொலிந்த மென்தோளி காரணமா வெங்கோட்டு ஏறேழுடனே கொன்றானையே மனத்துக் கொண்டு) மூங்கிலைப்போலே விளங்குகின்ற மென்மையான தோள்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காகக் கொடிய கொம்புகளையுடைய ஏழு எருதுகளையும் ஒரே காலத்தில் கொன்ற கண்ணனையே நாம் மனத்தில் கொள்கையாலே, எம் தடைகள் அந்த எருதுகள் பட்டது படும் என்கிறார். இங்கு இப்பொருளில் "அமைவு" என்னும் பதம் "சமைவு" என்னும் பொருளுடையதாய் ஆசைப்பட்டிருந்தோம் என்றதாகிறது. "அமையும்" என்றால் "வேண்டா" என்று பொருள்படுமாகையாலே, "அமைத்திருந்தோம்" என்பதற்த 'வேண்டாஎன்றிருந்தோம்' என்றும் பொருள் கூறலாம். பிரமன் முதலானவர்களின் உலகங்களுக்கு மேலாய், பரமபதத்திற்கு வெளியில் இருப்பதான கைவல்ய மோக்ஷம் வேண்டியதில்லை என்றிருந்தோம் என்று பொருள்படும். நப்பின்னைநாயகனை மனத்தில் கொண்ட நமக்கு ப₄க₃வத₃நுப₄வம் இல்லாத கைவல்ய மோக்ஷம் தேவையில்லை என்று கருத்து. இப்படியுமல்லாமல் "விண்ணாட்டுக்கு உச்சமதாம் வீடு" என்று பரமபத₃த்தையே சொல்லுவதாய், "ஸ்ரீராமபிரானுடைய கு₃ணங்களிலே ஈடுபட்டு

வாய், பாரித்திருந்தோமென்னுதல்; c அமைவு-அமையுமென்றாய், வேண்டாவென்னுதல்; d₃ பரமபத₃ந்தன்னையும்

49. கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள்தான்
வண்டருப் பூவைதான் மற்றுத்தான்—கண்டநாள்
காருருவங் காண்டோறு(ம்) நெஞ்சோடும் கண்ணனார்
பேருருவென் றெம்மைப் பிரிந்து.

பதவுரை:— கொண்டல் தான்—மேகங்களையும், மால் வரைதான் — பெரிய மலைகளையும், மா கடல் தான்—பரந்த கடலையும், கூர் இருள் தான் —நெருங்கிய இருளையும், வண்டு அரு பூவை தான் — வண்டுகள் விட்டுப்பிரியாத பூவைமரத்தையும், மற்றும் கார் உருவம் தான் — மற்றும் உள்ள கருநிறத்தையுடைய பொருள்களையும், கண்டநாள்— கண்டகாலத்தில், காண்தோறும்— பார்க்குப்போதெல்லாம்,

நப்பின்னைப் பிராட்டிக்காக வெவ்விய d₄ கோட்டையுடைய எருதுகளேழையும் உடனே செற்றவனையே நெஞ்சிலே கொண்டு இவ்வநுபவத்திற்காட்டில் d₄ பரமபதமும் வேண் டாவென்றிருந்தோமென்றுமாம். 48

அவன் திருமேனியாலே அணைக்கப்பெற்றதான இந்த வானர ரூபத்தைத் தவிர, அப்ராக்ருத ரூபத்துடன் பரமபதம் சென்று அநுபவிப்பதும் வேண்டியதில்லை" என்ற அநுமனைப்போலே, "நப்பின்னை கேள்வனான கண்ணனை நெஞ்சில் கொண்ட எனக்குப் பரமபதாநுபவமும் தேவையில்லை" என்பதாக வும் கொள்ளலாம். "இச்சுவை தவிர யான் போய் இந்திரலோக மாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநக ருளானே" [திருமாலை—2] என்றாரன்றோ தொண்டரடிப் பொடியாழ்வாரும். 48

வேண்டாவென்னுதல். d இந்த அர்த்தத்தைத் திருவடியை த்ருஷ்டாந்தமாக்கி அருளிச்செய்கிறார் (பெருமாள் இத் யாதி) d₄ "கேட்டு" கொம்பு. 48

நெஞ்சு—என்மனம், கண்ணனூர் பேர் உரு என்று— (இது) கண்... பிரானுடைய அழகிற் பெரிய உருவம் என்று நினைத்து, எம்மை—எங்களை, பிரிந்து ஓடும விட்டு (அவனிடம்) ஓடா நின்றது.

---

அவ:— நாற்பத்தொன்பதாம் பாட்டில்; (கொண்டல்) "அவனே ப்ராபகன்" என்றறுதியிட்டார்க்கு சரீராவஸாநத்தளவும் இருக்குப்படி சொல்லுகிறது.

வ்யா:— (கொண்டல்தானித்யாதி) உபமாநங்களைக் கண்டால் உபமேயமென்று நம்மைவிட்டு நெஞ்சு ஓடாநின்றது. மேகத்தை, கறுத்த மலையை, கடலை, கூரியவிருளை, வண்டுமாறுத பூவையென்கிற வ்ருக்ஷத்தைக் கண்டபோது. a(காருருவங்காண்டோறும்) b அநுக்தமானகறுத்தபூங்குவளை, நீலம், காயா இத்யாதி காணுந்தோறும் b* என்றுமாம்.

---

49. அவ:- சென்ற பாட்டில் 'எம்பெருமானே தடைகளைப் போக்கிப் பரமபதத்தை அளிக்கும்உபாயம்' என்று நிர்ணயித்தார். இப்படி உறுதியோடு இருப்பவர்களுக்கு இந்த ஶரீரம் முடியும் வரை போது போக்க வேண்டிய முறையைச் சொல்லுகிறார் இப்பாட்டில்.

வ்யா:—(கொண்டல் தான் மால் வரைதான் மாகடல் தான் கூரிருள் தான் வண்டறுப்பூவை தான் *காண்தோறு) உபமானங்களான மேகத்தையும், கறுத்த மலையையும், நீலக்கடலையும், அடர்ந்த இருளையும், வண்டு மாறுத பூக்களையுடைய பூவைமரத்தையும் கண்டபோது, (மற்று காருருவம் தான் கண்டநாள்) கீழே சொல்லாத கறுத்த பூங்குவளை, நீலமலர். காயாமலர் ஆகியவற்றைக்காணும் காலத்தில். * (காண்தோறும்) காணும் ஒவ்வொரு சமயமும என்றுமாம்.

---

அரு:— நாற்பத்தொன்பதாம் பாட்டு. a, b "மற்றுக் காருருவம்" என்று கூட்டியருளிச்செய்கிறார் (அநுக்தமான) இத்யாதி. b* (என்றுமாம்) என்றது அர்த்தாந்தரமன்று, உண்டாகிலும் ப்ரதிகோடி கண்டுகொள்வது.

---

* 'காண்தோறு' 'காண்தோறும்' என்னும் பாட பேதத்தால் இப்பொருள் வேற்றுமை.

50. பிரிந்தொன்று நோக்காது தம்முடைய பின்னே
திரிந்துழலும் சிந்தனையார் தம்மைப் — புரிந்தொருகால்
ஆவா வெனவிரங்கா ரந்தோ வலிதேகொல்
மாவாய் பிளந்தார் மனம்.

பதவுரை: – பிரிந்து – தம்மைவிட்டு, ஒன்று நோக்காது — வேறொன்றையும் எண்ணாதே, தம்முடைய பின்னே — தமக்குப் பின்னாலேயே, திரிந்து உழலும் — அலைந்து தடுமாறுகிற, சிந்தனையார் தம்மை — என் மனஸ்ஸை, ஒரு கால் — ஒரு தடவையாவது, புரிந்து—அன்பு புரிந்து ஆ ஆ என — ஐயோ! என்று, இரங்கார் — கருணை காட்டுகிறாரல்லர்; அந்தோ — ஐயோ!, மா வாய் பிளந்தார் மனம்—குதிரையுருவாய் வந்த கேசியின் வாயைக் கிழித்த எம்பெருமானுடைய மனம், வலிதே கொல் – கடினமானபடியென்?

---

c வடிவென்று கண்டால், "இது(க்கு) அவனன்று காண்" என்று கேட்டறிந்தாலும் பின்னையும் கண்டபோதெல்லாம்; (கண்ணனூர் பேருருவென்று) இதின்நெடுவாசியறிகிறதில்லை; d பேருருவென்று ஓடாநின்றது. 49

---

(காண்தோறும் நெஞ்சோடும்) இப்படிக் கருநிறமுடைய எந்த வடிவைக் கண்டாலும், "இது அவனன்று காண்" என்று பிறர் சொல்லக்கேட்டறிந்தாலும், மறுபடியும் காருருவத்தைக்கண்டபோதெல்லாம் எம் நெஞ்சு ஓடுகிறது. (கண்ணனூர் பேருருவென்று) இவையெல்லாம் அவனுக்கு ஒவ்வாத சிறியஉருக்கள் என்பதையும், அவனுடையது பேருரு என்பதையும் அறியாமல் ஓடுகிறது. (எம்மைப் பிரிந்து நெஞ்சு ஓடும்) தம்மை விட்டு, நெஞ்சு கண்ணனது உருவாகவே எண்ணி அவற்றை நோக்கி ஓடுகிறது. 49

---

c வர்த்தமாநத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (வடிவென்று) இத்யாதி. d[நெஞ்சானதுஎம்மைப் பிரிந்து பேருருவென்றே ஓடாநின்றது] என்றபடி. 49

அவ:— ஐம்பதாம் பாட்டில்; (பிரிந்தொன்று) 'உபமாநங்களைக்கண்டு உபமேயமென்றிருக்கும்படியான a எம்மை இவர் நோக்காதொழிவதே!'' என்று வெறுக்கிறார். b''எதிர்சூழல்புக்கெனைத்தோர் பிறப்பும்'' என்னும்படியை எண்ணுகிறிலர். அவன் கொடுத்த ஶரீரங்கொண்டு ருசி பிறந்த பின்பு இவனைத்(இறை)தாழ்த்ததும் குற்றமாய்த் தோன்றாநின்றது. தான் பரிக்₃ரஹித்த ஶரீரந்தோறும் அவஸர ப்ரதீக்ஷனாய்த் தம்பக்கல் முகம்பெறாதே திரிந்தது தோற்றுகிறதில்லை. இத்தலையில் அபேக்ஷை பிறந்தால் அவனுக்கு வாராதேயிருக்கை முறையன்று போலேகாணும். c ப்ரஜை எல்லாந் தீம்புஞ்செய்ததேயாகி

---

50. அவ:— 'உபமானங்களான மேகம் முதலானவற்றைக் கண்டு உபமேயமான எம்பெருமானே என்று நினைக்கும் எமக்கு இவர் அருள் புரியாதிருக்கிறாரே' என்று வெறுக்கிறார் இப்பாட்டில். ''எதிர்சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பும்'' [திருவாய் 2-7-6] என்கிறபடியே இவர் எடுத்த பிறப்பெல்லாம் அவன் எதிர் கொண்டுவந்து இவரைப்பெறச்செய்த முயற்சிகளை எண்ணுகின்றாரல்லர்: அவன்கொடுத்த ஶரீரங்கொண்டு அந்தமுயற்சிகளாலே ருசிபிறந்தபின்பு, எம்பெருமான் சிறிது தாமதித்தாலும் குற்றமாய்த் தோன்றுகிறது இவருக்கு. தான் எடுத்த ஒவ்வொரு பிறவியிலும் 'இவர் நம்மிடம் ஈடுபடுவாரோ!' என்று ஆசைப்பட்டுத் தொடர்ந்து அந்த ஆசை நிறைவேறாமல் எம்பெருமான் திரிந்தது இவருக்குத் தோற்றுகிறதில்லை. சேதனனுக்கு எம்பெருமானிடம் ஈடுபாடு பிறந்துவிட்டால், பரமன் வந்து அருள்புரியாதிருப்பது முறையன்று' என்று நினைப்பதே தக்கது என்னும் ஶாஸ்த்ரார்த்தம் இங்கு விளக்கப்

---

அரு:— ஐம்பதாம் பாட்டு. a (எம்மை) எங்களை. b தம்மைப்பெறுகைக்கு யத்நம் பண்ணினவனை வெறுப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (எதிர்சூழல்) இத்யாதி₃. c தம்முடைய குற்றங்கிடக்க அவன் அல்பந்தாழ்த்தத்தைக்

லும் பசித்தபோது சோறிட்டிலனாகில் தாய்க்குக் குற்ற மாகக் கடவதிறே.

வ்யா: — (பிரிந்தித்யாதி) வேறொன்றை அநுஸந்தியாதே தம்மையே பற்றித்திரிகிற. (சிந்தனையார்தம்மை) ''தம்மையொழிய வேறொருத்தரில்லை'' என்று புரிந்து பார்த்து ''ஐயோ'' என்றிரங்குகிறிலர். (மாவாய் பிளந் தாரித்யாதி) ஆஶ்ரிதர்க்காக விரோதிநிரஸநம் பண்ணிப் போந்தவருடைய மநஸ்ஸு இப்போது திண்ணிதானபடி யென்? மாவாய் பிளந்தாருடைய மனம் அந்தோ! வலிதே கொல். 50

---

படுகிறது. குழந்தை எவ்வளவு தவறு செய்தாலும் அதற்குப் பசித்தபோது சோறிடாவிடில் தாய்க்குக் குற்றமாகத்தானே ஆகும்.

வ்யா:— (பிரிந்து ஒன்று நோக்காது தம்முடைய பின்னே திரிந்து உழலும்) வேறொன்றை நினையாமல் தம்மையே பற்றித் திரிந்து தடுமாறுகின்ற (சிந்தனையார் தம்மைப்புரிந்து ஒரு கால் ஆ ஆ என இரங்கார்) ''இந்த நெஞ்சுக்கு நம்மையொழிய வேறொருவரில்லை'' என்று அன்புடன் பார்த்து ஒருமுறையாவது 'ஐயோ' என்று கருணை காட்டுகிறாரல்லர். (அந்தோவலிதே கொல் மாவாய் பிளந்தார் மனம்) அடியவர்களுக்காகக் கேசி என்னும் அசுரனைக் கொன்று அவர்கள் துயர்தீர்த்த எம்பெருமானுடைய மனம், இப்போது கல்போலே இறுகி விட்டதே! அன்று அடியவர்களுக்காகக்குதிரைவாயைப் பிளந்தவனுடைய மனம் இன்று கல்நெஞ்சமாகி விட்டதே! 50

---

குற்றமாகக் கொள்ளலாமோ? என்ன அருளிச்செய்கிறார் (ப்ரஜை எல்லா) இத்யாதி. 50

51. மனமாளு மோரைவர் வன்குறும்பர் தம்மைச்
சினமாள்வித் தோரிடத்தே சேர்த்துப்— புனமேய
தண்டுழா யானடியே தாங்காணு மஃதன்றே
வண்துழாம் சீரார்க்கு மாண்பு.

பதவுரை:— மனம் ஆளும் — மனஸ்ஸை வசமாக்கிக் கொள்ளும், வன் குறும்பர்— வலிமையுடையராய், குறும்பு செய்பவராய், ஓர் ஐவர் தம்மை— ஒப்பற்றவரான பஞ்சேந் திரியங்களையும், சினம் ஆள்வித்து— (அவற்றிலுள்ள) கோபத் தைப் போக்கடித்து, ஓர் இடத்தே சேர்த்து— ஒப்பற்ற பகவத்விஷயத்திலே ஈடுபடுத்தி புனம் மேய தண் துழாயான்— தன்னிலத்தில் சேர்ந்திருந்தாற்போலே மலர்ந்து விளங் கும் குளிர்ந்த திருத்துழாயையுடையவனுடைய, அடியே தாம் காணும் — திருவடிகளையே ஸேவிக்கையாகிற, அஃது அன்றே — அதல்லவா, வண்துழாம் சீரார்க்கு— உதாரர் களாய், பரந்த குணங்களையுடையவர்களான ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு; மாண்பு —அழகு,

---

அவ:— ஐம்பத்தோராம் பாட்டில்; — (மனமாளும்) உபேக்ஷித்தின் பேரேஷி செய்தபடி கண்டிருக்குமத்தனையல் லது வெறுத்துத் தப்பச்செய்தோமென்கிறார்.

---

51. அவ:— எம்பெருமான் அருளாதிருப்பது கண்டு வெறுத்தார் சென்ற பாட்டில், 'உடைமையாயிருப்பவன் உடையவன் செய்வதை ஏற்றுக்கொண்டு பொறுத்துக்கொண் டிருக்க வேண்டுமேயொழிய வெறுத்து வார்த்தை சொன்னது தவறு" என்கிறார் இப்பாட்டில்.

---

அரு:- ஐம்பத்தோராம்பாட்டு. உ, f 'வண்டுழாஞ்சீரார்'' என்கையாலே சேஷிசெய்தபடி கண்டிருக்கையொழிய வெறுக்கக்கூடாதென்கிறது.

வ்யா:— (மனமாளும்) பள்ளிகள்கலஹம்போலே; ஈச்வரனுக்கு ஆத்மா சேஷமாய், ஆத்மாவுக்கு மனஸ்ஸு சேஷமாய், மனஸ்ஸுபோனவழியே போகக்கடவவான இந்த்ரியங்களிருக்கும் முறையன்றிக்கே, மநஸ்ஸை இந்த்ரியங்கள் ஆளும்படியிருக்கை. (வன் குறும்பர்) மநஸ்ஸைத் தாங்கள் போனவழியே கொடுபோகவல்லராயிருக்கை. b 'இன்னதனைத்ரவ்யத்துக்கு b₁ அரசுசெய்வாரைக் கிடைக்கும்'' என்னும் வன்னியரைப்போலே. (ஒரைவர் வன் குறும்பர் c தம்மைச் d சினமாள்வித்து) கர்மபலமான க்ரோதத்தை முடித்து.(39) ''कामात् क्रोधोऽभिजायते'' (காமாத்

---

வ்யா:— (மனம்ஆளும்) குறும்பு செய்யும் கீழ்க்குலத்தினர் கலகம் செய்வது போலேயாயிற்று. எம்பெருமானுக்கு ஆத்மா வசப்பட்டதாய், ஆத்மாவுக்கு மனம் வசப்பட்டதாய், மனம் சென்றவழியே செல்லவேண்டியவை இந்திரியங்கள். இந்தமுறைதட்பி மனத்தை இந்திரியங்கள் ஆளும்படியான நிலை விளைந்து விடுகிறது. (வன்குறும்பர்) வலிமைமிக்கவர்களாய்க் குறும்பு செய்பவர்கள் என்று ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்களைக்குறிக்கிறார். மனத்தைத் தாங்கள் சென்ற வழியில் இழுத்துச்செல்ல வல்லவராயிருக்கையாலே 'வலிமை மிக்கவர்' என்கிறார். (வன்குறும்பர் தம்மை) அரசாங்க அதிகாரிகளை லஞ்சம் கொடுத்து விலைக்கு வாங்கித் தங்களுக்கு ஆட்படுத்திக்கொள்ளும் துஷ்டர்களைப் போன்றவர்கள் இந்த வன் குறும்பர். ஓரைவர் வன்குறும்பர் தம்மைச் சினமாள்வித்து) ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்களாகிற தீயவர்களிடம் முன் வினைகளின் காரணமாக எழும் கோபத்தைப் போக்கி;

8. த்யாயதோ விஷயாந் பும்ஸஸ் ஸங்கஸ் தேஷூபஜாயதே |
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே || [கீதை 2-62]

---

b. c ''தம்மை'' என்றத்தை அருளிச்செய்கிறார் ( இன்னதனைத்ரவ்ய) இத்யாதி. b₁ (அரசு செய்வார்) கைங்கர்யத்துக்குச் சேவிப்பார். d 'சினமாள்வித்து'' சினத்தை

க்ரோதோ₄ऽபி₄ஜாயதே) ப₄க₃வத்₃வ்யதிரிக்தவிஷயங்களெல்லாம் இந்த்₃ரியங்களுக்கு இரை போராதிறே எல்லா இந்த்₃ரியங்களும் அநுப₄விக்கப்புக்கால் அநுப₄ாவ்யாம்சம் பெருத்திருப்பது ப₄க₃வத்₃விஷயமிறே ‡ "இன்னங்கெடுபபாயோ" என்றும்,"பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ" என்றும், "சிற்றின்பம்" என்றுமிறே இதரவிஷயங்கள். எல்லா இந்த்₃ரியங்களும் பு₄ஜித்தாலும் போ₄க்₃யதை அளவிறந்திருக்குமென்னுமிடத்தைச் சொல்லுகிறது —

---

[விஷயங்களை இடைவிடாமல் எண்ணும் மனிதனுக்கு அவற்றில் அதி₄கமான சேர்க்கை (ஸங்க₃ம்) உண்டாகிறது. அந்த ஸங்க₃த்திஞல் காமம் உண்டாகிறது. காமத்திஞல் கோபம் உண்டாகிறது.] என்று 'ப்ராக்ருத விஷயங்களில் ஈடுபாட்டாலே இவன் செய்யும் புண்யபாப கர்மங்களாலே கோபம் உண்டாகிறது' என்று சொல்லப்பட்டதன்றோ. ப₄க₃வத்₃விஷயம் தவிர்ந்த மற்ற விஷயங்களை எவ்வளவு அநுப₄வித்தாலும் இந்த்ரியங்களுக்கு அதஞல் திருப்தி உண்டாகாமையாலே காமக்ரோத₄ங்களே விளைகின்றன. எல்லா இந்த்ரியங்களும் அனுப₄விக்கப்புகுந்தாலும் அனுப₄விக்க வேண்டிய அம்சம் மிக அதி₄கமாயிருக்கையாலே ப₄க₃வத்₃விஷயாநுப₄வத்தாலே கோபம் விளையாது. ப₄க₃வத்₃விஷயாநுப₄வத்தாலே மற்ற விஷயங்களின் அநுப₄வம் குறையுமாகையாலே அதன் பயனுன கோபமும் குறையும். "இன்னம் கெடுப்பாயோ" [திருவாய் 6-9-8] என்றும், "பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ" [திருவாய் 6—9—9] என்றும், "சிற்றின்பம்" [திருவாய் 6—9—9] என்றும் நம்மாழ்வாரும் இதரவிஷயங்கள் சிற்றின்பத்தையே

---

முடித்து; அத்தால் வந்த க்ரோத₄த்தைப் போக்கி என்றபடி. ‡ இதர விஷயங்கள் அநர்த்த₂கரமுமாய் அல்பமாயிருக்குமே வென்ன அருளிச்செய்கிருர் — ( இன்னங்கெடுப்பாயோ

(புனமேய தண்டுழாயானடி) என்று. f (வண்துழாம் சீரார்க்கு f₂ மாண்பு - மனமாளுமோரைவர் வன்குறும்பர் தம்மைச் சினமாள்வித்தோரிடத்தே சேர்த்துப் புனமேய தண்துழாயா னடியே தான்காணுமஃதன்றே) ஆத்மகுணோபேதர்க்கு— வண்மை துழாவின சீரையுடையவர்களுக்கு அழகாவது - இந்த்ரியங்களை ஜயித்து அவ்விந்த்ரியங்களெல்லாவற்றை யும் பகவத்விஷயத்திலே சேர்த்து செவ்வித்திருத்துழாய்

---

விளைப்பவை என்பதையும், மேனமேலும் காமக்ரோதங்களை வளர்த்து ஆத்மநாசத்தை விளைப்பவை என்றும் அருளிச் செய்தாரன்றோ. இப்படி எவ்வளவு அநுபவித்தாலும் இந்தி ரியங்களுக்குத் திருப்தி அளிக்காத மற்ற விஷயங்கள் போலல் லாமல், எல்லா இந்திரியங்களும் அநுபவித்தாலும் பகவத் விஷயம் இனிமையில் எல்லையற்றிருக்கும் என்று காட்டு கிறார்—(புனமேய தண்டுழாயான் அடியே) என்று. 'தன் நிலத்தில் இருந்தாற்போலே மலர்ந்து குளிர்ந்து விளங்கும் திருத்துழாயை உடையவனுடைய திருவடிகளையே' என்று பொருள். (வண் துழாம் சீரார்க்கு மாண்பு—மனம் ஆளும் ஓர் ஐவர் வன்குறும்பர் தம்மைச் சினம் ஆள்வித்து ஓர் இடத்தே சேர்த்துப் புனமேய தண் துழாயானடியே தான் காணும் அஃதன்றே) வண்மை மிக்க விசாலமான குணங் களையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அழகாவது—மனத்தை இழுத்துச்செல்லும் இந்த்ரியங்களாகிற துஷ்டர்களை வென்று அவை இதர விஷயங்களில் ஈடுபடுவதால் உண்டாகும் கோபத்தைப்போக்கி, அந்த இந்த்ரியங்கள் அனைத்தையும் எம்பெருமானிடத்தில் சேர்த்து அப்போதலர்ந்த திருத்

---

இத்யாதி. f₂ "மாண்பு" அழகு - முறையென்றும், ப்ராப்த மென்றபடி.

52. மாண்பாவித் தஞ்ஞான்று மண்ணிரந்தான் மாயவள்நஞ்
சூண்பாவித் துண்டான தோருருவம் — காண்பான்நங்
கண்ணவா மற்றொன்று காணுறு சீர்பரவா
துண்ணவாய் தானுறுமோ வொன்று.

பதவுரை:— அஞ்ஞான்று - அன்றொருஸமயம், மாண் பாவித்து—ப்ரஹ்மசாரி வேஷத்தை (நன்றாகப்) பூண்டு, மண் இரந்தான் — (மூவடி) மண்ணை யாசித்தவனும், மாய வள் நஞ்சு — வஞ்சகியான பூதனையின் (முலையிலுள்ள) விஷத்தை, ஊண் பாவித்து — (ரஸித்து) உண்பதாகப் பாவித்து, உண்டானது — (விஷத்தையும் அவள் உயிரையும்) உண்டவனுமான பெருமானுடைய, ஓர் உருவம்—ஒப்பற்ற திருமேனியை, காண்பான் — ஸேவிக்கையே, நம் கண் அவா — எங்களுடைய கண்ணுக்கு ஆசை: மற்று ஒன்று— வேறொன்றையும், காண் உறு — (அது) காண ஆசைப் படாது: வாய் தான் —வாய் தான், சீர் பரவாது — (அவனுடைய) கல்யாணகுணங்களைப் புகழாமல், ஒன்று உண்ண உறுமோ —ஒரு பொருளைப் புசிக்க ஆசைப்படுமோ?

---

மாலையையுடையனுயிருந்துள்ள ஸர்வேச்வரன் திருவடிகளைக் காண்கையன்றோ முறை. ''அந்தோ வலிதே கொல்'' என்று வெறுக்கக்கடவதோ? 51

---

துழாய் மாலையை அணிந்த எம்பெருமானுடைய திருவடிகளைக் காண்பதேயன்றோ: இதுவே முறையானது. "அந்தோ வலிதே கொல்" என்று சென்றபாட்டிற்போலே வெறுப்படைவது முறையல்ல என்று கருத்து. 51

அவ: ஐம்பத்திரண்டாம் பாட்டில்: (மாண்பாவித்து) பொதுவிலே சொன்னேன்; அதுதான் எனக்கு உண்டாயிற்று என்கிறார்.

வ்யா: (மாணித்யாதி) மாண்பாவிக்கையாவது - மஹாபலி "நான் தருவேனுனால் இன்னும் அகல இரக்கமாட்டாயோ?" என்ன "இரந்ததுக்கு மேலே வேண்டா" என்றிருக்கிற - பாலயம் பாவித்து. அத்தைப் பொய்யென்கிறதன்று; அத்தையும் மெய்யாக்குகை. (மாயவளித்யாதி) தாய் வேஷத்தைக்கொண்டு "இவனுக்கு முலைகொடாவிடில் தரியேன்" என்று அவள் முலைகொடுத்தாற்போலே

---

52. அவ:— "சென்ற பாட்டில் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் இருக்கவேண்டியதாகப் பொதுவிலே சொன்ன மாண்பு எனக்கு உண்டாயிற்று" என்கிறார்.

வ்யா:—(மாண்பாவித்து) பிரம்மசாரிவேஷத்தை நன்றாகப் பூண்டு. அதாவது—தன்னிடம் தன் காலாலே மூவடி மண்ணை வாமனன் வேண்டியவுடன் "தருபவன் நானுயிருக்கும்போது இப்படிக் குறைவாகவா யாசிப்பது? இன்னும் அதிகமாகக் கேள் தருகிறேன்" என்று மாவலி கூற, "எனக்குத் தேவையானது இதுவே. இதற்குமேல் வேண்டா" என்று சொல்லும்படி பிரம்மசாரி வேஷத்தை நன்றாகக்கொண்டிருந்ததைச் சொல்லுகிறது. "பாவித்து" என்பதற்கு "பொய்யாக வேஷம் கொண்டு" என்று பொருள் உண்டாயினும், இங்கு அது பொருளாகாது. பிரம்மசாரி வேஷத்தை மெய்யாகவே பூண்டான் என்றே இங்கு பொருள்படும். (மாயவள் நஞ்சு ஊண் பாவித்து உண்டான்) தாய் வேஷத்தை ஏறிட்டுக்கொண்டு 'இவனுக்கு முலைகொடுக்காவிடில் உயிர் தரியேன், என்று வஞ்சனையுடைய பூதனை முலை கொடுத்ததுபோலே இவனும் ' இவ

இவனும் "உண்ணவிடில் தரியேன்" என்று தாரகமாக உண்டான்; "பேய்முலை நஞ்சு ஊணாக உண்டான்" என்னும் படியே. (காண்பான் நங்கண்ணவா) கண்ணுக்கு அவா ஊண் பாவித்துண்டானதோருருவங்காண்பான். (மற்றொன்று காணாறு) ௧ "அதொன்றும் காண்கை செய்" என்று காண்கை, நாணி வேறொன்று காணாமையே முடியும் நய தேந்த்ரியத்துக்கேயன்று; இந்த அர்த்தம் வாகிந்த்ரியத்துக்குமொக்கும் — (சீர்பரவாதுண்ண வாய்தானுறுமோ வொன்று) அவனுடைய கல்யாணகுணங்களைச் சொல்லாதே வாக்கு வேறொன்றை உண்ண உறாது. 52

---

ளிடப் முலைப்பால் குடிக்காவிடில் உயிர் தரியேன்" என்று நினைத்தவன்போலே அவளுடைய முலைப்பாலையே தாரகமாகக்கொண்டு உண்டான். "பேய்முலை நஞ்சு ஊணாக உண்டான்" [முதல் திருவ 11] என்று பொய்கையாழ்வார் அருளிய அர்த்தத்தையே இவர் "ஊண் பாவித்து உண்டான்" என்று அருளிச்செய்கிறார். (உண்டானது ஓர் உருவம் காண்பான் நம் கண்ணவா) நம்முடைய கண்ணுக்கு ஆசை—பேய் முலைப்பாலை தாரகமாக உண்டவனுடைய ஒப்பற்ற திருமேனியைக் காண்பதே. (மற்றொன்று காணாறு) அப்படி அவனுடைய திருமேனியைக் காணும்போது, "அத்திருமேனி ஒன்றையே காணவேண்டுமேயொழிய வேறொன்றையும் காணலாகாது" என்னும் உறுதியுடன் காணும். அப்படி வேறொரு பொருளைக் காணத் தொடங்கினால் அதனால் லஜ்ஜைகொண்டு வேறெதையும் காணமுடியாதபடி அழிந்துவிடும். கண்ணாகிய இந்திரியத்துக்கு மாத்திரம் இந்தத்தன்மையன்று; வாக்காகிய இந்த்ரியத்துக்கும் பொருந்தும் என்கிறார் மேலே — (சீர்பரவாது உண்ண வாய்தான் உறுமோ ஒன்று) வாயானது அவனுடைய கல்யாணகுணங்களைச் சொல்லாமல் வேறொன்றை அநுபவிக்க முற்படுமோ? முற்படாது, அநுபவிக்கத் தொடங்கினால் அழிந்துவிடும் என்று கருத்து. 52

---

அரு:— ஐம்பத்திரண்டாம் பாட்டு. ௧ (அதொன்றும்) என்ற வாக்யம் பிழை. 52

53. ஒன்றுண்டு செங்கண்மால்யானுரைப்ப(து) உன்னடியார்க்
கென்செய்வ னென்றே யிருத்திநீ—நின்புகழில்
வைகும் தம் சிந்தையிலும மற்றினிதோ நீயவர்க்கு
வைகுந்த மென்றருளும் வான்.

பதவுரை: – செம் கண் மால் சிவந்த திருக்கண்களை யுடைய ஆஶ்ரிதபக்ஷபாதியே!, யான் உரைப்பது — நான் (உனக்குச்) சொல்லவேண்டியது, ஒன்று உண்டு — ஒரு வார்த்தை இருக்கிறது, நீ— நீ, உன் அடியார்க்கு —உன்னிடம் அன்புள்ளவர்களுக்கு, என் செய்வன் என்றே இருத்தி—என்ன உபகாரம் செய்வோம் என்று நினைத்துக் கொண்டே இருக்கிறாய்; மற்று அவர்க்கு — அவர்களுக்கோவெனில், நின் புகழில் வைகும்--உன் கல்யாணகுணங்களிலீடுபடும், தம் சிந்தையிலும் — தம் மனத்தைக்காட்டிலும், வைகுந்தம் என்று நீ அருளும் வான் — வைகுந்தம் என்று (மிகப்பெரிதாகச்) சொல்லி நீ கொடுக்கும் பரமபதம், இனிதோ—இனிதாகுமோ ?

---

அவ:— ஐம்பத்து மூன்றும்பாட்டில்; (ஒன்றுண்டு) "என்னுடைய இந்த்ரியங்களும் உன்னை அநுபவிக்கும்படியாயிற்று" என்ன; "அவ்வளவேயோ? இன்னும் சிலவுண்டுகாணும் உமக்குச் செய்யக் கடவது" என்ன; 'எனக்குச் செய்யாததுண்டோ ?" என்கிறார்.

---

53 அவ:— சென்ற பாட்டில் "என்னுடைய எல்லா இந்த்ரியங்களும் உன்னை அநுபவிக்கும்படியாயிற்று." என்று கூறினார். அதற்குமேல் எம்பெருமான் "இந்த அளவுக்கு உமக்கு இங்கு ஈடுபாட்டை விளைத்தது மாத்திரமல்ல. வைகுந்தத்துக்கு அழைத்துச்சென்று பேரின்பத்தை அநுபவிக்கச் செய்யவும் நினைத்திருக்கிறேன்" என்று திருவுள்ளமாக. "இங்கு உன்னை நினைத்திருக்கும் இன்பத்தைக் காட்டிலும் அதுபெரிதல்ல- ஆகையால் இவ்வுலகிலேயே எனக்கு அனைத்தையும் செய்து விட்டாய்" என்கிறார்.

வ்யா:— (ஒன்றித்யாதி₂) ஆரேனுமாகத் தெளிந்தார் கலங்கினார்க்குச் சொல்லக்கடவதிறே. (உன்னடியார்க்கித்யாதி₂) நிரபேக்ஷர்க்கு "என் செய்வன்" என்றிருக்கிற த₄ர்மந்தான் எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும். (40) "ऋणं प्रवृद्धमिव मे" (ருணம் ப்ரவ்ருத்₄த₄மிவ மே) பாண்ட₃வர்கள் முடிசூடினவன்றும் த்₃ரௌபதீ₃ குழல் முடித்த பின்பும்

---

வ்யா:— (ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது) அடியார்களுக்கு என்ன செய்தாலும் திருப்தியடையாத ஆஶ்ரித பக்ஷபாதத்தாலே சிவந்த திருக்கண்களையுடையவனே! உனக்கு நான் சொல்லவேண்டியது ஒரு விஷயம் உள்ளது "எல்லாம் அறிந்தவனான எனக்கு நீர் சொல்லவேண்டுமோ?" எனில்: "நீ ஆஶ்ரிதபக்ஷபாதத்தாலே கலங்கியிருக்கையாலே இதைஅறியாய்: இதை நான்சொல்லியே நீ தெரிந்துகொள்ளவேண்டும்" என்கிறார். அது என்னவென்பதைப் பாட்டின் எஞ்சிய பகுதியாலே விளக்குகிறார். (செங்கண்மால் உன்னடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ) அடியார்களிடம் வாத்ஸல்யத்தாலே கலங்கிச் சிவந்திருக்கும் கண்களையுடையவனே! உன்னிடம் எதையும் வேண்டாத அவர்களுக்கு, கலக்கத்தாலே நீ எப்போதுமே, "இவர்களுக்கு என்ன செய்வோம்? என்ன செய்வோம்" என்றே நினைத்திருக்கிறாய்.

40. கோ₃விந்தே₃தி யதா₃க்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம் ।
ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந் நாபஸர்பதே ॥
[பார-உத்-47-22]

[த்₃ரௌபதீ₃யானவள் வெகு தூரத்திலிருந்த என்னைக் குறித்து 'கோவிந்தா' என்று கூக்குரலிட்டது. (வட்டியினால்) வளர்ந்த கடனைப் போல் என் ஹ்ருத₃யத்திலிருந்து அகலுகிறதில்லை.] என்கிறபடியே பாண்டவர்களுக்கு அரசு கிடைத்த பின்பும் திரௌபதி குழலே முடித்தபின்பும் தன் பூர்த்தாக்

---

அரு:— ஐம்பத்து மூன்றும் பாட்டு. க ஶேஷியைக் குறித்து "சொல்லுகிறேன்" என்னலாமோ வென்ன

பூர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க அவர்களை "ரக்ஷகர்" என்று நினையாதே தன்பேர் சொன்னவனுக்குத் திருவுள்ளத்திலே b தனிசு பட்டிருக்குமாபோலே, அந்த ஆநுகூல்யமுடையார்க்கு என்றும் "என்செய்வேன்" என்றிருத்தி. (நின்புகழித்யாதி) உன் புகழிலே தங்குகிற சிந்தையிற் காட்டிலினியதோ நீ போரப்பொலியச் சொல்லிக்கொடுக்கிற பரமபதம்? ஸித்தத்துக்கு எடைநிற்குமோ ஸாத்யம்? c இதுக்கது உக்திஸாரமே காரணம். 53.

---

கள் அருகிலிருக்கையிலே அவர்களை ரக்ஷகர்களாக நினையாமல் தன்னுடைய கோவிந்த நாமத்தைச் சொன்னவனுக்குத் திருவுள்ளத்திலே கடன்பட்டிருந்தானன்றோ எம்பெருமான், அவனிடத்தில் அத்தகைய ஈடுபாடு உள்ளவர்களுக்கு "இவர்களுக்குமேலும் என்ன செய்வது? என்ன செய்வது?" என்றேயிருக்கிறாய் நீ. இது எம்பெருமானுடைய கலக்கத்தாலே ஏற்படுகிறது என்று இனி நிரூபிக்கிறார். (நின் புகழில்வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்தம் என்றருளும்வான்) "உன்னுடைய கல்யாண குணங்களிலே ஈடுபடுகிற தம்மனத்தைக் காட்டிலும் இனியதோ நீ மிகப்பெரிதாகச்சொல்லிக் கொடுக்கிற பரமபதம்? கையில் கிடைத்திருக்கும் இந்த அநுபவத்திற்குச்சமமாகுமோ இனிக்கிடைக்கவிருக்கும் அந்த அநுபவம்? என்று கருத்து. "இதுக்கது உக்திஸாரமே காரணம்" என்னும் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யான ஸ்ரீஸூக்திக்குப் பொருள் தெளிவாக விளங்கவில்லை. சாஸ்த்ரவசனங்களைக் கொண்டு பிற்காலத்தில் கிடைக்கப்போகிறது என்று உறுதி கொண்டிருக்கவேண்டிய பரமபதாநுபவத்தைக் காட்டிலும் இப்போது கையில் கிடைத்திருக்கும் இவ்வநுபவமே சிறந்தது என்று பொருளாகலாம். 53

---

அருளிச்செய்கிறார் (ஆரேனுமாக) இத்யாதி. b (தனிசு)- ருணம். c பரமபதமும் ஸித்திக்குமென்றேயென்ன அருளிச் செய்கிறார் (இதுக்கது உக்திஸாரம்) இத்யாதி. 53

54. வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ
காளே வொருங்கிற்றும் கண்டிலமால் - ஆனீன்ற
கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம்
வன்துயரை யாவா மருங்கு

பதவுரை — ஆன் ஈன்ற கன்று—பசு அன்று பெற்ற கன்றுபோல் வந்த வத்ஸாஸுரனை, தாம் உயர எறிந்து — தானொருவனாகவே உயர வீசி எறிந்து, காய் உதிர்த்தார் — விளவின் காயாயிருந்த கபித்தாஸுரனை விழச்செய்தவனுடைய, தாள் பணிந்தோம் — திருவடிகளை வணங்கினோம், வன் துயரை — ப்ரபலம் பொருந்திய பாபத்தை, மருங்கு கண்டிலம் — நம் அருகிலும் கண்டிலோம்; ஆல்—என்ன ஆச்சர்யம்!, வான் ஒருங்கிற்றே— ஆகாசத்தில் ஒடுங்கியதோ? மறி கடல் ஒருங்கிற்றே — அலையெறிகிற கடலில் கரைந்ததோ? மாருதம் ஒருங்கிற்றே — காற்றில் கலந்ததோ? தீயகம் ஒருங்கிற்றே — நெருப்பில் சேர்ந்ததோ? கான் ஒருங்கிற்றே - காட்டில் ஒளிந்ததோ? ஆஆ—அடடா!

---

அள:— ஐம்பத்துநாலாம் பாட்டில்; (வானோ) "உம்முடைய ப்ரதிபந்தகம் செய்ததென்?" என்ன, "நானுமறிகிறிலேன்" என்கிறார்.

வ்யா:— (வானித்யாதி) ஆகாசகமநம் பண்ணிற்றே? கடலிலே புக்கு முடிந்ததோ? காற்றோடே கலந்து போயி

---

54. அவ:— "இவ்வநுபவமே சிறந்தது என்கிறீரே? அதற்குத் தடையாகவுள்ள பாபம் முதலானவை என்ன ஆயிற்று?" என்று எம்பெருமான் திருவுள்ளமாக, "அவை சென்றவிடத்தை நான் அறிகிலேன்" என்கிறார்.

வ்யா:— (வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ கானே ஒருங்கிற்று) என்னுடைய பாபம் ஆகாயத்தில் சென்று கலந்ததோ? கடலிலே சென்று கரைந்ததோ? காற்

ற்ரே? அக்₃னிப்ரவேசம் பண்ணிற்ரே? ஊமஹாப்ரஸ்த₂ானம் பண்ணிற்ரே? (ஒருங்கிற்று) இவற்றிலெங்கே சேர்ந்தது? (மருங்கும்கண்டிலமால்) ஸமீபத்திலே காணுதொழிகையால். b ''ஒருங்கிற்றுங்கண்டிலமால்'' என்றதிலே மருங்கென்றது பொருளின்றிக்கே நிற்கும். (ஆனித்யாதி₃) ப்ரப₃ல

---

ரோடு கலந்துவிலகிற்ரே? நெருப்பிலே புகுந்து அழிந்ததோ, வடக்கிருத்தல் என்னும் மஹாப்ரஸ்த₂ானத்தைமேற்கொண்டு மரணத்தை எதிர்நோக்கிக் காட்டுக்குப் புறப்பட்டதோ? இவ்விடங்களில் எங்கே போய்ச் சேர்ந்தது? (வன்துயரை மருங்கும் கண்டிலமால்) நமக்கு அருகிலும் அந்தப்பாபத்தைக் காணுமையால் இப்படியே நினைக்கவேண்டியுள்ளது. "ஒருங்கிற்றும் கண்டிலமால்" என்றவிடத்திலுள்ள 'ச'காரத்தை (உம்மையை) 'மருங்கு' என்பதுடன் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். இல்லாவிடில் 'மருங்கு' என்றபதம் பொருளற்றதாய்விடும். இப்படிப் பாபம் ஓடிப் போனதற்குக் காரணத்தை விளக்குகிருர் மேலே (ஆன் ஈன்ற கன்று உயரத் தாம் எறிந்து காயுதிர்த்தார் தான் பணிந்தோம்) வலிமை மிக்க தடைகளைப் போக்குகிறவன் என்பதைக்காட்டிக் கொண்டு அன்று பிறந்த கன்று போலே வந்த வத்ஸாஸுரனை, தான் ஒருவனுகவே உயர வீசியெறிந்து விளவின் காயாயிருந்த கபித்த₂ாஸுரனை விழச் செய்து இருவரையும் ஒன்ருக அழித்த எம்பெருமானுடைய திருவடிகளை வணங்

---

அரு: — ஐம்பத்துநாலாம் பாட்டு. ஊ (மஹாப்ரஸ்த₂ாநம்) மஹாவித்₄யம். b கண்டிலமென்னவமையாதோ ''மருங்கு'' என்று விஶேஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிருர் (ஒருங்கிற்றும்) இத்யாதி₃. என்னருகிற் காணேமென்றபடி. 54

55. மருங்கோத மோதும் மணிநா கணையார்
மருங்கே வரவரிய ரேலும் — ஒருங்கே
எமக்கவரைக் காணலா மெப்பொழுது முள்ளால்
மனக்கவலை தீர்ப்பார் வரவு.

பதவுரை: — வரவு — (தம்) வரவாலே, மனம் கவலை தீர்ப்பார் — மனஸ்ஸிலுள்ள துக்கத்தைப் போக்கடிப்பவராய், மருங்கு — அருகில், ஓதம் மோதும் — கடல் மோதும்படியாக, மணி நாகணையார் — மணிகளையுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு சயனித்திருப்பவரான எம்பெருமான், மருங்கே வர அரியரேலும் — (நாம்) அவனருகில் செல்லவொண்ணாதவராயினும், எமக்கு — நமக்கு, உள்ளால் — மனஸ்ஸினால், எப்பொழுதும் — எக்காலத்திலும், ஒருங்கே — ஒருபடியாகவே, அவரை காணலாம் — அவரை ஸாக்ஷாத்கரிக்கலாம்.

---

ப்ரதிபந்தகங்களைப் போக்குமவர் திருவடிகளிலே பணிந்தோம்; நம்மோடே நெடுநாள் பழகிப்போந்த வலிய துயரை அருகுங்கண்டிலோம். "இவரெங்கேபுக்குமுடிந்தார்? ஐயோ! ஐயோ!!" என்கிறார். 54

---

கிறோம். இதன் பலனை பாபங்கள் காணாமல் போனது என்று கருத்து. (வன் துயரை மருங்கும் கண்டிலமால் ஆ ஆ) "வல்வினையாரை எப்புறமும் காணவில்லையே! இவர் எங்கே புக்கு அழிந்தார்? ஐயோ! ஐயோ!!" என்கிறார் துயருக்குக் காரணமான வல்வினையைத் துயர் என்றே வழங்குகிறார். 54.

வ்யா: — ஐம்பத்தைந்தாம் பாட்டில்; (மருங்கித்யாதி) உவரவால் என் மனக்கவலை தீர்ப்பார் — அருகே கடலில் திரைத்திவலை துடைகுத்தத் திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிறவர் அருகே செல்ல அரியரேலும் நமக்கொருபடிப்பட ஹ்ருதயத்திலே எப்போதுமுளர். 55

---

அவ: — பாபங்கள் விலகிவிட்டதால் நான் எப்போதும் எம் பெருமானைக் காண்கிறேன் என்கிறார்.

வ்யா: — (வரவு மனக்கவலை தீர்ப்பார்) தம் வரவால் என் மனத்திலுள்ள துன்பத்தைப் போக்கடிப்பவர். இதனால் எம் பெருமான் தானே மேல் விழுந்து இவரை ஆட்கொண்டமை தோற்றுகிறது. இவரைப் பெறுவதற்கு ஸாதநாநுஷ்டானம் செய்த விடத்தைச் சொல்லுகிறது — (மருங்கு ஓதம் மோதும் மணிநாகணையார்) அருகிலே கடலின் அலைத்துளிகள் திருவடிகளைப் பிடித்து விடும்படியாக, மணிகளை உடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய க்ஷீராப்திநாதன் ஆழ்வாரை அடைவதற்காக யோகநித்திரை செய்தவன் என்று கருத்து. (மருங்கே வர அரியரேலும்) அவருக்கு அருகில் நாம் செல்வது இயலாதாயினும். (நமக்கு ஒருங்கே உள்ளால் அவரை எப்பொழுதும் காணலாம்) அவர் எம் நெஞ்சில் பேராமல் குடியிருக்கையாலே நமக்கு மனத்தினால் எக்காலத்திலும் ஏகரீதியாக அவரை ஸாக்ஷாத்கரிக்கலாம். "ப்ரஜாபதிஸ் த்வம் வேத₃ ப்ரஜாபதிம் த்வோ வேத₃ யம் ப்ரஜாபதிர் வேத₃ ஸ புண்யோ ப₄வதி" [யஜு. காண் 1 ப்ர 6] [பரமபுருஷன் ஒருவனை வரிக்கிறான்; பரம புருஷனை ஒருவன் வரிக்கிறான், எவனைப் பரமபுருஷன் வரிக்கிறானோ அவனே (நிஸ்ஸந்தே₃ஹமாகப்) பரமனை அடைகிறான்.] என்கிற வேத₃வாக்கியத்தில் சொல்லப்பட்ட பரமபுருஷனால் வரிக்கத்தக்க பெருமையுடையவர் ஆழ்வார் என்று இதிலிருந்து விளங்குகிறது. 55

---

அரு: — ஐம்பத்தைந்தாம் பாட்டு. உ [வரவு மனக்கவலை தீர்ப்பார், மருங்கோதம் மோதும் மணிநாகணையார் மருங்கே வரவரியரேலும்-எமக்கு-ஒருங்கே-உள்ளால் எப்பொழுதும் காணலாம்.] மநஸ்ஸிலே ஒருபடிப்பட எப்போதும் காணலாமென்றபடி. 55

56. வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால் எல்லே
ஒருவா றொருவன் புகாவாறு— உருமாறும்
ஆயவர்தாம் சேயவர்தா மன்றுலகம் தாயவர்தாம்
மாயவர்தாம் காட்டும் வழி.

பதவுரை:— ஒரு ஆறு — ஓர் உபாயத்திலும், ஒருவன்— ஒரு ஜீவனும், புகா ஆறு — நுழையாதபடி, உரு மாறும்— தம்முடைய ஸ்வரூபகு₃ணங்களை அழியமாறும், ஆயவர் தாம்—ஆய்க்குலத்தில் பிறந்த க்ருஷ்ணனாய், சேயவர் தாம்—(து₃ர்யோத₄நாதி₃களுக்கு) வெகு தூ₃ரத்திலுள்ள வராய், அன்று—ஒரு காலத்தில், உலகம் தாயவர் தாம் — உலகத்தையெல்லாம் தாவி அளந்தவராய், மாயவர் தாம்— ஆஶ்சர்ய பூ₄தரான எம்பெருமான், காட்டும் வழி — காட்டின உபாயம், வர ஆறு — வந்த விதம், ஒன்று இல்லை ஆல் — ஒன்றும் தோற்றுகிறதில்லை, வாழ்வு இனிது ஆல்— (நம்) வாழ்வோவெனில் சுவைமிக்கதாயிருக்கிறது; எல்லே— இது என்ன ஆஶ்சர்யம்!

---

அவ:— ஐம்பத்தாறும் பாட்டில்; (வரவாறு) "எல்லா ருக்கும் அருகும் செல்லவரியவன் உமக்கு எளியனானபடி யென்?" என்ன; "நானுமறியேன்" என்கிறார்.

வ்யா:— (வரவாறொன்றில்லையால்) அடியில்லையாகில் ப₂லம் சுருங்கியிருக்குமோ? என்னில், (வாழ்வினிதால்)

---

56. அவ:— 'அனைவருக்கும் அணுக அரியவன் உமக்கு எளியனானது எப்படி?' என்னும் கேள்வியெழ "அது எனக்கும் தெரியவில்லை" என்கிறார்.

வ்யா:— (வரவாறொன்றில்லையால்) எம்பெருமான் தானே வந்து என் மனத்தில் குடிகொண்டிருந்ததற்கு உபாயமாக என்னிடம் எதுவும் இல்லை. "உபாயாநுஷ்டானம் இல்லையானால் ப₂லம் சிறியதாயிருக்குமோ?" எனில் கூறுகிறார்— (வாழ்வு இனிதால்) ப₂லம் மிகவும் அதி₄கமாய் உள்ளது.

ப₄லமதி₄கமாயிருக்கும். (எல்லே a ஒருவாறுருவன் புகாவாறுருமாறும்) "நமக்கடியில்லை" என்று ஆராய வேண்டாதபடி ஒருவழியிலொருவனைப் புகாதபடி தன்னுடைய ஸ்வரூபஸ்வப₄ாவங்களை அழியமாறும். 'எல்லா உபாயங்களையும் விட்டென்னையே பற்று' என்கை. போ₄க்தாவினுடைய உபாயாநுஷ்ட₂ானங்களை அவர்க்காகத் தான் b அநுஷ்டி₂க்குமென்று கருத்து. 'எல்லாம் விட்டு என்னைப் பற்று' என்னுமிவர். (சேயவர்தாம்) அர்ஜுநனுக்குக் கையாளாயிருக்கச் செய்தே து₃ர்யோத₄நாதி₃களை அம்புக்கிரையாக்கி அவர்களுக்குத் தூரியாயிருக்குமவர். (அன்றுலகம் தாயவர்தாம்)

---

(எல்லே, இது என்ன ஆச்சரியம்! (ஒரு ஆறு ஒருவன் புகாவாறு உருமாறும்) 'நமக்குப் ப₂ல ஸாத₄நமான உபாயம் இல்லை' என்று ஒருவன் ஆராயவேண்டாதபடியும், ஒரு உபாயத்திலும் ஒரு ஜீவனும் நுழையவேண்டாதபடியும் தன்னுடைய ஸ்வரூபத்தையும், ரூபத்தையும், கு₃ணங்களையும் தாழ்த்திக்கொண்டு அவதரிக்கிறான் எம்பெருமான் என்று கருத்து. சரமஶ்லோகத்தில "எல்லா உபாயங்களையும் விட்டு என்னையே பற்று" என்று கூறினானன்றோ இவன். ப₂லனை அநுப₄விப்பது அடியார்களான பாண்டவர்களாயிருக்க, அவர்களுக்காகத் தூதுபோவது, தேரோட்டுவது, மார்பிலே அம்பேற்பது முதலான உபாயாநுஷ்ட₂ாநங்களைச் செய்தானன்றோ என்று கருத்து. (ஆயவர் தாம் சேயவர் தாம்) "எல்லா உபாயத்தையும் விட்டு என்னைப் பற்று" என்று கூறி அர்ஜுனனுக்குத் தேரோட்டியாய் இருந்த கண்ணன், துரியோதனன் முதலானவர்களை அந்த அர்ஜுநனுடைய அம்புக்கு இரையாக்கி அவர்களுக்கு வெகு தூரத்தில் இருந்தான் என்று கருத்து. (அன்று உலகம் தாயவர் தாம்)

---

அரு:— ஐம்பத்தாறும் பாட்டு. a "ஒருவன் ஒரு ஆறு புகாவாறு"-உபாயாந்தரங்களிலே புகாத ப்ரகாரம். "உருமாறும்"-தாமேஉபாயமென்று காட்டுகைக்குத் தம்மையழியமாறி அவதரிக்குமவர்தாம். b (அநுஷ்டி₂க்கை) இவர்

57. வழித்தங்கு வல்வினையை மாற்றுனோ நெஞ்சே
தழீஇக்கொண்டு போரவுணன் றன்னைச்— சுழித்தெங்கும்
தாழ்விடங்கள் பற்றிப் புலால்வெள்ளம் தானுகள
வாழ்வடங்க மார்விடந்த மால்.

பதவுரை:— நெஞ்சே—மனமே, போர் — யுத்தத்திலே, அவுணன் தன்னை—அஸுரனாகிய ஹிரண்யனை, தழீஇக் கொண்டு — கட்டிக்கொண்டு, தாழ்வு இடங்கள் எங்கும் பற்றி — தாழ்ந்திருக்கும் இடங்கள் முழுவதையும் வியாபித்து, புலால் வெள்ளம் தான் — ரத்தப்ரவாஹமானது, சுழித்து உகள — சுழித்துக்கொண்டு புரளும்படியாகவும், வாழ்வு அடங்க — அவனுடைய செல்வச்செருக்கு அடங்கும்படியாகவும், மார்வு இடந்த — மார்பைப் பிளந்த, மால் — ஸர்வேச்வரன், வழி தங்கு — வேறு வழிகளில் தங்கச் செய்வதாய், வல் வினையை — பலத்தை உடையதான அஜ்ஞானம் முதலியவற்றை, மாற்றுனோ — போக்கடிக்க மாட்டானோ?

---

நினைத்தபோது தாமே வந்து கிட்டுமவர். (மாயவர்தாம் காட்டும் வழி) இப்படி ஆச்சர்யபூதரானவர் காட்டுமுபாயம், வரவாறென்றில்லையால் வாழ்வினிதால். 56

---

இப்படி அன்பில்லாதவர்களுக்கு வெகுதூரத்தில் இருப்பவனாலும் தான் நினைத்தபோது உலகனைத்தையும் அளந்து அனைவருக்கும் அருகிலும் இருக்க வல்லவனன்றோ. (மாயவர் தாம் காட்டும் வழி) இப்படி ஆச்சர்யமான ஸ்வரூபரூப குணசேஷ்டிதங்களை உடைய எம்பெருமான் காட்டும் உபாயம்; "வரவாறு ஒன்றில்லையால் வாழ்வு இனிதால்" என்றதோடு கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். 56

---

களுக்காக அவதரித்துத் தன்னையே உபாயமாகக் காட்டுகை, வாழ்வினிதால் எல்லே-இதென்ன ஆச்சர்யம்! 56

வ்யா:— ஐம்பத்தேழாம் பாட்டில்; (வழித்தங்கு) வந்தேறிகளான அவித்₃யாதி₃களையும் ப்ராப்யாப₄ாஸங்களையும் போக்கானோ? ஹிரண்யனைப் போக்கினவனுக்கு இதொரு பொருளோ? a (நெஞ்சே தழீஇ இத்யாதி₃) முரட்டு ஹிரண்யனை ஸ்பர்சித்துப் b பள்ளமெல்லாம் c ருதி₄

57. அவ:— "அநாதி₃காலமாக நம்மோடு இணைந்திருக்கும் அஜ்ஞானம் முதலியவற்றையும் மற்ற விஷயங்களில் ருசியையும் எப்படிப் போக்குவது?" என்று நெஞ்சு கேட்க, 'இரணியனை அழித்தவனே அவற்றையும் போக்குவான்' என்கிறார்.

வ்யா:— (வழித்தங்கு வல்வினையை மாற்றானோ நெஞ்சே) மனமே! அநாதி₃காலமாக இருப்பவையாயினும், அநாதி₃ புண்யபாபம் காரணமாக வந்தவையாகையாலே நம்மிடம் வந்து குடியிருக்கும் அஜ்ஞானம், வாஸனை முதலானவற்றையும், மற்ற விஷயங்களில் ருசியையும் எம்பெருமானே போக்க மாட்டானா? அவசியம் போக்கிவிடுவான் என்று கருத்து. ஹிரண்யனை அழித்தவனுக்கு இவற்றைப் போக்குவது ஒரு பொருளோ? என்கிறார் மேலே—(தழீஇக் கொண்டு போரவுணன் தன்னைச் சுழித்தெங்கும் தாழ்விடங்கள் பற்றிப் புலால் வெள்ளம் தானுகள வாழ்வடங்க மார்விடந்தமால்) போர் புரிவதையே இயல்வாகக் கொண்ட முரட்டு ஹிரண்யனை அழுந்தக் கட்டிக்கொண்டு, பள்ளமாயிருக்கும் இடங்கள் முழுவதிலும் பரவி அவனுடைய ரத்தவெள்ளம் சுழித்து ஓடும்படியாகவும் அவனுடைய வாழ்வும் செல்வமும் ஒடுங்கும்படியாகவும் அவன் மார்பைக் கிழித்த ஸர்வேச்வரன் தம்முடைய வலிமை மிக்க அஜ்ஞானம் முதலானவற்றைப் போக்கமாட்டானோ? (சுழித்தெங்கும் தாழ்விடங்கள் பற்றிப் புலால் வெள்ளம் தானுகள)

அரு:— ஐம்பத்தேழாம் பாட்டு. a "போரவுணன்" யுத்₃தோ₄ந்முக₂ன். b "தாழ்விடம்" - தாழ்ந்தவிடமாய் பள்ளமென்றபடி. c "புலால் வெள்ளம்" - ரக்தவெள்ளம்.

58. மாலே படிச்சோதி மாற்றேல் இனியுனது
பாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன்—மேலால்
பிறப்பின்மை பெற்றடிக்கீழ்க் குற்றேவ லன்று
மறப்பின்மை யான்வேண்டும் மாடு.

பதவுரை:— மாலே—ஸர்வேஶ்வரனே! படி சோதி—திவ்யமங்கள விக்ரஹதேஜஸ்ஸையுடையவனே!, உனது—உன்னுடைய, பால் போல் சீரில் — பால்போல் மிகவினிய கல்யாணகுணங்களில், பழுத்து ஒழிந்தேன் — (ஊறி) முதிர்ச்சியடைந்துவிட்டேன், இனி மாற்றேல் — இனிமேல் அந்த குணாநுபவத்தை மறுக்காதேஇரு, மேலால்-மேலுள்ள காலத்தில், யான் வேண்டும் மாடு — நான் வேண்டும் ஐஶ்வர்யம், பிறப்பு இன்மை பெற்று — பிறப்புகளில்லாமையை யடைந்து, உன் அடி கீழ் குற்றேவல் அன்று — உன் திருவடிகளின் கீழ் கைங்கர்யம் செய்வதல்ல; மறப்பு இன்மை—(உன் திருவடியை) மறக்காமையே (நான் விரும்பும் செல்வம்)

---

ரவெள்ளம் சுழிக்கும்படி. "பெருநீரில் மும்மை பெரிது" என்னும்படி ருதிரம் வெள்ளமிட அவனைஶ்வர்யமொடுங்க மார்விடந்த ஸர்வேஶ்வரன், வழித்தங்கு வல்வினையை மாற்ருணே நெஞ்சே! 57

---

"வனையுகிராளிமொய்ம்பின் மறவோனதாகம் மதியாது
சென்றொருகிரால்
பிளவெழவிட்டகுட்டமது வையமூடு பெருநீரின் மும்மை
பெரிதே" [பெரிய திருமொழி 11-4-4]

என்று திருமங்கையாழ்வாரும் இவ்வர்த்தத்தை அநுஸந்தித்தாரன்றே. 57

அவ:— ஐம்பத்தெட்டாம் பாட்டில்; (மாலே) "இனி உன்னுடைய அநுப₄வத்துக்கு அவிச்சே₂த₃மே வேண்டுவது" என்கிறார்.

வ்யா:—(மாலே a படிச்சோதி₃) ஸர்வேஶ்வரத்வத்தையும் ஸ்வாப₄ாவிகமான விக்₃ரஹத்தையும் சொல்லுகிறது. ஆஶாலேஶமுடையார் பக்கல் வ்யாமோஹத்தையும் த்₃வேஷம் பண்ணினாலும் விடப்போகாத படியையும் சொல்லுகிறதென்றுமாம். b ஆத்மகு₃ணங்களையும் தே₃ஹகு₃ணங்களையுஞ் சொல்லுகிறதென்றுமாம். (மாற்றேலினி)

---

58. அவ:— "பரமபத₃ப்ராப்தியும் எனக்குத் தேவையில்லை. உன்னுடைய கு₃ணாநுப₄வம் இடையறாது நடக்குமித்தனை எனக்கு வேண்டுவது" என்று எம்பெருமானிடம் விண்ணப்பிக்கிறார்.

வ்யா:— (மாலே! படிச்சோதி!) ஸர்வேஶ்வரனே! அப்ராக்ருதமான தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தை உடையவனே! "படிச்சோதி" என்றது சோதியை உடைய படியாகிற திருமேனியை உடையவனே என்றபடி. இங்கு "மால்" என்றது பெரியவன் என்றபடி. அன்றிக்கே "மாலே" என்று சிறிது அன்புடைய அடியார்களிடமும் மயக்கமுடையவனே! என்பதாகவும் கொள்ளலாம். "படிச்சோதி" என்று தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தில் காந்தியை உடையவனே! என்றும் கொள்ளலாம். அல்லது "மாலே" என்றது ஸர்வேஶ்வரனுகையாலே பரத்வத்துக்கு உறுப்பான கு₃ணங்களையும் அடியார்களிடம் அன்புடையவனுகையாலே நீர்மைக்கு உறுப்பான கு₃ணங்களையும் சொல்லி, ஆத்மகு₃ணங்கள் அனைத்தையும் உடையவனென்றும், 'படிச்சோதி" என்றதால் தே₃ஹகு₃ணங்கள் அனைத்தையும் உடையவனென்றும கூறுவதாகவும் கொள்ளலாம். (மாற்றேல் இனி) இகறயிலி (வரியில்

---

அரு:— ஐம்பத்தெட்டாம் பாட்டு. a "படிச்சோதி" ஸ்வாப₄ாவிகமான விக்₃ரஹமென்னுதல், விக்₃ரஹத்தினுடைய காந்தி என்னுதல். b விவரணம் - (ஆத்மகு₃ணங்

வைத்த இறையிலியை மாற்றாதே கொள் இறையிலி ஏதென்னில், (உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந் தேன்) இவ்விறையிலியை மாற்றாதேகொள். (மேலாலித் யாதி) ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாகப் பரமபதத்திலே உன் திருவடிகளிலே அடிமை செய்கையன்று எனக்கு தநம், பரமபதத்தில் நீயிருக்குமிருப்பை மறவாமை. பரமபதத் திலே போனாலல்லது மறவாமை இல்லாமையாலே பரமபதமும் வேண்டினாராய்ப் பலித்தது.

---

லாத) நிலப்போலே நீ நிர்ஹேதுகமாக எனக்கு அளித்த அநுபவத்தை மாற்றாதே கொள். அவ்வநுபவம் யாதென் பதை மேலே காட்டுகிறார். —(உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன்) உன்னுடைய பால் போல் மிக இனிய கல்யாணகுணங்களிலே ஊறிப் பழுத்து விட்டேன். நிர்ஹே துகமாக நீ அளித்த இந்த அநுபவத்தை மாற்றி விடாதே என்று கருத்து. இனி நீர் வேண்டுவது ஏதேனுமுண்டோ? என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கூறுகிறார் —(மேலால் பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவல் அன்று) மேலுள்ள காலத்தில் இந்த ஸம்ஸார மண்டலத்தில் பிறந் திறந்து தடுமாறுவது நீங்கிப்பரமபதம் சென்று உன் திருவடி களில் அடிமைசெய்வதன்று நான் விரும்பும் செல்வம். (மறப் பின்மை யான் வேண்டும் மாடு) பரமபதத்தில் நீ இருக்கும் இருப்பை மேலுள்ள காலமெல்லாம் நான் மறவாமல் இருப் பதே நான் வேண்டும் செல்வம். ஸ்வதந்த்ரனான எம்பெரு மானிடம் பரமபதத்தை வேண்டினால் அவன் தருவது நிச் சயம் என்று கூறமுடியாதாகையாலே, ஸாவித்ரி யமனிடம் பிள்ளைவரம் வேண்டித் தான் விரும்பிய ஸௌமங்கல்யத்தைப் பெற்றது போலே, இவரும் மறப்பின்மையை வேண்டிப் பரம பதப்ராப்தியை உறுதிப்படுத்திக் கொள்கிறார். பரமபதம் சென்றாலல்லது மேலுள்ள காலமெல்லாம் மறவாமல் இருக்க முடியாதன்றோ.

---

களையும்) இத்யாதி. மறவாமையமையுமோ, பரமபதம் வேண்டாவோ? என்ன அருளிச்செய்கிறார் (பரமபதத்திலே போனால்) இத்யாதி.

ர்ஸாவித்ரியினுடைய ப⁴ர்த்தாவை ம்ருத்யு கொடுபோக, 'என் ப⁴ர்த்தாவைத் தரவேணும்'' என்று அவனை அபேக்ஷிக்க, ''இதொன்றுமொழிய வேறே சில வேண்டிக் கொள்'' என்ன, ''இவன் வயிற்றிலே எனக்கொரு ப்ரஜையுண்டாகவேணும்'' என்று வேண்டிக்கொண்டாற் போலே. ''இவர்க்கு மறப்புத்தானுண்டோ?'' என்னில்; ''ப்ரக்ருதி ஸம்ப³ந்த⁴முடையார்க்கு வருமது நமக்கும் வாராதோ'' என்று ப⁴யப்படுகிறார். ஊரடைய வெந்து கொண்டுவாராநின்றால், ''நம்மகமொன்றும் பிழைக்கும்'' என்று ப⁴யங்கெட்டிருப்பாருண்டோ? 58.

---

இதிஹாஸ புராணங்களிலுள்ள ஸத்யவான் ஸாவித்ரி கதை பின்வருமாறு:—ஸாவித்ரியின் கணவனான ஸத்யவானுடைய ஆயுட்காலம் முடிந்துவிட்டதாகையாலே, அவனை யமன் கொண்டுபோகத் தொடங்கினான். பரமபதிவ்ரதையான ஸாவித்ரி தன் கற்பின் சக்தியாலே யமனைத் தொடர்ந்து சென்று ''எனது கணவனின் உயிரைத் தர வேண்டும்'' என்று அவனை வேண்டினாள். ''மனிதனுடைய ஆயுட்காலம் முடிந்தவுடன் அவனது உயிரைக் கொண்டு போவது காலதேவனான என்னுடைய கடமை. இதுதவிர ஏதேனும் வரம் வேண்டிக்கொள், தருகிறேன்'' என்று யமன் கூறினான். உடனே ஸாவித்ரி ''என் கணவனிடம் எனக்கு ஒரு குழந்தை பிறக்க வரம் தாருங்கள்'' என்று வேண்டிக் கொண்டு கணவனுடைய உயிரைத் திரும்பப் பெற்றாள். அது போலே இவரும் மறப்பின்மையை வேண்டிப் பரமபதப்ராப்தியை உறுதி செய்துகொள்கிறார். ''உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'' [திருவாய் 6—7—1] என்கிறபடியே தனக்கு எல்லாம் கண்ணனாகப் பெற்ற இவருக்கு மறப்பு உண்டோ? எனில்; ''தே³ஹஸம்ப³ந்த⁴

---

ர் ''இத்தை அபேக்ஷிக்கவே அது ப⁴லித்ததெப்படி?'' என்ன அருளிச்செய்கிறார் (ஸாவித்ரி) இத்யாதி. 58.

வைத்த இறையிலியை மாற்றாதே கொள் இறையிலி ஏதென்னில், (உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந் தேன்) இவ்விறையிலியை மாற்றாதேகொள். (மேலாலித் யாதி) ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாகப் பரமபதத்திலே உன் திருவடிகளிலே அடிமை செய்கையன்று எனக்கு தநம், பரமபதத்தில் நீயிருக்குமிருப்பை மறவாமை. பரமபதத் திலே போனாலல்லது மறவாமை இல்லாமையாலே பரமபதமும் வேண்டினாராய்ப் பலித்தது.

---

லாத) நிலம்போலே நீ நிர்ஹேதுகமாக எனக்கு அளித்த அநுபவத்தை மாற்றாதே கொள். அவ்வநுபவம் யாதென் பதை மேலே காட்டுகிறார். —(உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன்) உன்னுடைய பால் போல் மிக இனிய கல்யாணகுணங்களிலே ஊறிப் பழுத்து விட்டேன். நிர்ஹே துகமாக நீ அளித்த இந்த அநுபவத்தை மாற்றி விடாதே என்று கருத்து. இனி நீர் வேண்டுவது ஏதேனுமுண்டோ? என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கூறுகிறார் —(மேலால் பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவல் அன்று) மேலுள்ள காலத்தில் இந்த ஸம்ஸார மண்டலத்தில் பிறந் திறந்து தடுமாறுவது நீங்கிப்பரமபதம் சென்று உன் திருவடி களில் அடிமைசெய்வதன்று நான் விரும்பும் செல்வம். (மறப் பின்மை யான் வேண்டும் மாடு) பரமபதத்தில் நீ இருக்கும் இருப்பை மேலுள்ள காலமெல்லாம் நான் மறவாமல் இருப் பதே நான் வேண்டும் செல்வம். ஸ்வதந்த்ரனான எம்பெரு மானிடம் பரமபதத்தை வேண்டினால் அவன் தருவது நிச் சயம் என்று கூறமுடியாதாகையாலே, ஸாவித்ரி யமனிடம் பிள்ளைவரம் வேண்டித் தான் விரும்பிய ஸௌமங்கல்யத்தைப் பெற்றது போலே, இவரும் மறப்பின்மையை வேண்டிப் பரம பதப்ராப்தியை உறுதிப்படுத்திக் கொள்கிறார். பரமபதம் சென்றாலல்லது மேலுள்ள காலமெல்லாம் மறவாமல் இருக்க முடியாதன்றோ.

---

களையும்) இத்யாதி. மறவாமையமையுமோ, பரமபதம் வேண்டாவோ? என்ன அருளிச்செய்கிறார் (பரமபதத்திலே போனால்) இத்யாதி.

ி ஸாவித்ரியினுடைய ப₄ர்த்தாவை ம்ருத்யு கொடுபோக, 'என் ப₄ர்த்தாவைத் தரவேணும்'' என்று அவனை அபேக்ஷிக்க, ''இதொன்றுமொழிய வேறே சில வேண்டிக் கொள்'' என்ன, ''இவன் வயிற்றிலே எனக்கொரு ப்ரஜையுண்டாகவேணும்'' என்று வேண்டிக்கொண்டாற் போலே. ''இவர்க்கு மறப்புத்தானுண்டோ?'' என்னில்; ''ப்ராக்ருத ஸம்ப₃ந்த₄முடையார்க்கு வருமது நமக்கும் வாராதோ'' என்று ப₄யப்படுகிறார். ஊரடைய வெந்து கொண்டுவாராநின்றால், ''நம்மகமொன்றும் பிழைக்கும்'' என்று ப₄யங்கெட்டிருப்பாருண்டோ? 58.

---

இதிஹாஸ புராணங்களிலுள்ள ஸத்யவான் ஸாவித்ரி கதை பின்வருமாறு:—ஸாவித்ரியின் கணவனான ஸத்யவானுடைய ஆயுட்காலம் முடிந்துவிட்டதாகையாலே, அவனை யமன் கொண்டுபோகத் தொடங்கினான். பரமபதிவ்ரதையான ஸாவித்ரி தன் கற்பின் சக்தியாலே யமனைத் தொடர்ந்து சென்று ''எனது கணவனின் உயிரைத் தர வேண்டும்'' என்று அவனை வேண்டினாள். ''மனிதனுடைய ஆயுட்காலம் முடிந்தவுடன் அவனது உயிரைக் கொண்டு போவது காலதேவனான என்னுடைய கடமை. இதுதவிர ஏதேனும் வரம் வேண்டிக்கொள், தருகிறேன்'' என்று யமன் கூறினான். உடனே ஸாவித்ரி ''என் கணவனிடம் எனக்கு ஒரு குழந்தை பிறக்க வரம் தாருங்கள்'' என்று வேண்டிக் கொண்டு கணவனுடைய உயிரைத் திரும்பப் பெற்றாள். அது போலே இவரும் மறப்பின்மையை வேண்டிப் பரமபதப்ராப்தியை உறுதி செய்துகொள்கிறார். ''உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'' [திருவாய் 6—7—1] என்கிறபடியே தனக்கு எல்லாம் கண்ணனாகப் பெற்ற இவருக்கு மறப்பு உண்டோ? எனில்; ''தே₃ஹஸம்ப₃ந்த₄

---

ி ''இத்தை அபேக்ஷிக்கவே அது ப₄லித்ததெப்படி?'' என்ன அருளிச்செய்கிறார் (ஸாவித்ரி) இத்யாதி. 58.

59 மாடே வரப்பெறுவ ராமென்றே, வல்வினையார்
காடானு மாதானும் கைக்கொள்ளார்,—ஊடேபோய்ப்
பேரோதம் சிந்துதிரைக் கண்வளரும், பேராளன்
பேரோதச் சிந்திக்கப் பேர்ந்து.

பதவுரை:—பேர் ஓதம்—பெரியகடலில், திரை—(சிதறிய)அலைகள், ஊடே போய் சிந்து—அருகில் வந்து சிந்தும்படி, கண்வளரும்—யோகநித்திரைசெய்கிற, பேராளன், பெருமையையுடையவனுடைய, பேர் ஓத—திருநாமங்களைச் சொல்லுவதற்கு. சிந்திக்க—நினைத்தவளவில், வல்வினையார்—வலிமைபொருந்திய பாபமானது, பேர்ந்து—(நம்மை) விட்டுப்போய், காடானும்—காட்டையாவது, ஆதானும்—வேறு எதையாவது, கைக்கொள்ளார்—பற்றுகிறதில்லை; மாடே—(முன்போல்) நம்மருகில், வரப்பெறுவராம் என்றே—வரலாமென்னும் ஆசையினாலோ?

---

வ்யா:—ஐம்பத்தொன்பதாம் பாட்டில்; (மாடே) உ(ஊடேபோய்ப் பேரோதம் சிந்துதிரைக் கண்வளரும் பேராளன் பேரோதச் சிந்திக்கப்பேர்ந்து - வல்வினையார் காடானு மாதானும் கைக்கொள்ளார் - மாடே வரப்பெறுவரா

---

முடைய மற்றவர்களுக்கு வரும் மறப்பு தமக்கும் வந்து விடுமோ?'' என்று பயந்து வரம் கேட்கிறார். ஊர் முழுவதும் நெருப்பில் வெந்துகொண்டிருக்கும்போது 'நம் வீடு மட்டும் வேகாது' என்று எவராலும் பயம் கெட்டிருக்க முடியாதன்றோ! 58

59. அவ:—எம்பெருமானிடம் பரமபத₃ ப்ராப்தியை உறுதி செய்துகொண்ட பெருமிதத்தாலே "பாபம் இனி என் அருகில் வரமுடியுமோ?'' என்கிறார்.

---

அரு:—ஐம்பத்தொன்பதாம் பாட்டு உ "ஊடேபோய்" - உள்ளேபோய்; திருமேனியண்டையிலே போயென்றபடி. 59

60 பேர்ந்தொன்று நோக்காது பின்னிற்பாய் நில்லாப்பாய்
ஈன்றுழாய் மாயனையே யென்னெஞ்சே—
பேர்ந்தெங்கும்
தொல்லைமா வெந்நரகில் சேராமல் காப்பதற்கு
இல்லைகாண் மற்றோ ரிறை.

---

மென்றே) கடலில்திரைகள் முறிந்து வந்து சிறுதிவலையாய்த் துடைகுத்தக் கண்வளராநின்று ஆஶ்ரிதவிஷயத்தில் ஓரத்துக்கு எல்லையின்றிக்கேயிருக்கிறவருடைய திருநாமம் சொல்ல நினைத்ததறிந்தால், வல்வினையார் அங்குநின்றும் போந்து தமக்குப் புகலாக மலையாகிலும் கடலாகிலும் ஏதேனுமொன்று கைக்கொள்ளுகிறிலர்; கைக்கொள்ளா தொழிகிறது என்னருகே வரலாமென்றோ? 59.

---

வ்யா.:—(ஊடேபோய்ப் பேரோதம் சிந்துதிரைக் கண் வளரும் பேராளன் பேரோதச் சிந்திக்கப் பேர்ந்து—வல்வினை யார் காடானும் ஆதானும் கைக்கொள்ளார். மாடே வரப் பெறுவராமென்றே) "பெரிய திருப்பாற்கடலில் சிதறிய அலை கள் திருமேனியின் அருகில் வந்து தெளிக்கையாலே; அத் திரைக் கைகளால் கடல் அடிவருடும்படியாகப் பள்ளிகொள்கிற வனாய், அடியார்கள் விஷயத்தில் எல்லையற்ற பக்ஷபாதத்தை உடையவனான எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல் வதற்கு நாம் நினைத்தபின்பு நம்முடைய பாபங்களாகிற 'வல்வினையார்' நம்மிடமிருந்து கிளம்பித் தமக்கு இருப்பிட மாக ஒரு காட்டையாவது, மலையையாவது, கடலையாவது கைக்கொண்டிருக்க வேண்டாமோ? அப்படிக் கிளம்பாமல் தாமதிப்பது மறுபடியும் நம் அருகில் வரலாம் என்னும் ஆசை யினாலோ?" என்கிறார். 59.

பதவுரை—என் நெஞ்சே—என் மனமே!, தொல்லை—பழையதாய், மா—பெரிதாய், வெம்—கொடியதான, நரகில்—ஸம்ஸாரமாகிற நரகத்தில், சேராமல்—அழுந்தாதபடி, காப்பதற்கு—ரக்ஷிப்பதற்கு, எங்கும் பேர்ந்து—எங்கு புகுந்தாலும், மற்ற ஓர் இறை இல்லைகாண்—வேறொரு ரக்ஷகன் இல்லைகிடாய்!, (ஆகையால்) பேர்ந்து—இவனை விட்டு, ஒன்றும் நோக்காது—வேறொன்றையும் கணிசியாது, ஈன் துழாய் மாயனையே—இனிய துழாயை தரித்த ஆச்சர்யபூதனையே, பின் நிற்பாய்—பின்தொடர்ந்தாலும் தொடரு; நில்லாப்பாய்—அவனைப் பின்தொடராமல் அழிந்துபோவதாயிருந்தாலும் போ.

---

வ்யா:—அறுபதாம் பாட்டில், a (பேர்ந்தொன்று) வேறொரு பதார்த்தத்தை நோக்காதே அவனை அநுவர்த்திக்கிலுமநுவர்த்தி; உனக்குரியையாய் அநர்த்தப்படிலும்

---

60. அவ:—'பூர்வ வாஸனையாலே நெஞ்சு பகவத் விஷயத்தில் ஈடுபடாததாகிவிடுமோ' என்று பயந்து அதை சிக்ஷிக்கிறார்.

வ்யா:—(பேர்ந்துஒன்று நோக்காது ஈன் துழாய்மாயனையே பின்நிற்பாய் நில்லாப்பாய்) இனியதுழாய் மாலையை அணிந்த எம்பெருமானை விட்டு வேறொன்றையும் விரும்பாமல் அவனையே பின்தொடர்ந்தாலும் தொடர்; அப்படியல்லாமல் முன்போலே உன் ஸ்வாதந்த்ர்யத்தாலே விஷயங்களாகிற படுகுழியில் விழுந்து அனர்த்தப்பட்டாலும் படு. "நீ இவ்விரண்டு வழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்கு முன் நான் சொல்லும் இந்த விஷயத்தைக் கவனமாகக் கேட்பாயாக" என்கிறார் மேலே என் நெஞ்சே தொல்லைமா வெந்நரகில் சேராமல் காப்ப

---

அநு:—அறுபதாம்பாட்டு, a, b [என் நெஞ்சே! தொல்லை மா வெம்நரகில் சேராமல் காப்பதற்கு எங்கும் பேர்ந்து மற்

61 இறைமுறையான் சேவடிமேல் மண்ணளந்த வந்நாள்
மறைமுறையால் வானாடர் கூடி—முறைமுறையின்
தாதிலகு பூத்தெளித்தா லொவ்வாதே தாழ்விசும்பின்
மீதிலகித் தான்கிடக்கும் மீன்.

பதவுரை: —இறைமுறையான்—ஈச்வரன் என்னும் உறவு முறையையுடையவன், மண் அளந்த—(தன்னுடைமையாகிற) இவ்வுலகத்தை அளந்த, அந்நாள்—அந்த ஸமயத்தில், தாழ் விசும்பின் மீது—பரந்த வெளியான ஆகாசத்தின் மீது, இலகி கிடக்கும் மீன் தான்—ஒளிவிட்டுக்கொண்டு பரந்து கிடக்கும் நக்ஷத்ரங்கள், வானாடர்—தேவர்கள், கூடி—ஒன்று சேர்ந்து முறைமுறையின்—வரிசைவரிசையாயிருந்து, மறை முறையால்—வேதத்தில் சொன்ன வழியாலே சேவடி மேல்—அத்திருவடியின் மீது, தாது இலகு பூ தெளித்தால் ஒவ்வாதே—தாதுக்களினாலே பிரகாசிக்கும் பூக்களைத் தெளித் திருப்பதுபோல் இருக்கின்றன. 60.

---

படு. b (ஈன்துழாயித்யாதி) ஸம்ஸார ஸம்பந்த,மறுகைக்கு எங்குப்புக்காலும் அவனையொழிய ஆம்ரயணீயதத்வமில்லை. அவனையநுவர்த்தி: ஸ்வதந்த்ரமாய்க் கெடிலுங்கெடு.

---

தற்கு எங்கும் பேர்ந்து மற்றோர் இறை இல்லை காண்) அநாதிகாலமாகத் தொடர்ந்து வரும் மிகப்பெரிய ஸம்ஸாரமாகிற கொடிய நரகத்தில் சேராமல் காப்பதற்கு நீ எங்குப் போனாலும் அந்த ஈன்துழாய் மாயனைத்தவிர வேறு புகலில்லை; இதைத் தெரிந்துகொண்டு அவனைப் பின்தொடர்ந்தாலும் தொடர்; உன்விருப்பப்படி விஷயங்களில் இழிந்து அழிந்தாலும் அழி. 60

---

றோரிறையில்லை காண் - ஆனபின்பு பேர்ந்தொன்று நோக்காது - ஈன்துழாய் மாயனையே பின்நிற்பாய், நில்லாப்பாய்] என்றந்வயம். 06

அவ:— அறுபத்தோராம் பாட்டில்; (இறை) ஊலோக யாத்ரையை அநுஸந்திக்கப்புக்காலும் அவனை முன்னாக வல்லது காணமாட்டாமை சொல்லுகிறது. b சிறியாச்சான், ''ஶப்தாதிவிஷயங்களில் நின்றும் நாம் மீளமாட்டாதாற் போலே ஆழ்வார்கள் பகவத்விஷயத்தில் நின்றும் மீளமாட்டார்கள்'' என்று பிள்ளைக்குப் பணித்தான். ப்ரஹ்மாதிகளுக்குப் பரமபதத்திலிருக்குமிருப்பு அநுபவிக்க நிலமன்று; உகந்தருளினவிடங்களிலே அநுபவிக்குமத்தனை.

---

61. அவ:—விரும்பியது பெற்றமையாலே போது போவதற்காக எம்பெருமானுடைய மிகப் பரந்த செல்வமான ஆகாயத்தைப் பார்த்தார் ஆழ்வார். எண்ணிறந்த நக்ஷத்ரங்கள் கண்ணில்பட்டன. 'எம்பெருமான் திருவுலகளந்தருளிய போது தேவர்கள் அத்திருவடியிலே தூவிய பூக்களோ இவை?' என்று அநுபவிக்கிறார். 'உலக நடைமுறையைப் பார்க்கும்போதும் ஆழ்வார்களுக்கு அது எம்பெருமானுடன் தொடர்புடையதாகவே காட்சியளிக்கும்' என்னும் விஷயம் இப்பாட்டிலிருந்து விளங்குகிறது. சிறியாச்சான் என்னும் பெரியவர் ''நம்மைப்போன்ற ஸம்ஸாரிகளுக்கு பகவத்விஷயத்தை அநுபவிக்கப்புகுந்தாலும் ஶப்தாதி விஷயங்களின் தொடர்பிலிருந்து மீளமுடியாமல் இருப்பதுபோலே, ஆழ்வார்கள் உலகநடைமுறையை அநுபவித்தாலும், அதிலும் பகவத் விஷயத்தின் அநுபவமும் தொடர்ந்துவருமாகையாலே அதிலிருந்து மீளமாட்டார்கள்'' என்று நம்பிள்ளைக்கு அருளிச் செய்ததாக வ்யாக்யானம். இப்பாட்டில் பிரமன் முதலான தேவர்கள் பரமபதத்திற்குச் சென்று அநுபவிக்க இயலாமையாலே, அவன் உகந்தருளின அவதாரங்களில் ஒன்றான திரிவிக்ரமாவதாரத்தை அநுபவித்ததைச் சொல்லுகிறார்.

வ்யா:— c (இறையித்யாதி₂) ஈஶ்வரனை முறையாலே திருவுலகளந்தவனுடைய திருவடிகளிலே. d (வானாடரித்யாதி₂) தேவர்கள் வேத₃ம் சொன்ன முறையாலே திருவுலகளந்தருளின திருவடிகளிலே உஜ்ஜ்வலமான புஷ்பங்கள் தெளித்தாற்போலேயன்றோ ஒத்த விசும்பின்மேல் கிடக்கிற நக்ஷத்ரங்களிருக்கிறது. 61.

---

வ்யா:—(இறை முறையான் மண்ணளந்த சேவடிமேல்) 'அனைத்துலகுக்கும் உடையவன்' என்னும்முறையை உடைய எம்பெருமான் அந்த முறையை நிலைநிறுத்துவதற்காக உலகனைத்தையும் அளந்தபோது அத்திருவடிகளின் மேலே; அத்திருவடிகளுக்கு வானாடர் செய்த கைங்கர்யத்தைச் சொல்லுகிறது மேலே—(அந்நாள் வானாடர் கூடி முறை முறையின் மறை முறையால் தாதிலகு பூத்தெளித்தால் ஒவ்வாதே தாழ் விசும்பின்மீது இலகிக்கிடக்கும் மீன் தான்) மேலுலகங்களிலுள்ள தே₃வர்கள் ஒன்றுகூடி, பிரமன், உருத்திரன், இந்திரன் என்று வரிசைப்படியிருந்து வேத₃த்தில் சொன்ன வழியாலே அந்த உலகளந்த திருவடிகளிலே தாதுக்களினால் ஒளிவிடும் பூக்களைத் தெளித்ததுபோலேயன்றோ விஷ்ணுபத₃ம் என்று பெயர்பெற்ற ஆகாயத்தில் ஒளிவிட்டுக்கொண்டு பரந்து கிடக்கும் நக்ஷத்திரங்கள் இருக்கின்றன. 61

---

அரு:—அறுபத்தோராம் பாட்டு. a (லோகயாத்ரை) - ஆகாசத்தைப்பார்க்கை. b புறம்பே கண்வைக்கும்போதும் அவனையொழியக் கண்வையார்களென்னுமதுக்கு ஸம்வாத₃மாக அருளிச்செய்கிறார் (சிறியாச்சான்) இத்யாதி₃. 'முறை முறையின்'' - முறைமுறையாக - வரிசையடைவே. c d [இறைமுறையான் மண்ணளந்த சேவடிமேல் அந்நாள் வானாடர்கூடி, முறைமுறையின் - முறைமுறையாக, தாதிலகுதொடங்கி—கிடக்கும்] என்றந்வயம். 61

62 மீனென்னும் கம்பில் வெறியென்னும் வெள்ளிவேய்
வானென்னும் கேடிலா வான்குடைக்குத்—தானோர்
மணிக்காம்பு போல்நிமிர்ந்து மண்ணளந்தான் நங்கள்
பிணிக்காம் பெருமருந்து பின்.

பதவுரை:— மீன் என்னும் கம்பில்—நக்ஷத்திரங்களாகிற கம்புகளில், வெறி வெள்ளி என்னும் வேய்—நக்ஷத்திரங்களுக்கு அரசனான சந்திரன், சுக்ரன் என்னுமிவ்விரண்டையும் குழல்களாயுடையதாய், வான் என்னும்—ஆகாசம் என்று பெயரையுடையதான, கேடிலா வான் குடைக்கு—அழிவில்லாத பெரிய குடைக்கு, தான்—(திரிவிக்ரமனாகிய) தான், ஓர் மணி காம்பு போல் நிமிர்ந்து—ஒப்பற்ற நீலமணித் தடிபோல் வளர்ந்து, மண் அளந்தான்—உலகையெல்லாம் அளந்தவனாய், பின்—அதற்குமேல், நங்கள் பிணிக்கு—(ஸம்ஸாரமாகிய) நம்முடைய நோய்க்கு, பெரு மருந்து ஆம் - பெரிய மருந்து ஆவான்.

---

வ்யா:—அறுபத்திரண்டாம் பாட்டில்; a (மீனித்யாதி) நக்ஷத்ரங்களாகிற கம்புகளையும்; b "உடுபதி" என்னுமா போலே நக்ஷத்ரங்களுக்கு ராஜாவான சந்த்ரசுக்ரர்களைக் c குழலாக உடைத்தான, நித்யமாய்ப் பெருத்த ஆகாசமாகிற குடைக்கு நீலமணியாலே சமைந்ததொரு காம்புபோலே வளர்ந்து பூமியையளந்தான், (நங்களித்யாதி) திருவுலகளந்து தேவர்களுடைய து:க்கத்தைப்போக்கினாற்போலே நம்முடைய ஸம்ஸாரத்துக்குப் பரமான ஔஷதம்.

---

62. அவ:—சென்ற பாட்டில் திரிவிக்ரமாவதாரப்ரஸ்தாவம் வருகையாலே, அதையே அநுபவிக்கிறார் இப்பாட்டிலும்.

வ்யா:—(மீன் என்னும் கம்பில்) ஒரு குடையென்றால் அதற்கு மேல்பரப்பில் சில கம்புகள் வேண்டும்:பிடித்துக்கொள்வதற்குக் காம்பு எனப்படும் தடி ஒன்று வேண்டும். அந்தத் தடியையும் கம்புகளையும் இணைக்கும் சில குழல்கள் வேண்டும்.

63 பின்துரக்கும் காற்றிழந்த சூல்கொண்டல் பேர்ந்தும்போய்
வன்திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்தே — அன்று
திருச்செய்ய நேமியான் தீயரக்கி மூக்கும்
பருச்செவியு மீர்ந்த பரன்.

பதவுரை:— அன்று — ராமாவதார காலத்தில், திரு செய்ய நேமியான் — வீரலக்ஷ்மியையுடைய சிவந்த திருவாழியை

---

இங்கு ஆகாசத்தை ஒரு குடையாக உருவகப்படுத்துகிறார். நக்ஷத்திரக் கூட்டங்கள் அக்குடைக்குக் கம்புகள்போலே அமைந்துள்ளன என்கிறார். (வெறி வெள்ளி என்னும் வேய்) வெறி என்று நக்ஷத்திரங்களுக்கு அரசனான சந்திரனைச் சொல்லுகிறது. சந்திரனை "உடு (நக்ஷத்திரங்கள்) பதி" என்றும், 'தாராபதி' என்றும் சொல்லுவதுண்டன்றோ. "வெள்ளி" என்பது மிக்கஒளியுடைய கிரஹமான சுக்கிரனைச் சொல்லுகிறது. இவ்விரண்டும் இக்குடைக்கு இருகுழல்களாய் அமைந்துள்ளன. வேய் - மூங்கில் குழல். (வான் என்னும் கேடிலா வான்குடைக்கு) பிரளயகாலம் வரையில் அழிவில்லாத ஆகாசம் என்னும் பெரிய குடைக்கு. (தான் ஓர் மணிக்காம்பு போல் நிமிர்ந்து மண்ணளந்தான்) இந்த ஆகாசமாகிற குடைக்கு நீலமணியாலே செய்ததொரு குடைக்காம்பு போல வளர்ந்து பூமியை அளந்தான். (பின் நங்கள் பிணிக்குப் பெரு மருந்து ஆம்) அக்காலத்தில் திருவுலகளந்து தேவர்களுடைய துன்பத்தைப் போக்கினது போலே, பிற்காலத்தில் நம்முடைய ஸம்ஸாரமாகிற நோய்க்குப் பெரிய மருந்தாகின்றான். 62.

---

அரு:— அறுபத்திரண்டாம் பாட்டு. மண்ணளந்த அபதாநத்தைக் குடையுங் காம்புமாக்கி நிரூபிக்கிறார். a, b (வெறி) சந்த்ரன்-தாராபதி, (வெள்ளி) சுக்ரன் இவைகள். c "வேய்" என்று குடையிலடியிலேயிருக்கிற மூங்கில் குழல். [illegible]62.

யுடைய ஸர்வேஶ்வரன், தீ அரக்கி மூக்கும்—கொடிய ராக்ஷஸியான ஶூர்ப்பணகையின் மூக்கையும், பரு செவியும்—பருத்த காதுகளையும், ஈர்ந்த பரன்—அறுத்த பெருமையை யுடையனுமிருந்து, பேர்ந்தும் போய்—இவ்வுலகத்திலிருந்தும் சென்று, வன் திரை கண் வந்து அணைந்த (படி)—வலிய அலைகளையுடைய திருப்பாற்கடலில் வந்து சேர்ந்த (தன்மை), பின் துரக்கும்—பின்னே இருந்து தள்ளும், காற்று இழந்த—காற்றைவிட்டுப் பிரிந்ததாய், சூல்—நீரை கர்ப்பத்திலே கொண்டதான, கொண்டல்—மேக, மானது, பேர்ந்தும் போய்—மறுபடியும் சென்று, வன் திரை கண்—வலிய அலைகளையுடைய கடலின் மேலே, வந்து அணைந்த வாய்மைத்து—வந்து பொருந்தியதுபோலிருக்கிறது.

---

வ்யா:—அறுபத்துமூன்றும் பாட்டில்; (பின் துரக்குமித்யாதி) பின்னே துரக்கிற காற்றையிழந்த சூல்கொண்டல், திரியட்டும் கடலிலே புக்குக்கிடந்த வாய்மையன்-மெய்யான ஒப்பை உடையன், என்று-வாய்மைத்து என்றத்தை

---

63. அவ.—சென்ற பாட்டில் மாவலியை அடக்கிய திரிவிக்ரமனைப்பற்றிப் பேசினார். இங்கு அரக்கர்களை அடக்கிய ஸ்ரீராமபிரானைப்பற்றிப் பாடுகிறார்.

வ்யா—இதற்குப் பூருவர்கள் இரண்டு விதமாகப் பொருள் கொண்டார்கள். அவ்விரண்டு பொருளிலும் ஒரு குறையிருக்கையாலே அக்குறைகள் இல்லாதபடி நம்பிள்ளை மூன்றாவது வழியில் அந்வயித்துப் பொருள் கூறுகிறார். அப்பொருள்கள் முறையே வர்ணிக்கப்படுகின்றன. (பின் துரக்கும் காற்றிழந்த சூல் கொண்டல் பேர்ந்துப்போய் வன்திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்தே.... யாகில்) முன்னடிகளை உபமானவாக்யமாகவும் பின்னடிகளை உபமேயவாக்யமாகவும் கொள்வது. ராமாவதாரகாலத்தில் வீரலக்ஷ்மியையும் சிவந்த திருவடிகளையும் உடைய ஸர்வேஶ்வரன் கொடிய அரக்கியான

வாய்மையனென்று a வசனத்தை மாறாடிக்கொள்ளவுமாம். b பருச்செவியுமீர்த்த பரன் படி என்று அத்யாஹரித்துக் கொள்ளவுமாய், c ஒன்றுக்கு வசநவ்யத்யயம் பண்ண வேணும்; ஒன்றுக்குப் படி என்று அத்யாஹரிக்கவேணும்; இரண்டு மிறுக்குமொழிய உபமாநோபமேயங்களை மாறு

சூர்ப்பணகையின் மூக்கையும் பருத்த காதுகளையும் அறுத்த பெருமையையுடையவன் என்பது பின்னடிகளின் பொருள். "பின்னேயிருந்து தள்ளும் காற்றை விட்டுப்பிரிந்ததாய், நீரை உட்கொண்டதான மேகமானது மறுபடியும் சென்று வலிய அலைகளையுடைய கடலின்மேலே வந்து பொருந்தியது போலி ருக்கிறது" என்பது முன்னடிகளின் பொருள். "பரன்" என்று உயர்திணையில் சொல்லியிருக்கையாலே "வாய்மைத்து" என்பதை "வாய்மையன்" என்று கொண்டு, "அரக்கர்களை அழித்து மீண்டும் திருப்பாற்கடலுக்குச் சென்ற ஸ்ரீராம பிரான் பின்னே தள்ளும் காற்றைப் பிரிந்ததால் மறுபடி யும் கடலில் படிந்த நீர்மேகத்தை உபமானமாக உடைய வன்" என்று பொருள் கொள்வது ஒருவழி. "பரன்" என்று முடியும் பின்னடிகளோடு படி" என்னும் பதத்தை வருவித்துக்கொண்டு பதவுரையில் கண்டது போலே ராம பிரானுடைய தன்மை மேகத்தின் தன்மையை ஒத்திருந்தது என்று பொருள் கொள்வது மற்றொரு வகை. முதல் பொரு ளிலே "வாய்மைத்து" என்பதை "வாய்மையன்" என்று உயர்திணையாக மாற்றிக்கொள்ள வேண்டிய குறை உள் ளது. இரண்டாவது பொருளில் "படி" என்னும் சொல்லை வருவித்துக்கொள்ள வேண்டிய குறை உள்ளது. இவ்விரண்டு பொருளையும் நஞ்சீயர் தம்முடைய சிஷ்யரான நம்பிள்ளைக்கு அருளிச்செய்ய, நம்பிள்ளை இவ்விரண்டு குறைகளும் இல்

அரு:—அறுபத்துமூன்றும் பாட்டு. a (வசநத்தைமாறா டுகை)-வாய்மைத்தென்ற நபும்ஸகத்தை வாய்மையன் என்று புல்லிங்கமாக்குகை. b படியென்று ஸ்வபரமாய், அத்யாஹார்ய பக்ஷத்தில் லிங்கவ்யத்யயம் வேண்டா

டாதே நேரே யோஜிக்கப்போம்'' என்று ஜீயருக்கு விண்ணப்பம் செய்தபடி. [பின்துரக்கும் காற்றிழந்த சூல்கொண்டல்- அன்று திருச்செய்ய நேமியான் தீயரக்கி மூக்கும் பருச்செவியு மீர்ந்தபரன்-பேர்ந்தும்போய், வன்திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்து] பின்துரக்குங் காற்றிழந்த சூல்கொண்டல்

---

லாதபடி வேறொருவிதமாக அந்வயித்து மூன்றுவதுபொருளை நஞ்சீயருக்கு விண்ணப்பித்தார். அதாவது—''பின் துரக்கும் காற்றிழந்த சூல் கொண்டல்'' என்பது இப்பொருளில் உபமேயமாகிறது. வாக்யத்தில் எழுவாயாகவும் ஆகிறது. பின்னடிகளில் சொல்லப்படும் ராமபிரானுடைய தன்மை அந்த மேகத்தின் தன்மைக்கு உபமானமாகிறது. இப்போது பாட்டின் பொழிப்புரை பின்வருமாறு— 'பின் தொடர்ந்து தள்ளுகிற காற்றைப் பிரிந்து [கடலில் போய்ச் சேர்ந்த] கானமேகமானது [எப்படி இருக்கிறதென்றால்] அழகிய சிவந்த சக்கரத்தை உடையவனும் கொடிய அரக்கியான சூர்ப்பணகையின் மூக்கையும் பருத்த காதுகளையும் அன்று அறுத்தவனுமான ஸ்ரீராமபிரான் [அவதாரகார்யம் முடிந்த பின்பு] மறுபடியும் சென்று திருப்பாற்கடலிலே வந்து சேர்ந்தபடியை ஒத்திருக்கின்றது'' என்றபடி. அறுபத்தொன்றும் பாட்டில் ஆகாசத்தில் நக்ஷத்திரங்கள் சிதறியிருப்பதைப் பார்த்து அதை எம்பெருமானுடைய திரிவிக்கிரமாவதாரத்துடன் தொடர்பு படுத்திப் பேசியதுபோலே. இங்கும் மேகம் காற்றால் தள்ளப்பட்டு ஆகாயத்தில் திரிந்துகாற்றைப் பிரிந்தபின் கடலில் படிவதைப் பார்த்தவுடன் அதை ராமாவதாரத்துடன் தொடர்பு படுத்திப் பேசுகிறார். ''வன்திரைக்கண் வந்தணைந்த'' என்ற தொடரால் சொல்லப்படும் கடலில் படிவது மேகம், ராமாவதாரம் ஆகிய இரண்டிடங்களிலும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. பின்னே தள்ளும் காற்று மேகத்தை ஆகாயத்தில் ஸஞ்சரிக்க வைக்

---

தம்பிள்ளைக்கு; மேகத்தின் ஸ்வபாவம் போலேயிருக்கிறது பெருமாள்படி என்றால் மிறுக்குண்டு; பெருமாளுடைய

64 பரனு மவனாதல் பாவிப்ப ராகில்
உரனு லொருமூன்று போதும்— மரமேழன்
றெய்தானைப் புள்ளின்வாய் கீண்டானை யேஅமரர்
கைதான் தொழாவே கலந்து.

பதவுரை:— அன்று— முன்னொரு காலத்தில், ஏழ் மரம் எய்தானை— ஏழு மராமரங்களின்மேல் அம்பெய்தவனை, புள்ளின் வாய் கீண்டானை— கொக்காக வந்த அஸுரனுடைய வாயைக் கிழித்தவனை, அவன்—அப்பெருமான், பரன் ஆதல்— பரம்பொருளாயிருப்பதை, அமரர்— தேவர்கள், ஒரு மூன்று போதும்— முக்காலங்களிலும், உரனால் பாவிப்ப ராகில்— மனஸ்ஸாலே நினைப்பர்களாகில், கை தான்—(அவர்களுடைய) கைகள், கலந்து தொழவே— சேர்ந்து அவனை வணங்காவோ ?

---

பெருமான் ராவணவிஜயம்பண்ணி, திரியட்டும் திருப்பாற்கடலிலே போய்க் கண்வளர்ந்தாற்போலே யிருந்தது. 63.

---

கிறது. அதுபோல் தேவர்களின் பிரார்த்தனை ராமனை அவதரிக்கவைக்கிறது. அவர்கள் பிரார்த்தித்த கார்யம் முடிந்தவுடன் அவனும் காற்றைப்பிரிந்த மேகம் போலே திருப்பாற்கடலில் படிந்து விடுகிறான். மேகம் "சூல்கொண்டலாய்" அதாவது நீரை உட்கொண்டதாய் இருப்பது போலே—ராமனும் கருணை நீரை உட்கொண்டவனாய் இருக்கிறான். இவ்வண்ணமாக உபமான உபமேயங்கள் எல்லா வகையிலும் ஒத்திருப்பது காணத்தக்கது. இங்கு தூர்ப்பணகையின் அங்கபங்கம் பண்ணினதைச் சொன்னது ராவணவதம் வரையில் உள்ள ராக்ஷஸ வதம் அனைத்துக்கும் உபலக்ஷணம். 63

---

ஸ்வபாவம்போலே இருக்கிறது மேகத்தின்படி யென்றால் மிறுக்கில்லையென்று கருத்து. மேகமானது ராவணவதம் பண்ணித் திருப்பாற்கடலிலே அணைந்த வாய்மைத்து - ஸ்வபாவத்தையுடைத்து என்றுட்டிதம். 63.

அவ:— அறுபத்துநாலாம் பாட்டில் ; (பரன்) ஐ ''மநுஷ்யத்வே பரத்வத்தை அநுஸந்திக்கிறாராகில் பரமபதமென்று வேறே ஆச்ரயணீயஸ்தலம் வேணுமோ ?'' என்கிறது.

வ்யா:- (பரனித்யாதி) ஐ மநஸ்ஸாலே மூன்றுபோது ''அவன் பரன்'' என்று ஐ அநுஸந்திப்பராகில் ஆச்ரித விரோதி நிரஸநம் பண்ணினவனையே, அபிமாநிகளான தேவர்களுடையகையுங்கலந்து தொழுமிறே; அபிமாநத்தாலே தங்களோடு ஸஜாதீயனாக புத்தி பண்ணி அநர்த்தப் படுகிறார்களிறே. 64

---

64 அவ:— சென்ற பாட்டுகளில் அவதார ப்ரஸ்தாவம் நின்றபடியாலே இப்பாட்டில் ராமனாகவும் கண்ணனாகவும் அவதரித்து எம்பெருமான் பரத்துவத்தைக் காட்டின படியை அநுஸந்தித்தால் இந்திரன் முதலான தேவர்கள் பரமபதத்திற்குச் செல்ல முடியாத குறை தீர அவ்வவதாரங்களிலேயே அவனுக்கு ஆட்பட்டிருக்க வேண்டாவோ? என்கிறார்.

வ்யா:— (ஒரு மூன்று போதும் உரனால் அவன் பரனாதல் பாவிப்பராகில் மரம் ஏழு அன்றெய்தானைப் புள்ளின வாய் கீண்டானையே அமரர் கைதான் கலந்து தொழாவோ) என்று அன்வயம். முன்னொரு காலத்தில் தங்களுக்காக ராமனாக அவதரித்து ஏழுமராமரங்களின் மேல் அம்பெய்தது முதலிய அருஞ்செயல்களைச் செய்தவனாய், கண்ணனாக அவதரித்து கொக்காகவந்த பகாஸுரனுடைய வாயைக்கிழித்தது முதலிய பல அருஞ்செயல்களைச் செய்தவனான அப்பெருமானே பரம்பொருளாக இருப்பதைப் பிரமன் உருத்திரன் இந்திரன் முதலான தேவர்கள் முக்காலங்களிலும் தங்கள் நெஞ்சாலே நினைப்பார்களேயாகில் அவர்களுடைய கைகள் ஒன்றுசேர்ந்து அவனை வணங்காவோ? தங்களுடைய அபிமானத்தாலே 'தங்களிலே ஒருவன் என்று நினைத்து அப்படி வணங்காமல் அனர்த்தப்படுகிறார்களே'—என்று வருந்துகிறார் ஆழ்வார்.

65 கலந்து நலியும் கடுந்துயரை நெஞ்சே
மலங்க வடித்து மடிப்பான் — விலங்கல்போல்
தொன்மாலைக் கேசவனை நாரணனை மாதவனைச்
சொன்மாலை யெப்பொழுதும் சூட்டு.

பதவுரை:—நெஞ்சே—மனமே!, கலந்து நலியும் — நம்முடன் கூடியிருந்து துன்புறுத்துகிற, கடும் துயரை— கொடிய பாபத்தை, மலங்க அடித்து— நடுங்கும்படி புடைத்து மடிப்பான்— திருப்பி ஓட்டுவதற்கு, விலங்கல்போல் தொன் மாலை - மலைப்போல் பிளக்கவொண்ணாதவனாய், பழைய பெரியவனாய், கேசவனை — அழகிய திருக்குழல் கற்றைகளையுடையவனாய், மாதவனை — லக்ஷ்மீநாதனாயிருக்கும், நாரணனை — நாராயணனுக்கு, எப்பொழுதும்— எல்லாக்காலமும், சொல்மாலை - சொற்களாலான மாலையை, சூட்டு— சூட்டுவாயாக.

வ்யா:—அறுபத்தைந்தாம் பாட்டில்; (கலந்து) உடனே வந்து கலந்து நலியாநின்ற அநுப₄வவிநாஸ்யமான பாபத்தை மலங்கவடித்துத் திரியவிடுகைக்காக, அபே₄த்ய

65. அவ:— 'தே₃வர்கள் அவனிடத்தில் ஆட்செய்யாவிட்டால் போகட்டும். நீ விடாமல் அவனுக்கு ஆட்செய்வாயாக' என்று நெஞ்சைப்பார்த்துக் கூறுகிறார்.

வ்யா:—(நெஞ்சே! கலந்து நலியும் கடும் துயரை மலங்க அடித்து மடிப்பான்) 'மனமே' நம்முடன் கூடியிருந்து துன்புறுத்துகிற கொடிய பாபத்தை நாம் அநுப₄விக்க

அரு:—அறுபத்துநாலாம் பாட்டு. ௨ இங்கே பரத்வ மநுஸந்தா₄நத்தாலே பர்த்தாந்தேடிப் பரமபத₃த்துக்குப் போக வேண்டாவென்றபடி. ௩ உரனென்று உரஸ்ஸாய், அத்தாலே நெஞ்சைச் சொல்லுகிறது; ௦ "பாவிப்பர்களில்" என்கையாலே, அநுஸந்தி₄த்தால் தொழுவர்கள்; அநுஸந்தி₄யாமையாலே தொழார்களென்றபடி. 64

66 சூட்டாய நேமியான் தொல்லரக்க ளின்னுயிரை
மாட்டே துயரிழைத்த மாயவனை – ஈட்ட
வெறிகொண்ட தண்டுழாய் வேதியனை நெஞ்சே
அறிகண்டாய் சொன்னே னது.

---

னாய், அபரிச்சிந்நனாய், ப்ரசஸ்தகேசனாய், ஆஶ்ரிதவத்ஸலனாயிருந்த ஸ்ரீய:பதியை a பரிமளம் மாறாத மாலையை எப்போதும் சூட்டும்படி தன்னைத் தாழ்த்துத்தரும். • 65

---

வேண்டாதபடி நடுங்கும்படி புடைத்துத் திருப்பி ஓட்டுவதற்கு நீ செய்யவேண்டியது இதுவே' என்கிறார். அது தான் ஏதெனில் — (விலங்கல்போல் தொன்மாலைக் கேசவனை நாரணனை மாதவனைச் சொன்மாலை எப்பொழுதும் சூட்டு) மலைபோலே எவராலும் பிளப்பதற்கு அரியவனாய், மிகப்பழைய பெரியவனாகையாலே அளவிட முடியாதவனாய், அழகிய கேசங்களை உடையவனாய், ஆஶ்ரிதவாத்ஸல்யமாகிற குணத்தையுடைய நாராயணனாய், லக்ஷ்மீநாதனாய் இருக்கும் அப்பெருமானுக்கு வாடாததாய் மணம் மாறாததான சொற்களாலான மாலையை எப்பொழுதும் சூட்டுவாயாக. அவ்வளவு பெரியவனான அவனை அணுகி, மிகத்தாழ்ந்தவரான நாம் மாலை சூட்ட முடியுமோ? எனில்: பிராட்டியை மார்பில் கொண்ட மாதவனாகையாலும், அடியாரிடம் அன்பு கொண்ட நாராயணனாகையாலும் நாம் மாலை சூட்டும்படி அவன் தன்னைத் தாழ்த்துத்தருவான். நரஸமூஹத்தை இருப்பிடமாகக்கொண்டவனாகையாலே "நாராயணன் வாத்ஸல்ய குணமுடையவன்" என்று தேறுகிறது. 65

---

அரு:— அறுபத்தைந்தாம் பாட்டு. a ஸ்ரீஸூக்தியாகையாலே வற்றாத மாலையை வ்யாவர்த்தித்து (பரிமளம் மாறாத) என்கிறது. 65

---

• இவ்விடத்தில் வ்யாக்யான பங்க்திகள் சரியாயில்லை என்பர்.

பதவுரை :- நெஞ்சே — மனமே, சூடு ஆய நேமியான் — சூடத்தக்க ஆபரணமாயிருக்கும் திருவாழியையுடையவனாய், தொல் அரக்கன் — பழையவனான ராவணனுடைய, இன் உயிரை — இனிய உயிரை, மாட்டே — அருகே நின்று, துயர் இழைத்த — துன்பப்படுத்திய, மாயவனை - அற்புத சக்தியுடையவனாய், ஈட்ட — திரண்ட, வெறிகொண்ட — வாசனை மிகுந்த, தண் துழாய் — குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடையவனுடையவனாய், வேதியனை — வேதத்தால் சொல்லப்படுமவனான ப்ரஹ்மவானை, அறி கண்டாய் — அறிந்துகொள்வாயாக, அது சொன்னேன் - இவ்வரும்பொருளை (உனக்கு) உபதேசித்தேன்.

---

வ்யா:— அறுபத்தாரும் பாட்டில்; (சூட்டாய நேமியான்) விரோதி நிரஸநம் பண்ணுகையன்றிக்கே அழகுக்குமான திருவாழியையுடையவன். (தொல்லரக்கனித்யாதி) ராவணன் பேணிப்போந்த உயிரை அருகே ஸ்ம்ருதிவிஷ

---

66. அவ——எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யும்படி நெஞ்சை நியமித்தார் சென்ற பாட்டில். 'இப்படி கைங்கர்யம் செய்யலாம்படி விரோதிகளை நிரஸிப்பவனாய், இனியவனாய், வகுத்தவனாய் இருப்பவன் அவன்' என்று நெஞ்சுக்கு உபதேசிக்கிறார் இப்பாட்டில்.

வ்யா:—(சூட்டாய நேமியான்) விரோதிகளை அழிப்பதற்கு மாத்திரமல்லாமல் சூடத்தக்க ஆபரணமாகவும் இருக்கும் சக்கரத்தையுடையவன். (தொல்லரக்கன் இன்னுயிரை மாட்டே துயரிழைத்த மாயவனை) பழையவனான ராவணன் மிகவும் பேணிப் பாதுகாத்து வந்த உயிரை அவன் மறக்க முடியாதபடி அவனுக்கு அருகிலேயே நின்று துன்புறுத்தி அழித்த அற்புத சக்தியுடையவனை.

யமாய் நின்று முடித்த ஆம்சர்யபூ₄தனே. உ 41 ''स्मरन् राघव बाणानां विव्यथे राक्षसेश्वरः'' (ஸ்மரந் ராக₄வபா₃ணாநாம் விவ்யதே₂ ராக்ஷஸேஶ்வர:) ஆண்டபடையெல்லாம் பெருமாளென்று எழுத்து வெட்டின திருச்சரங்களை நினைத்துக்கிடந்து குலைக்கும்போது அமுக்குகைக்குடலானதத்தனே. (ஈட்ட வித்யாதி₃) பரிமளம் திரண்ட திருத்துழாயையுடையவனு மாய் வேத₃ங்களாலே ப்ரதிபாத்₃யனுமானவனே, நெஞ்சே! அறிகண்டாய் சொன்னேனுனக்கு அத்தை. விரோதி₄நிர

41 ப்₃ரஹ்மத₃ண்ட₃ப்ரகாஶாநாம் வித்₃யுத்ஸத்₃ருஶ வர்ச்சஸாம்।
ஸ்மரந் ராக₄வபா₃ணாநாம் விவ்யதே₂ ராக்ஷஸேஶ்வர:॥
[ரா—யு 60-3]

[ப்₃ரஹ்மத₃ண்ட₃த்தைப் போன்ற ஒளியுள்ளவையும், மின்னலைப் போன்ற தேஜஸ்ஸைப் பெற்றவையுமான ராமபா₃ணங்களை நினைத்து ராக்ஷஸாதி₄பதியான ராவணன் மிக வருந்தினான்.] என்கிறபடியே ராமநாமங்களைப் பொதிந்து கொண்ட வலிமை மிக்க திருச்சரங்களை நினைத்து நினைத்து உள்ளமும் உடலும் குலைந்துபோய், தான் கைக்கொண்ட அஸ்த்ர ஶஸ்த்ரங்களெல்லாம் தன்னைக்கீழே அமுக்கும் சுமையாம்படி துன்புற்றானன்றோ இராவணன். (ஈட்ட வெறிகொண்ட தண்டுழாய் வேதியனை) 'மணமெல்லாம் ஒருங்கே திரண்டதோ?' என்னும்படி மணம்மிக்க திருத்துழாயை உடையவனாய், வேதங்களிலே சொல்லப்படுபவனான எம்பெருமானை. (நெஞ்சே அறிகண்டாய் சொன்னேன் அது) நெஞ்சே! உனக்கு அதைச்சொன்னேன்; நீ அறிவாயாக. ராவணனை அழித்தவனாகையாலே விரோதி₄களை நிரஸிக்கும் இயல்புடை

அரு:— அறுபத்தாரும் பாட்டு. உ அப்படி ஸ்ம்ருதி விஷயமாய், து₃:க்க₂ப்பட்டானே? என்ன அருளிச்செய்கிறார் (ஸ்மரந்) இத்யாதி₃

67. அதுவோநன் றென்றங் கமருலகோ வேண்டில்
அதுவோ பொருளில்லை யன்றே — அதுவொழிந்து
மண்ணின்றாள் வேனெனிலும் கூடு(ம்) மடநெஞ்சே
கண்ணன்தாள் வாழ்த்துவதே கல்.

பதவுரை:— அங்கு அது நன்று என்று — பகவானைப் பரம பதத்தில் அநுபவிப்பது நல்லது என அறிந்து, அமர் உலகு வேண்டில் — நித்ய ஸூரிகளின் நாடாகிற வைகுண்டத்தை விரும்பினால், அது - அப்பரமபதமும், பொருள் இல்லை அன்றே- நமக்கு (அவன் கொடுக்கவொண்ணாத) வஸ்துவல்லஅன்றோ, அது ஒழிந்து — அப்பரமபதத்தை விரும்புவதை விட்டு, மண் நின்று ஆள்வேன் எனிலும்-இவ்வுலகிலிருந்து போகங்களை அனுபவிப்பேன் என்றாலும், கூடும் — (அதுவும் தமக்குக்) கிடைக்கும்; மட நெஞ்சே — எனக்கு பவ்யமான மனமே! கண்ணன் தாள் - (அவைகளை விட்டு) கண்ணனுடைய திருவடிகளை, வாழ்த்துவதே — மங்களாசாஸனம் செய்வதையே, கல் — கற்பாயாக.

---

ஸதம்பண்ணுவானுமாய், போக்யனுமாய், b வகுத்தவனுமானவனை அறி என்று சொன்னேன்; இது சிலர்க்குச் சொல்லுமதன்று; இத்தை புத்திபண்ணு. 66

---

யவனுய், துழாய் மாலை தரித்தவனுகையாலே இனிமையுடையவனுய், வேதத்தில் சொல்லப்பட்டவனுகையாலே வகுத்த ஸ்வாமியானவனை அவனையே ஆட்செய்யத்தக்கவனுக அறிவாயாக என்று சொன்னேன். இவ்வர்த்தம் எளிதில் சிலர்க்குக் கிடைப்பதன்று. இதை அறிவாயாக என்கிறார். 66

---

b வேதவேத்யனென்கையாலே வகுத்தவனென்கிறது. 66

வ்யா:— அறுபத்தேழாம்பாட்டில்; (அதுவித்யாதி₃) கண்கண்டதொழியப்போகை a அரிது. b இது c பொல்லாதென்று "பரமபத₃ம் வேணும்" என்றிருக்கில் அவ னுகப்பதாகையாலே அது தருகையில் அவனுக்குப் பொரு

---

67 அவ:—'இப்படி அவன் இனியவனாய் வகுத்த ஸ்வாமி யாய் இருக்கும்போது நெஞ்சாகிய நீ அவனிடத்தில் பரம பத₃த்தையோ மற்றொன்றையோ வேண்டாமல் அவன் திருவடி களுக்குப் பல்லாண்டு பாடுவாடாக' என்கிறார்.

வ்யா:— (அதுவோ நன்று என்று அங்கு அமருலகோ வேண்டில் அதுவோ பொருளில்லை யன்றே) 'பு₄க₃வானைப் பரம பத₃த்தில் அநுப₄விப்பது நல்லது' என அறிந்து, நித்ய ஸூரிகளின் நாடாகிய வைகுண்ட₂த்தை விரும்பினால், அப் பரமபத₃ம் அவன் நமக்குக்கொடுக்கவொண்ணாத பொருளல்ல. "அமரர் உலகு" என்பது "அமருலகு" என்று கிடக்கிறது. "வானவர் நாடு" [திருவாய் 3-9-9] என்கிறபடியே எம்பெரு மான் வைகுண்ட₂த்தை நித்யஸூரிகளுடையதாக ஆக்கி வைத்திருக்கிறானாகையாலே "அமருலகு" என்கிறார். (வேண் டில்) கண்காண அவனை இவ்வுலகிலேயே அனுப₄விக்கலாம் படியிருக்கும்போது "நின்புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்" [53ம் பாட்டு] என்கிறபடியே இதைவிட்டுப் பரமபதம் செல்ல வேண்டும் என்னும் விருப்பம் ஏற்படுவது அரிது; "இவ் வுலகில் அனுப₄வம் அநித்யமாகையாலே தாழ்ந்தது; ஆகை யாலே பரமபதம் வேண்டும்" என்றிருந்தாலும் என்று கருத்து. (அதுவோ பொருளில்லை) அப்பரமபத₃ம் அவன் நமக்குக் கொடுக்கவொண்ணாத பொருள் அல்ல. "நின்னடி யார்க்கு என் செய்வனென்றே இருத்தி நீ" [53] என்கிறபடியே அவன் அடியார்க்கு அளிப்பதற்கு உகந்திருக்கும் நிலமாகை யாலே அதைத் தருவதற்கு அவனுக்கு அருமையில்லை.

---

அரு — அறுபத்தேழாய்பாட்டு. a (அரிது) ஆசைப் பட் டுப்போகையரிது. காணாததத்தையாசைப்பட்டாலும் தரு மென்றபடி. b "அது" என்கையாலே, அதுக்கு ப்ரதிகோடி யாக, " இது" என்று ஸம்ஸாரம். c (பொல்லாதென்று பரம

68. கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்
புல்லென் றொழிந்தனகொல் ஏபாவம்—வெல்ல
நெடியான் நிறங்கரியா னுள்புகுந்து நீங்கான்
அடியேன துள்ளத் தகம்.

---

வில்லை. (அன்றேயித்யாதி) அதுவொழிய "பூமியையாள்வோம்" என்று நினைக்கில் அதுவும் தரும். (மடநெஞ்சே இத்யாதி) பவ்யமான நெஞ்சே! அவனுக்கோ அது தருகையில் குறையில்லை, நம்முடைய ஆபிமுக்யமரிது. (கண்ணன்) ஸுலபனானவனுடைய திருவடிகளைக் கற்றுகிலும் வாழ்த்தப்பார். 67

---

(அன்றே அது ஒழிந்து மண் நின்று ஆள்வேன் எனிலும் கூடும்) அப்படியல்லாமல் அப்பரமபதத்தை விட்டு இவ்வுலகை ஆள்வோம் என்று இவ்வுலக போகங்களை அநுபவிக்க நினைந்தாலும் அதையும் நமக்கு அவன் தருவானாகையாலே கைகூடும். (மடநெஞ்சே) போகமோக்ஷங்களைத் தருவதில் அவனுக்கு எந்த அருமையும் இல்லை. நமக்கு அதில ஈடுபாடு ஏற்படுவதுதான் அரிது. நீ பவ்யமான நெஞ்சாயிருக்கையாலே அவனிடம் ஈடுபாடு உனக்கு உள்ளது. 'ஆனால் நான் செய்யவேண்டியது என்ன' என்று நெஞ்சு கேட்க, கூறுகிறார்— (கண்ணன் தாள் வாழ்த்துவதே கல்) அடியார்க்கு எளியனான கண்ணனுடைய திருவடிகளை முயன்று கற்றுவது நீ அதற்குப் பல்லாண்டு பாடுவாயாக என்கிறார். அவன் உபயவிபூதியையும் தந்தாலும் நீ அதனை விட்டு அவனை வாழ்த்துவதையே கற்பாயாக என்று கருத்து. 67

---

பதம் வேணுமென்று இருக்கில்) என்கிறது.—அவன் உபயவிபூதியும் தந்தாலும் நீ அத்தைவிட்டு அவனை வாழ்த்துகையையே கல்லென்றபடி. 67

பதவுரை: — வெல்ல நெடியான்—மிகவும் பெரியவனும், நிறம் கரியான்—நிறத்தால் கரியவனுமான பகவான். உள் புகுந்து—எனக்குள்ளே நுழைந்து. அடியேனது உள்ளத்து அகம்—அடியேனுடைய ஹ்ருதயத்திலிருந்து. நீங்கான்—விட்டுப்போகிறானல்லன்; (ஆகையால்) கல்லும்—திருவேங்கடமலையும், கனைகடலும்—ஶப்தியாநிற்கும் திருப்பாற்கடலும், வைகுந்தம் வான் நாடும்—வைகுந்தம் என்கிற பரமபதமும்: புல் என்று ஒழிந்தனகொல்—புல்முளைத்துப்போய் விட்டனவோ? ஏ பாவம்—என்ன பாவம்!

---

அவ:— அறுபத்தெட்டாம் பாட்டில்; கல்லும் * கீழ் அவனுடைய திருவடிகளை வாழ்த்துகையொழியபோகமோக்ஷங்களைவேண்டாவென்னும்படி தம்முடைய a ஐக்யம் சொல்லுகிறது.

வ்யா:— b (கல்லுமித்யாதி) c திருமலையை "கல்" என்றும், திருவனந்தாழ்வானை "பாம்பு" என்றும், தன்னை

---

68 அவ:— சென்றபாட்டில் "அவன் திருவடிகளுக்குப் பல்லாண்டு பாடுவதொழிய போகமோக்ஷங்களும்வேண்டா" என்றார் ஆழ்வார். 'இத்தகைய ஆழ்வாரைத் தவிர, தனக்கு பரம், வ்யூஹம், அர்ச்சை முதலான ஸ்தலங்களும் வேண்டியதில்லை' என்று எம்பெருமான் இவரோடு ஒன்று கலந்தபடியைச் சொல்லுகிறது இப்பாட்டில்.

வ்யா:— (கல்லும்) "கல்" என்று திருமலையைக் கூறுகிறார். திருமலையைக் கல் என்னலாமோ? எனில்— திருமலையைக் "கல்" என்றும், திருவனந்தாழ்வானைத் "தம் பாம்பு"

---

அரு:— அறுபத்தெட்டாம் பாட்டு. a (ஐக்யம்) அவன் தம்மிடத்திலே வந்திருக்கையாலே அவனுக்கும் தமக்குமுண்டான ஐக்யம் இப்பாட்டிலே சொல்லுகிறதென்றபடி. b. c திருமலையைக் கல்லென்னலாமோவென்ன அருளிச்

---

* அவதாரிகையில் சிலபதங்கள் விடுபட்டிருக்கலாம்.

''மாணியாய் மண்ணளந்தாய்'' என்றும் சொல்லலாம்படி உறவுடைமையிருக்கிறபடி. திருமலையும் திருப்பாற்கடலும் பரமபதமுமென்கிற தேசங்கள் சில ∂ உ(அ)ள வாகவுமாம். அவற்றிலேதனக்குருசியுண்டாகவுமாம், தோற்றும்படி இருக்கிறிலன். என்னோடு கலந்தபின்பு- ○ ஸௌபரி ஐம்பது பெண்களோடே கலந்து போருகிறவிடத்தில் தன் மக்களைத் தனித்தனியே பிதா ''உனக்குக் குறையில்லையே'' என்று கேட்க, ''என்னுடன் பிறந்தாரை ஒருத்தரையுமறிய...

---

[நாச் -திரு 10—3] முதலானவிடங்களில் ''பாப்பு'' என்றும், ''மாணியாய் மண்ணளந்தாய்'' [ ] முதலான விடங்களில் அவனை ப்ரஹ்மசாரி என்றும் சொல்லும்படி யன்றோ அவனோடு உறவிருக்கிறது. (கல்லும் கனைகடலும் வைகுந்தவான் நாடும் புல் என்று ஒழிந்தன கொல்) திருமலை முதலான அர்ச்சா ஸ்தலங்களும், திருப்பாற்கடல் முதலான வ்யூஹஸ்தலங்களும், பரமபதம் முதலான திவ்யதேசங்களும் சில உண்டென்றோ, அவற்றில் தனக்கு ஈடுபாடு உண்டென்றோ தோற்றும்படி இருக்கின்றானில்லன். (புல்லென்று ஒழிந்தன கொல்)என் நெஞ்சில் அவன் கொள்ளும் ஈடுபாட்டைப் பார்த்தால் அவை புல் முளைத்துப்போய் விட்டனவோ என்று தோற்றுகிறது அல்லது அவை புல்லியவாய் அற்பமாய் ஆகிவிட்டனவோ என்றும் பொருள் கொள்ளலாம். 'ஆழ்வாருடைய இந்த மனப்பான்மை ஸௌபரியை மணந்த பெண்களுடைய மனப்பான்மையைப்போல உள்ளது' என்பர் பெரிய வாச்சான் பிள்ளை. ஸௌபரி என்னும் ரிஷி தன் யோகசக்தியாலே ஐம்பது சரீரம் எடுத்துக்கொண்டு, ஐம்பது அரசகுமாரிகளை மணந்து கொண்டு ஒவ்வொருத்தியுடனும் ஒவ்வொரு அரண்மனையிலே வாழ்ந்தாராம். ராஜ குமாரிகளின்

---

செய்கிறார் (திருமலை) இத்யாதி. ∂ (அளவாகவும்) • விசாலமாகவும் - ''புல்லென்று'' புல்லியதாக, குறையாக நினைத்து. ○ ஆனால் அந்த ஸ்தலங்களிலில்லையோ வென்ன அருளிச்

எப்போதுமென்னோடேயிருக்குமிதுவே வெறுப்பு; வேறொரு குறையில்லை" என்று சொன்னாற்போலே இவரும் "தம்முடைய எல்லா ஸ்தாநங்களையும் மறந்து என்னையல்லது அறிகிறிலர்" என்கிறார். (ஏபாவம்) f பாபத்தினுடைய ப்ராசுர்யத்தைச் சொல்லுகிறது. g விவக்ஷிதார்த்தமாக ஒரு ஶப்தத்தை ப்ரயோகியாமையாலே. h (வெல்லநெடியான்) i கடக்கநெடியான்; j இனி நெடியானில்லையென்னும்படி நெடியவன. (நிறங்கரியான்) குணங்களில்லையென்னிலும் விடவொண்ணாத வடிவழகையுடையவன். (உள்புகுந்தித்யாதி) அடியேனுடைய ஹ்ருதயத்தினுள்ளே நீங்குவானாயிருக்கிறவன். "புறப்படில் இவனைக் கிடையாது" என்னும்படி இரா நின்றான. 68

---

தந்தையான அரசன் ஒவ்வொருத்தியிடமும் சென்று 'உனக்கு ஒன்றும் குறையில்லையா' என்று விசாரித்தபோது ஒவ்வொருத்தியும் "என் உடன் பிறந்தார் எவரிடமும் செல்லாமல் என் கணவன் எப்போதும் என்னிடத்திலேயே இருக்கிறார் என்பதே குறை" என்றாளாம். அதுபோலே இவரும் "தம்முடைய எல்லா இருப்பிடங்களையும் மறந்து என்னையல்லதறியாதவனாக ஆனான்" என்கிறார். (ஏபாவம்) இப்படியானது பெரும் பாபத்தின் பலனாகவன்றோ தோற்றுகிறது என்றபடி. உண்மையில இங்கு பாபம் ஒன்றுமில்லாமையாலே வியப்பைத் தெரிவிக்கும் சொல்லாகக் கொள்ளலாம். (வெல்ல நெடியான்) நெடுமையாகிற பெருமையிலே பிறரால் வெல்ல முடியாதவன். அன்றிக்கே 'வெல்ல' என்றது "மிகவும்" என்னும் பொருளையுடையதாய் 'இனி இவனைக் காட்டிலும் நெடியவரில்லை என்கிறபடி நெடியவன்' என்றும் பொருள் கொள்ளலாம். இங்கு 'நெடுமை'யாவது குணப்பெருமை. (நிறம் கரியான்) குணங்கள் இல்லாவிடிலும் விடமுடியாத வடிவழகை உடையவன். (உள் புகுந்து நீங்கான் அடியேனது உள்ளத்தகம்) என் நெஞ்சுள்ளே புகுந்து அதைவிட்டு நீங்காதவனாய் இருக்கின்றான். 'நீங்கினால் இவன் உயிர் தரிக்கமாட்டான்' என்று தோற்றும்படி இருக்கிறான் என்று கருத்து. 68

---

செய்கிறார் (ஸௌபரி) இத்யாதி. f எல்லா ஸ்தலங்களையும் விட்டுவிட்டானே என்கிற வெறுப்பாலே. (பாபத்தினுடைய ப்ராசுர்யம்) என்கிறது. g விவக்ஷிதார்த்த வாக்யம் தெரியாது. h, i. j "வெல்ல" ஜயிக்க என்னுதல், மிகவுமென்னுதல். 68

69. அகம் சிவந்த கண்ணினராய் வல்வினைய ராவார்
முகஞ்சிதைவ ராமன்றே முக்கி—மிகுந்திருமால்
சீர்க்கடலை யுள்பொதிந்த சிந்தனையேன் தன்னை
ஆர்க்கடலாம் செவ்வே யடர்த்து.

பதவுரை:— வல் வினையராவார்—கொடிய பாபமானவர், அகம் சிவந்த கண்ணினராய்—உள்ளே சிவந்த கண்களை உடையவராய், முக்கி—வருந்தி, முகம் சிதைவராம் அன்றே-முகம்வாடிப்போமத்தனையன்றோ!, மிகும் திருமால் — மிகப்பெரியவனான லக்ஷ்மீநாதனுடைய, சீர் கடலை-கல்யாண குணக்கடலை, உள் பொதிந்த—உட்கொண்ட, சிந்தனை யேன் தன்னை — உள்ளத்தையுடைய என்னை, செவ்வே அடர்த்து – நன்றாக நெருக்கி, ஆர்க்கு அடலாம்—ஆர்தான் துன்புறுத்தமுடியும்?

---

அவ: — அறுபத்தொன்பதாம்பாட்டில்; (அகம்) இவன் பண்ணின ஐகாந்த்யத்தாலே 'ஶரீராரம்பத்துக்கடியான பாபமும் போயிற்று' என்கிறார்.

வ்யா: — (அகமித்யாதி) முதலியாராய் வர்த்தித்த நம் பாபத்தினார் கோபத்தினாலே சிவந்த கண்ணையுடையராய்,

---

69. அவ:—எம்பெருமான் தம்மிடத்தில் கொண்ட ஈடு பாட்டினாலே, 'எனக்கு மற்றொரு ஶரீரம் எடுப்பதற்குக் காரண மான பாபம் தொலைந்தது' என்கிறார்.

வ்யா:—(வல்வினையராவார் அகம் சிவந்த கண்ணினராய் முக்கி முகம் சிதைவராமன்றே) நம்மிடம் நாட்டாண்மை செய்துகொண்டு வாழ்ந்த வல்வினையார் இடத்தைவிட்டுப் போகவேண்டியிருக்கையாலே, கோபத்தாலே சிவந்த கண்ணை உடையவராய் "ஆட்சி புரிந்துவந்த நான் இப்படி வெளியேற

''செருக்கராய்த் திரிந்த நாம் இப்படி ப்படுவதோ?'' என்று முக்கி முகம் கீழ்ப்பட்டு, இழப்புண்டு சிதைந்தமுகமுமாய்த் திரியுமத்தனையிறே. (மிகுமித்யாதி,)(42) ''गुणानामाकरो महान्'' (குணநாமாகரோ மஹாந்) என்று அபரிச்சிந்நவிஷயத்தைப் a பரிச்சிந்நமாக்கினேன். b (சிந்தனையித்யாதி,) c இனி என்னைப் பரிச்சிந்நர்க்குப் புகுந்து நேரே நலியப்போமோ? 69

---

வேண்டி வந்ததே'' என்று வருந்தித் தலைகவிழ்ந்து பெருந் துன்பத்துடன் சிதைந்த முகமுடையவராய்த் திரிகின்றானன்றோ! (மிகும் திருமால் சீர்க்கடலை உள்பொதிந்த சிந்தனையேன் தனனை ஆர்க்கடலாம் செவ்வே அடர்த்து)

42. தாதூநாமிவ சைலேந்த்ரோ குணநாமாகரோ மஹாந் [ரா-கி (15-21) தாராவாக்யம்]

[ஒரு சிறந்த மலை தாதுக்களுக்கெல்லாம் இருப்பிடமாயுள்ளது போல், ஸ்ரீராமபிரானும் குணங்களுக்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவர்.] என்கிறபடியே அனைவரிலும் பெரியவனான எம்பெருமானுடைய கல்யாண குணக்கடலை உட்கொண்ட என்னை நன்றாக நெருக்கி யார்தான் துன்புறுத்த முடியும்? (சீர்க்கடலை உள்பொதிந்த) அளவிட முடியாத குணக்கடலை என் நெஞ்சுக்குள்ளே அடக்கினேன் என்கிறார். (சிந்தனையேன் தன்னை ஆர்க்கு அடலாம் செவ்வே அடர்த்து, அளவிறந்ததை உள்ளடக்கிய என்னை இனி சிற்றளவுடையவர்களால உட்புகுந்து நேரே துன்புறுத்த முடியுமோ? ''முக்கி'' என்றது வாய்விட்டுச் சொல்லவும் முடியாமல் வெறுமனே இருக்கவும் மாட்டாமல் வருந்தி முனகி என்றபடி. பாபத்தை 'வல்வினையார்' என்று உயர்திணையாகக் கூறுவதும், அதற்குக் கண்ணும் முகமும் உள்ளதுபோலக் கூறுவதும் ஆழ்வார் பாபத்தை வெற்றிகொண்ட மகிழ்ச்சியினாலான கற்பனைகள் என்று அறிக. 69

---

அரு:— அறுபத்தொன்பதாம் பாட்டு. a ''உள் பொதிந்த'' என்கையாலே (பரிச்சிந்நமாக்கினேன்) என்கிறது. b, c ''செவ்வேயடர்த்து ஆர்க்கடலாம்?'' — என்னை ஒருத்தர்க்கும் அடர்க்கப்போகாதென்றபடி. 69

70. அடர்பொன் முடியானை யாயிரம் பேரானைச்
சுடர்கொள் சுடராழி யானை — இடர்கடியும்
மாதா பிதுவாக வைத்தே னெனதுள்ளே
யாதாகில் யாதே யினி.

பதவுரை: — அடர்பொன் முடியானை — (எதிரிகளைக்கண்ட மாத்திரத்திலேயே) அழியச் செய்வதாய், அழகியதான திரு முடியையுடையவனாய், ஆயிரம் பேரானை — ஆயிரம் திரு நாமங்களையுடையவனாய், சுடர் கொள் சுடர் ஆழியானை — தேஜ:பதா₃ர்த்த₂ங்கள் எல்லாவற்றையும் தன்னுட்கொண் டிருப்பதுபோன்ற தேஜஸ்ஸையுடைய திருவாழியையுடை யவனான ஸர்வேஶ்வரனை, இடர் கடியும்-(என்) துன்பத்தைப் போக்கும், மாதா பிதுவாக — தாய் தந்தையராக, எனது உள்ளே வைத்தேன் — என் மனஸ்ஸில் இருத்தினேன், இனி — இனிமேல், யாது ஆகில் யாது — எது வந்தால்தான் என்ன?

---

வ்யா: — எழுபதாம் பாட்டில்; ௧(அடர்பொன் முடியானை) து₃ர்ஶநீயமாய் ஆதி₄ராஜ்யஸூசகமான திருவபி₄ஷேகத்தை யுடையவனை, இவ்வழகுக்கு வாசகமான அநேகந்திரு நாமங்களையுடையவனை. (சுடர்கொள் சுடராழியானை)

---

70. அவ:—பாபங்களை வெற்றிகொண்டதைப் பேசி னார் சென்ற பாட்டில். இப்பாட்டில் 'எம்பெருமானைத் தாயாக வும், தந்தையாகவும் கொண்டபின்பு பாபத்தை அனுப₄வித் தாலும் அதனால் என்ன வந்துவிடும்?' என்கிறார்.

வ்யா:—(அடர் பொன்முடியானை) எதிரிகளைக் கண்ட மாத்திரத்தில் அழியச் செய்வதாய், அழகியதாய், இக்கார ணங்களால் இவனே ஸர்வலோக சக்ரவர்த்தி என்று காட்டுவதான கிரீடத்தை உடையவனை. (ஆயிரம்பேரானை) இந்த அழகு மேன்மை முதலானவற்றைச் சொல்லும் பல திரு நாமங்களை உடையவனை. (சுடர்கொள் சுடராழியானை) ஒளி

---

அரு:— எழுபதாம் பாட்டு. ௧ (அடர் பொன்முடி) அடர்-

விரோதி₄நிரஸநத்துக்கன்றிக்கே அழகுக்குமான திருவாழி யையுடையவனை, (இடரித்யாதி₃) b சரீரத்தைப் பூண் கட்டி இடரை விளைக்கும் மாதாபிதாக்களிறே அல்லாதார். c இவன் ஶரீரபரிக்₃ரஹம்பண்ணுகைக்கு நோன்புநோற்கு மவர்களிறே அவர்கள். d (யாதாகில் யாதேயினி) e இனி பாபந்தன்னை அநுப₄விக்கிலெனக்கு வந்ததென்? 70

---

யுடைய சோதிகளை எல்லாம் தன்னுள் கொண்டிருக்கும் சோதியை உடைய சக்கரத்தை உடைய ஸர்வேஶ்வரனை. "சுடர்கொள் சுடராழி" என்பதற்கு "மற்ற சோதிகளை வெற்றி கொள்ளும் சுடராழி" என்றும் பொருள்கொள்ளலாம். இந்த விசேஷணத்தால் திருவாழியாழ்வான் எதிரிகளை அழிப்பதோ டல்லாமல் அழகுக்கிட்ட ஆப₄ரணமாகவும் இருக்கிறான் என்று உணர்த்தப்படுகிறது. (இடர்கடியும் மாதா பிதுவாக வைத் தேன் எனதுள்ளே) என் துன்பத்தைப் போக்கும் தாய் தந்தையராக என் மனத்தில் இருத்தினேன். உலகிலுள்ள தாய் தந்தையர் இவனுக்கு ஶரீரம் உண்டாவதற்கு நோன்பு நோற்று, ஶரீரத்தைப் பூண்கட்டிவளர்த்து, இவனுக்குத் துன் பத்தை விளைப்பவர்கள். எம்பெருமான் அத்துன்பத்தைப் போக்குகிறவன் என்பது தோற்ற "இடர்கடியும்" என்று விசேஷணமிடுகிறார். (யாதாகில் யாதே இனி) இனி, பாபத்தை நான் அநுபவித்தால் என்ன? அநுபவிக்காம லிருந்தால் என்ன? இரணியன் பல துன்பங்களை அநுப₄ விக்கும்படி செய்தபோதிலும் ப்ரஹ்லாத₃ன் அதைப் பொருட் படுத்தாது இருந்ததுபோலே பாபாநுப₄வம் ஏற்பட்டாலும் நான் பொருட்படுத்தமாட்டேன் என்று கருத்து. 70

---

எல்லாரையுமடர்க்கிற முடியென்றபடி. b c பூண்கட்டுகைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (இவன் ஶரீர) இத்யாதி₃. d, e "யாதாகில் யாதே"- பாபத்தையநுப₄விக் கிலென்? அநுப₄வியாதொழியிலென்? பாபநிமித்தமாக ப₄யமில்லையென்றபடி. 70

71. இனிநின்று நின்பெருமை யானுரைப்ப தென்னே
தனிநின்ற சார்விலா மூர்த்தி—பனிநீர்
அகத்துலவு செஞ்சடையா னுகத்தான் நான்கு
முகத்தான் நின் னுந்தி முதல்.

பதவுரை — தனி நின்ற—(மஹாப்ரளயகாலத்தில்) ஒப்பற்ற காரணமாய் நின்றவனாய், சார்வு இலா—தனக்கொரு ஆச்ரயமற்றவனான, மூர்த்தி—எம்பெருமானே!, பனிநீர் அகத்து உலவு—குளிர்ந்த கங்கை உள்ளே ஸஞ்சரிக்கும்படியான, செம் சடையான் சிவந்த சடையையுடைய சிவன், ஆகத்தான்—உன் திருமேனியில் ஒரு மூலையில் வஸிக்கிருன்; நான்கு முகத்தான்—சதுர்முகனான ப்₃ரஹ்மா, நின் உந்தி முதல்—உன்னுடைய திருநாபியைக் காரணமாக உடையவன்; இனி—இப்படியிருக்கும்போது, யான் நின்று—நானிருந்து, நின் பெருமை—உன்னுடைய பெருமையை, உரைப்பது என்னே—எப்படிச்சொல்லுவது?

---

அவ:—எழுபத்தோராம் பாட்டில். (இனி) "ப்₃ரஹ்மருத்₃ராதி₃களுக்குட்பட்ட உடம்புகொடுத்தான்" என்கிற நீர்மையைச் சொல்லிற்றாகவுமாம்; 'அவர்களுக்கு ஸத்தாஹேதுவானன்" என்கிற ஐஶ்வர்யத்தைச் சொல்லுகிறதென்றுமாம்.

---

71. அவ:—தன்னால் தாய் தந்தையாகக்கொள்ளப்பட்டவன் பிரமன் உருத்திரன் முதலான உலகனைத்துக்கும் காரண பூ₄தனாய் இருப்பவன் என்று இப்பாட்டில் எம்பெருமானுடைய பரத்வத்தைச் சொல்லுகிறார்—பிரமன் உருத்திரன் முதலானவர்களுக்கும் தன் திருமேனியில் உடம்பு கொடுத்தவன் என்று நீர்மையைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

வ்யா:— (இனியித்யாதி) உன் ஐஶ்வர்யத்தை நான் தானே சொல்லுவதுண்டோ? என்னவுமாம்; உன்னுடைய நீர்மையை நான் சொல்லுவதுண்டோ? என்னவுமாம். a (தனியித்யாதி) கார்யஜாதமெல்லாமழிந்து காரணாவஸ்தமாய், நாமரூபவிபாகாநர்ஹமாய், "தான்" என்கிற சொல்லிலேயடங்கித் தனக்கு வேறொரு b அபாஶ்ரயமின்றிக்கே நின்றவனே! (43) 'पतिं विश्वस्य' (பதிம் விஶ்வஸ்ய) என்று, (43) "आत्मेश्वरं" (ஆத்மேஶ்வரம்) என்னுமாபோலே.

---

வ்யா:—(இனி நின்று நின் பெருமை யான் உரைப்பது என்னே) 'உன் மேன்மையை நான் இருந்து சொல்லவேண்டுவது உண்டோ?' என்றும் பொருள்கொள்ளலாம். 'உன் நீர்மையை நான் இருந்து சொல்லவேண்டுவதுண்டோ?' என்றும் பொருள்கொள்ளலாம். (தனி நின்ற சார்விலா மூர்த்தி) மஹாப்ரளயகாலத்தில் காரியப் பொருள்களெல்லாம் அழிந்து காரண நிலையில் இருப்பதாய், நாமரூபப் பிரிவுக்குத் தகுதியற்றதாய் தான் என்ற சொல்லுக்குள்ளே அடங்கியிருக்கையாலே, தான் தனியே நிற்பவனாய் தனக்கு வேறொரு ஆதாரமில்லாதவனான எம்பெருமானே! 'சார்வு' என்பது தான் சார்ந்திருக்கும் இடத்தைக் குறிப்பதாகையால் தனக்கு ஆதாரமாயிருப்பதைக் குறிக்கும்.

43. பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் [தை-நா 11]

[உலகிற்குப் பதியாகவும், தனக்குத்தானே ஈஶ்வரனாகவும், நித்யனாகவும், மங்களகரனாகவும், அடியவர்களை நழுவவிடாதவனாயுமிருப்பவன் (நாராயணனே)] என்று வேதவாக்யமும் "இவன் அனைவருக்கும் பதி" என்றும், "இவனுக்கு ஈஶ்வரன் இல்லை" என்றும் முழங்கிற்றன்றோ. அன்றிக்கே "சார்வு" என்பதற்கு "ஒப்பு" என்றும் பொருள் கொள்ளலாம்; "சார்விலா மூர்த்தி" என்று "தனக்கு ஒப்பில்லாதவன்" என்கிறது.

---

அரு:—எழுபத்தோராம் பாட்டு. a. b. c 'சார்வு' ஆஶ்ரயமாதல், ஒப்பாதல். 71

(44) ''रुद्रं समाश्रिता देवा रुद्रो ब्रह्माणमाश्रितः'' (ருத்₃ரம் ஸமா ஶ்ரிதா தே₃வா ருத்₃ரோ ப்₃ரஹ்மாணமாஶ்ரித:)என்றித்யாதிப் படியே தனக்குச் சேர்த்துச் சொல்லலாம் ஒப்பையுடைய னல்லனென்றுமாம். (பனிநீரித்யாதி₃) க₃ங்கை₃யை ஜடை யிலே த₄ரித்தானாயிருக்கிற ருத்₃ரன் ''வலத்தனன்'' என் னுமாபோலே உன்னுடைய திருமேனியில் ஏகதே₃ஶத்தி லானான். (நான்கித்யாதி₃) சதுர்முக₂ன் உன்னுடைய திரு நாபி₄யைக்காரணமாகவுடையவன். இனி நின்பெருமை யானுரைப்ப தென்னே? 71

---

44. ருத்₃ரம் ஸமாஶ்ரிதா தே₃வா ருத்₃ரோ ப்₃ரஹ்மாண மாஶ்ரித: |

ப்₃ரஹ்மா மாமாஶ்ரிதோ ராஜந் நாஹம் கஞ்சிது₃பாஶ்ரித:
[பார-ஆச் 118—37]

[தேவர்கள் ருத்ரனை அண்டியிருக்கின்றனர்; ருத்ரன் (தன் தகப்பனரான) பிரமனை ஆச்ரயித்திருக்கிறான். பிரமனோ வெனில் (அவனைப்பிறப்பித்த) என்னை அடைந்திருக்கிறான். அரசனே! நான் ஒருவனையும் பற்றியிருக்கவில்லை.] என்கிற படியே அனைவர்க்கும் தலைவனாயிருக்கையாலே இவனுக்கு ஒப்பாகச் சொல்லக்கூடியவர் எவரும் இல்லையன்றோ. இவனையொத்தவர்களாகச் சிலரால் நினைக்கப்படும் மற்ற இரு மூர்த்திகளும் இவனுக்குள் அடங்கியவர்களே என்கிறார் மேலே—(பனி நீர் அகத்துலவு செஞ்சடையான்) குளிர்ந்த கங்கையை உள்ளே கொண்ட சிவந்த சடையைத் தரித்துக் கொண்ட உருத்திரன், ''வலத்தனன் திரிபுரம் எரித்தவன்'' [திருவாய் 1—3—9] என்கிறபடியே உன்னுடைய திருமேனி யில் ஒரு மூலையிலே ஒடுங்கினான். (நான்கு முகத்தான் நின் உந்தி முதல்) நான்கு முகங்களையுடைய பிரமன் உன்னு டைய திருநாபியைக் காரணமாக உடையவன். இப்படிப் பட்ட உன்னுடைய மேன்மையை அல்லது நீர்மையை நான் எப்படி உரைக்க முடியும்? என்று கீழோடு கூட்டிப் பொருள் கொள்ளவும். 'உந்தி முதல்' என்பது அன்மொழித் தொகையாய், 'உந்தியை முதலாக உடையவன்' என்று பொருள். 71

72. முதலாம் திருவுருவம் மூன்றென்பர் ஒன்றே
முதலாகும் மூன்றுக்கு மென்பர் — முதல்வா
நிகரிலகு காருருவா நின்னகத்த தன்றே
புகரிலகு தாமரையின் பூ.

பதவுரை:— திரு உருவம் மூன்று — அழகிய உருவத்தை உடைய (பிரமன், விஷ்ணு, ருத்ரன் ஆகிய) மூவரும், முதலாம் என்பர் — ஜகத் காரணர்கள் ஆவர் என்று (சிலர்) சொல்லுவர்; மூன்றுக்கும் - இம் மூன்று மூர்த்திகளுக்கும், ஒன்றே முதலாகும் என்பர் —(மேலான) ஒரு வஸ்துவே காரணம் என்று (மற்றும் சிலர்) சொல்லுவர்; முதல்வா — ஜகத்₃காரணபூதனே!, கார் நிகர் இலகு உருவா — மேகத்தை யொத்து விளங்கும் உருவத்தை உடையவனே!. புகர் இலகு — (ஜகத்காரணமாயிருக்கையாலுண்டான) ஒளியினால் பிரகாசிக்கிற தாமரையின் பூ — தாமரைப்பூ நின் அகத்தது அன்றே — உன்னுடைய திருமேனியில் உண்டானதன்றோ?

---

அவ:— எழுபத்திரண்டாம் பாட்டில்; (முதலாய்) கீழிற் பாட்டிலே ''எல்லார்க்குமாஶ்ரயணீயன்'' என்று சொல்லிற்று இதிலே, வேறு ஸமாஶ்ரயணீயராயிருப்பாரும் சிலருமுண்டாயிருக்க ''இவனே ஆஶ்ரயணீயன்'' என்று சொல்லும்படி எங்ஙனேயென்ன, அல்லாதாருடைய மதங்களை உபஸ்த்₂ாபித்து தூ₃ஷித்து ஸ்வஸித்₃த₄ாந்தத்தை அருளிச்செய்கிறார்.

---

72 அவ:— சென்றபாட்டில் எம்பெருமான் ஒருவனே பிரமன், உருத்திரன் முதலான அனைவராலும் ஆஶ்ரயிக்கத் தக்கவன் என்று சொன்னார். ''பிரமனையும் உருத்திரனையும் ஆஶ்ரயிக்கத்தக்கவர்களாகச் சிலர் சொல்லும் போது 'எம்பெருமான் ஒருவனே ஆஶ்ரயிக்கத்தக்க பரம்பொருள்' என்று நீர் கூறுவது எப்படிப்பொருந்தும்?'' என்னும் கேள்வியெழ, ப₄க₃வத் பரத்வத்திற்கு முரணாகப் பேசும் த்ரிமூர்த்தி ஸாம்யவாதி₃கள் உத்தீர்ணவாதி₃கள் ஆகியவர்களுடைய மதங்களை யெடுத்து அவை பொருந்ாதவை என்று காட்டி 'எம்பெருமான் ஒருவனே பரம்பொருள்' என்னும் தமது நிர்ணயத்தை அருளிச்செய்கிறார் இப்பாட்டில்.

வ்யா:—(முதலித்யாதி₂) ஜக₃த்துக்குக் காரணபூ₄தர் மூவரென்பர்கள். (ஒன்றித்யாதி₂) மூவர்க்குங் காரணபூ₄தன் வேறேயொருவனென்பர்கள். "என்பர்" என்கிற இத்தால் ஸ்வஸித்₃தா₄ந்தமன்றென்கிறது. (முதல்வா) இதுக்கெல்லாம் காரணபூ₄தனே! (நிகரிலகு காருருவா) மேக₄

---

வ்யா:—(முதலாம் திருஉருவம் மூன்று என்பர்) இவ்வுலகிற்குக் காரணமாயிருப்பவர்கள் பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவருமே என்பர் சிலர். மும்மூர்த்திகளும் ஸமமான காரணம் என்று சொல்லும் இவர்கள் 'த்ரிமூர்த்தி ஸாம்யவாதி₃கள்' எனப்படுவர். (ஒன்றே முதலாகும் மூன்றுக்கும் என்பர்) இந்த மும்மூர்த்திகளுக்கும் காரணமாயிருக்கும் பரம்பொருள் இவற்றைக்காட்டிலும் மேம்பட்ட மற்றொன்று என்பர் சிலர். இப்படி மூன்றுக்கும் மேம்பட்ட நான்காவது ஒன்றைப் பரம்பொருளாகக் கூறுமிவர்கள் "திரிமூர்த்யுத்தீர்ணவாதி₃கள்" எனப்படுவர். 'என்பர்' என்று இரண்டு இடங்களிலும் கூறுகையாலே, இவ்விரண்டு வாத₃ங்களும் தம் ஸித்₃தா₄ந்தம் அன்று என்று காட்டுகிறார். இந்த இரண்டு வாத₃ங்களை இங்கு எடுத்தது 'மும்மூர்த்திகளும் ஒன்றே' என்று கூறும் திரிமூர்த்யைக்ய வாத₃த்திற்கும் உபலக்ஷணம். இந்த வாத₃ங்கள் பொருந்தமாட்டா என்று மேலே காட்டுகிறார்—(முதல்வா) பிரமன் உருத்திரன் முதலான உலகனைத்துக்கும் காரணமாயிருப்பவனே! (நிகரிலகு காருருவா) "கார் நிகர் இலகு உருவா" என்று கூட்டிப் பொருள்கொள்ள வேண்டும். 'மேக₄த்தை ஒத்துவிளங்கும் திருமேனியை உடையவனே' என்று பொருள். கண்டவர் களைப்பை ஆற்றும் நீல நிறமுடையதாய், கைம்மாறு வேண்டாமல் மழை பொழிவதான மேக₄ம் போலே நிறமுடையவனாய் அடியார்க்கு நிர்ஹேதுகமாக அருள்பவனாகையாலே இவனே பரம்பொருளாயிருக்க முடியும் என்று உணர்த்துகிறார். "ஒருருவம் பொன்னுருவம், ஒன்று செந்தீ, ஒன்று மாகடலுருவம் ஒத்துநின்ற மூவுருவுங் கண்டபோது ஒன்று ஆஞ்சோதி மூகிலுருவம்

மென்று சொல்லலாம்படி வடிவையுடையவனே! (தின்னகத்தது இத்யாதி₃) ப்₃ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்த₂ாநமான தாமரைப் பூ உன் திருநாபி₄யதன்றே? இத்தால், ப்₃ரஹ்ம ருத்₃ராதி₃கள் இவனுக்கு ஸமரல்லரென்னுமிடமும், அவர்களிலேயொருவன் ஜக₃த்துக்குக் காரணமன்று என்னுமிடமும், a மூவரையுமொழிய வேறொன்று ஜக₃த்துக்குக் காரணமன்றென்னுமிடமும் சொல்லுகிறது. b (45) ''सृष्टिस्थित्यन्तकरणीम्''

---

எம்மடிகளுருவந்தானே'' [திருநெடுந்தாண்டகம் 2] என்று திருமங்கையாழ்வாரும் திருநெடுந்தாண்டகத்தில் பரதத்வ நிர்ணயம் செய்தாரன்றோ. இனி மற்ற இரு மூர்த்திகளுக்கும் இவனே காரணபூ₄தன் என்று தெளிவாகக் காட்டும் அவ்யானத்தைக் கூறுகிறார் மேலே—(நின்னகத்ததன்றே புகசிலகு தாமரையின் பூ) பிரமனுக்கும் உற்பத்தி ஸ்த₂ானம் என்னும் பெருமையை உடைய தாமரைப்பூ உன் திருநாபி₄யில் இருப்பதன்றோ. இதனால் இவன் திருநாபீ₄கமலத்தில் எம்பெருமானால் படைக்கப்பட்ட பிரமனும், அந்தப் பிரமனால் படைக்கப்பட்ட உருத்திரனும் இவனுக்கு ஸமமானவர் அல்லர் என்பதும், இப்படி மும்மூர்த்திகளிலும் தலைமைபெற்ற எம்பெருமானே உலகிற்குக் காரணம் என்பதும், மூவரிலும் வேறுபட்டதொன்று தாமரையில் பிரமனைப் படைத்ததாக வசனம் இல்லாமையாலே இம்மூவரைக்காட்டிலும் மேற்பட்டதொன்று உலகிற்குக் காரணமன்று என்பதும் நிர்ணயிக்கப்பட்டதாகிறது. உந்தித்தாமரையில் படைக்கப்பட்ட பிரமனும், அவனால் படைக்கப்பட்ட உருத்திரனும், உந்தித் தாமரையில் பிரமனைப் படைத்த திருமாலும் ஒன்றாயிருக்க முடியாதாகையாலே திரிமூர்த்யைக்ய வாத₃மும் பொருந்தாதென்று இதனால் காட்டப்பட்டதாயிற்று.

---

அரு:— எழுபத்திரண்டாம் பாட்டு a (மூவரையுமொழிய) மூவரிலும் ப்ரத₄ாநராயிருக்கிற விஷ்ணுவையுமொழிய. b மூவரிலுமவனே காரணமென்னுமதுக்கு ப்ர

(ஸ்ருஷ்ட்டிஸ்தி2த்யந்தகரணீம்) இத்யாதி3 என்னும்படியே. c (46) "ब्रह्मविष्णुरुद्रेन्द्रास्ते सर्वे संप्रसूयन्ते" (ப்3ரஹ்மவிஷ்ணு ருத்3ரேந்த்3ராஸ்தே ஸர்வே ஸம்ப்ரஸூயந்தே) என்கிறவிது

---

45. ஸ்ருஷ்டிஸ்தி2த்யந்தகரணீம் ப்3ரஹ்மவிஷ்ணு
ஶிவாத்மிகாம் |
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப4க3வாநேக ஏவ ஜநார்த3ந: ||
*[வி-பு 1-2-66]*

*[படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களைச் செய்யும் பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் பெயர்களை ஜநார்த்தனனெனப்படும் அந்த பகவான் அடைகிறான்]* என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்திலும் ஜனார்த்த3னனே மற்ற இரு மூர்த்திகளிலும் அந்தர்யாமியாயிருந்து படைப்புத் தொழிலையும் அழிப்புத் தொழிலையும் செய்கிறான் என்று காட்டப் பட்டதன்றோ.

46. ப்3ரஹ்ம விஷ்ணுருத்3ரேந்த்3ராஸ் தே ஸர்வே
ஸம்ப்ரஸூயந்தே *[அதர்வசிகை 1-2-15]*

*[பிரமன், விஷ்ணு, ருத்ரன், இந்திரன் ஆகிய இவர்களெல்லாரும் பிறக்கிறார்கள்]* என்னும் அத2ர்வஶிகா2 வாக்யம் மும்மூர்த்திகளுக்கும் பிறப்பைக் கூறுகிறதே? எனில்: இது மற்ற வேத3வாக்யங்களில் பிரஸித்3த4மான பிறப்பை அநுவாத3ம் செய்யும் வாக்யமேயாகையாலே, மற்ற வேத3வாக்யங்களைப் பார்க்கும்போது விஷ்ணுவுக்கு அவதார ரூபமான பிறப்பும், மற்ற இருவருக்கும் கர்மம் காரணமாக உண்டாகும் பிறப்புமே இதிலிருந்து தேறும். இவ்விஷயம் பற்றிய விரிவான விசாரத்தை விஷ்ணுசித்த விஜயத்தில் முதல் பா4க3த்தின் இறுதியில் காணலாம்.

---

மாணமருளிச் செய்கிறார் (ஸ்ருஷ்ட்டிஸ்தி2த்யந்தகரணீம்) இத்யாதி3. c விஷ்ணுவுக்கும் பிறப்புண்டாகச் சொல்லாநிற்க அவன் காரணமானபடி எப்படி? என்ன அருளிச்

அவதார விஷயம். d (47) "मध्येविरिञ्चगिरिशं प्रथमावतार:" (மத்₄யேவிரிஞ்சகி₃ரிஶம் ப்ரத₂மாவதார:) என்னும்படியே. 72

---

47. மத்₄யே விரிஞ்சகி₃ரிஶம் ப்ரத₂மாவதார:
தத்ஸாம்யத: ஸ்த₂க₃யிதும் தவ சேத் ஸ்வரூபம்।
கிம் தே பரத்வ பிஶுநைரிஹ ரங்க₃தா₄ம
ஸத்வப்ரவர்த்தநக்ருபாபரிபாலநாத்₃யை: ॥ [ர-ஸ்த 2-51

[ஸ்ரீரங்க₃நாத₂ரே! பிரமருத்திரர்களின் நடுவில் உட்க்கேற்பட்ட முதலவதாரமும் அவ்விருவருடன் ஒன்றுயிருப்பதைக் காட்டி உம்முடைய ஸ்வரூபத்தை மறைத்துக்கொள்வதற்காக வாகில், ஸத்வகு₃ணத்தை நிர்வஹிப்பது, கிருபையாலே (பிரமன், ருத்₃ரன் முதலியவர்களை) ரக்ஷிப்பது முதலான மேன்மையைக் காட்டும் காரியங்களால் உமக்கு என்ன பிரயோஜனம்?] என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டரும் இந்த விஷயத்தைக் காட்டினூர். இந்தப் பாட்டை

"த்ரயோ தே₃வாஸ்துல்யா: த்ரிதயமித₃மத்₃வைதம் அதி₄கம்
த்ரிகாத₃ஸ்மாத் தத்த்வம் பரமிதி விதர்க்காந்
விக₄டயந்।
விபே₄ர் நாபீ₄பத்₃மோ விதி₄ஶிவநிதா₃நம் ப₄க₃வத:
தத₃ந்யத் ப்₄ரூப₄ங்கீ₃பரவதி₃தி ஸித்₃தா₄ந்தயதி ந: ॥
[ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம் பூர்வஶதகம் 116]

[(1) மும்மூர்த்திகளும் ஸமமானவரே (2) மும்மூர்த்திகளும் ஒன்றே (3) மும்மூர்த்திகளைக்காட்டிலும் மேம்பட்ட மற்றொன்று பரம்பொருள் என்னும் வாத₃ங்களை அழிப்பதாய், பிரமனுக்கும் உருத்திரனுக்கும் முதற் கிழங்காயிருக்கும் எம்பெருமானுடைய திருநாபிகமலமானது "உலகனைத்தும் அவனுடைய புருவ நெறிப்புக்கு வசப்பட்டது" என்று நமக்கு முடிவுகட்டித் தருகிறது] என்று பட்டர் விவரித்தருளியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. 72

---

செய்கிருர் (ப்₃ரஹ்மவிஷ்ணு) இத்யாதி₃. d அவதரித்தானென்றவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிருர் (மத்₄யே விரிஞ்ச) இத்யாதி₃. 72

73. பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலரென்றும் காண்டோறும் — பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
யெல்லாம் பிரானுருவே யென்று.

பதவுரை:— பூவையும் — பூவைப் பூவையும், காயாவும் — காயாம்பூவையும், நீலமும் — கருநெய்தல் புஷ்பத்தையும், பூக்கின்ற — அப்பொழுதே அலர்கின்ற, காவி மலர் — செங்கழுநீர்ப் பூவையும், என்றும் — எப்பொழுதும், காண்தோறும் — பார்க்கும்போதெல்லாம், அவ்வவையெல்லாம் — அந்தந்தப் புஷ்பங்களெல்லாம், பிரான் உருவே என்று — எம்பிரானுடைய திருமேனியே என்று நினைத்து, பாவியேன் — (அவனை நேரே அநுபவிக்கப்பெறாத) பாபத்தையுடைய என்னுடைய, மெல் ஆவி — மென்மையுடைய மனஸ்ஸும், மெய் - சரீரமும், மிகவேபூரிக்கும் — மிகவும் பூரித்துப் போகாநிற்கும்.

அவ:— எழுபத்து மூன்றும் பாட்டில்; (பூவை) "இவனே ஆஶ்ரயணீயன்" என்றறுதியிட்டால் பின்னை அநுபவமிறேயுள்ளது.

வ்யா:— (பூவையித்யாதி) 'பூவை, காயா, நீலம், பூவாநின்ற ௧ காவிமலர் இவை கண்டபோதெல்லாம், பிரானு

73. அவ:— இவனே ஆஶ்ரயிக்கத்தக்கவன் என்று சென்ற பாட்டில் அறுதியிட்டார். இப்படி அறுதியிட்ட பின்பு வகுத்த ஸ்வாமியான அவனை அநுபவிக்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற காவி மலரென்றும் காண் தோறும்) பூவைப்பூ, காயாம்பூ நீலோத்பலமாகிற கருநெய்தல், அப்போதே அலர்ந்த காவி மலராகிற செங்கழுநீர்ப்பூ ஆகிய கருநிறமுடைய பூக்களை எப்

அரு:— எழுபத்துமூன்றும் பாட்டு. ௧ "காவி" — செங்

74, என்று மொருநா ளொழியாமை யானிரந்தால்
ஒன்று மிரங்கா ருருக்காட்டார்— குன்று
குடையாக வாகாத்த கோவலனார் நெஞ்சே
புடைதான் பெரிதே புவி.

பதவுரை:— ஒரு நாள் ஒழியாமை—ஒரு நாளும் தப்பாமல், என்றும்—எல்லாக்காலத்திலும், யான் இரந்தால்—நான் யாசித்தாலும், குன்று குடையாக—கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து, ஆ காத்த — பசுக்களை ரக்ஷித்த, கோவலனார்—கோபாலன், ஒன்றும் இரங்கார்—

உருவேயென்று அறிவுடைய b நெஞ்சு பூரிக்கையன்றிக்கே c உடம்புமகப்படப் பூரியா நின்றது. 73

போது காண்கிறேனே அப்போதெல்லாம். (பாவியேன் மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை எல்லாம் பிரான் உருவே என்று) அடியேனுடைய மென்மை மிக்க மனமும், உடலும் அந்தப் பூக்களெல்லாம் எம்பெருமானுடைய திருமேனியே என்று நினைத்து மிகவும் பூரிப்படையும். 'பாவியேன்'' என்றது அவ்வெம்பெருமானுடைய திருமேனியை நேரே காணமுடியாதபடியான பாபத்தை உடையேன் என்று பொருள்படுகிறது. அன்றிக்கே ''பாவியேன்'' என்று விபரீதலக்ஷணையாய் ''பாக்கியசாலியான என்னுடைய'' என்றும் பொருள் கொள்ளலாம். 'போலியைக் கண்ட மாத்திரத்தில் மனமும் உடலும் பூரிக்கும்படியான பாக்கியம் செய்த எனக்கு' என்று கருத்து. ''ஆவி'' என்று மனத்தைக் குறிக்கிறது. ''என்றும் காண்தோறும் மெல்லாவி பூரிக்கும்'' என்கையாலே, எத்தனை முறை இப்படி மயங்கித் தெளிந்தாலும் மறுபடியும் மறுபடியும் இந்த மயக்கத்தை அடையும் மென்மையுடைய மனம் என்று காட்டப்படுகிறது. அறிவு வெளிப்படும் இடமான நெஞ்சு பூரிப்பதோடல்லாமல், அறிவற்ற உடலும் பூரிக்கிறது என்று வியப்பெய்துகிறார். 73

கழுநீர். b ''ஆவி'' - நெஞ்சு, c ''மெய்'' - உடம்பு. 73

சிறிதும் கருணை காட்டுகிறாரல்லர்; உரு காட்டார் — தன் திருமேனியையும் காட்டுகிறாரல்லர்; நெஞ்சே — மனமே!, புவிதான் — இவ்வுலகம்தான், புடை பெரிதே — (அவருடைய கருணை ஏறிப்பாயாதபடி) மிகவும் மேடாயிருக்கிறது.

---

அவ:— எழுபத்து நாலாம் பாட்டில்; (என்றும்) ஶரீரபரிக்ரஹம் பண்ணி ருசி பிறந்த பின்பு அபேக்ஷித்தது காலமெல்லாமிரந்தாராய்த் தோற்றுகிறபடி.

வ்யா:— (என்றுமித்யாதி₂) காலமெல்லாம் நானிரந்து போர, இருந்தவிடத்திலேயிருந்தாலும், "இவன் நம்மை இரவாநின்றான்" என்று இரங்குவதும் செய்கிறிலர்; தம் வடிவைக்காட்டுவதும் செய்கிறிலர். (குன்றித்யாதி₂) இரங்கியுருக் காட்டாதவர் காட்டிற்றிலராகில் த₄ரிக்கலா

---

74. அவ:— "தீ₃ர்க்க₄சிந்தயந்தீ" எனப்படும் இவ்வாழ்வாருக்கு எம்பெருமானைப்பற்றிய மானஸாநுப₄வத்தாலே ஆனந்த₃மும், பா₃ஹ்ய ஸம்ஶ்லேஷம் இல்லாமையாலே துக்கமும் மாறிமாறி வருமாகையாலே, சென்றபாட்டில் ஆனந்தாநுப₄வமாய்ச் சென்ற இவர் இப்பாட்டில் எம்பெருமான் தன் உருக்காட்டாததைக்கண்டு துன்புறுகிறார். இந்த ஶரீரம் எடுத்து ருசி பிறந்தபின்பே அவனைக்காண ஆசைப்பட்ட போதிலும், காலமெல்லாம் அவனைக்காண ஆசைப்பட்டதாக இவருக்குத் தோற்றுகிறது.

வ்யா:— (என்றும் ஒருநாள் ஒழியாமை யான் இரந்தால் ஒன்றும் இரங்கார் உருக்காட்டார்) நான் காலமெல்லாம் இவரைக் காண ஆசைப்பட்டு யாசிக்கிறேன்: இவரோவெனில் தான் இருந்தவிடத்திலே இருந்தாகிலும் 'இவன் நம்மை யாசிக்கிறானே' என்று கருணை காட்டுவதும் செய்கிறாரல்லர்; தம் திருமேனியைக்காட்டுவதும் செய்கிறாரல்லர்; (குன்று குடையாக ஆகாத்தகோவலனார்) கோ₃வர்த்த₄ன மலையைக் குடை

75. புவியு மிருவிசும்பும் நின்னகத்த நீயென்
செவியின் வழிபுகுந்தென் னுள்ளாய் — அவிவின்றி
யான்பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார்
ஊன்பருகு நேமியா யுள்ளு.

---

மிறே; உபகாரமறியாத பசுக்களுக்குதவுமவர் கிடீர் நமக்கு உதவாதொழிகிறார். (நெஞ்சே a புடைதான் பெரிதே புவி) அவர்க்கு நீர்மையில்லை யென்னப்போகாதிறே; அவர் நீர்மை ஏறிப்பாயாததோரிடந்தேடி எங்கே கிடந்தோம்? 74

---

யாக எடுத்துப் பசுக்களைக் காத்த கோபாலனல்லவோ இவர். இவர் யாருக்கும் தன்னைக் காட்டாதவராயிருந்தால், நமக்கும் தன்னைக்காட்டவில்லை என்று ஆறியிருக்கலாம்; செய்த உபகாரத்தை அறியவும் மாட்டாத பசுக்களுக்கும் தன்னைக் காட்டி உதவினவரன்றோ நமக்குத் தன்னைக்காட்டி உதவாதொழிகிறார்! (நெஞ்சே புடை தான் பெரிதே புவி) நெஞ்சே! இப்படி ஆகாத்த கோவலனாகையாலே அவருக்கு நீர்மையில்லை என்று சொல்லமுடியாது. அவரது நீர்மை ஏறிப் பாயாத இடம் தேடி நாம் கிடக்கிறோமென்று தோன்று கிறது. "புவி" என்று தாம் இருக்குமிடத்தையும் "புடை பெரிதே" என்று அது மிகவும் மேட்டு நிலமாயிருப்பதை யும் கூறுகிறார். 74

---

அரு:— எழுபத்துநாலாம் பாட்டு. a "புவி புடைதான் பெரிது" *புடையென்று குஹையாய் அவன் கடாக்ஷ குஹையிலே கிடந்தோமென்றபடி. 74

---

* இந்த அரும்பதம் வ்யாக்யானத்தோடு பொருந்தவில்லை.

பதவுரை:— ஊன் பருகு நேமியாய் — எதிரிகளின் ரத்தத்தைக் குடிக்கிற சக்ராயுதத்தை யுடையவனே!, புவியும் — (ப்ராக்ருதமான) இந்த உலகமும், இருவிசும்பும் — மிகப் பரந்ததான அந்த அப்ராக்ருத தேசமும், நின் அகத்த — உன் ஸங்கல்பத்திலே கிடக்கின்றன; நீ — (இப்படிப்பட்ட) நீ, என் செவியின் வழி புகுந்து — என்னுடைய காது வழியாகப் புகுந்து, அவிவு இன்றி - இடையறாது, என் உள்ளாய் — என்னுள்ளேயிருந்து ஸத்தை பெறுகிறாய்; நான் பெரியன் — (நம் இருவரில்) நான் பெரியவனா? நீ பெரியை — நீ பெரியவனா? என்பதனை — என்கிற விஷயத்தை, யார் அறிவார் — யார் அறியமுடியும்? உள்ளு — (நீயே) நினைத்துப்பார்.

---

அவ:— எழுபத்தைந்தாம் பாட்டில்; (புவியும்) "உமக்கு என்றும் உதவிலோமாக நீர் சொல்லுவானென்? 'உருக்காட்டிற்றில்லையே' என்று வெறுக்கும்படி உம்மைப் பண்ணினோமே" என்ன; அத்தையநுஸந்தித்து "என்னோடொப்பாருண்டோ?" என்கிறார்.

---

75. அவ:— 'எம்பெருமான் இரங்கவில்லை, உருக்காட்டவில்லை' என்று வருந்தினார் சென்றபாட்டில். அதைக்கேட்ட எம்பெருமான் "இப்படி வருந்தலாமோ? 'நீ உருக்காட்டவில்லையே' என்று தவிக்கும்படியான ஓர் ஆர்த்தியை உமக்கு உண்டாக்கினோமே" என்று திருவுள்ளமாக, அதைக்கேட்டு "என்னோடு ஒப்பார் எவருமில்லை" என்று பெருமிதமடைகிறார் இப்பாட்டில்.

75. புவியு மிருவிசும்பும் நின்னகத்த நீயென்
செவியின் வழிபுகுந்தென் னுள்ளாய் — அவிவின்றி
யான்பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார்
ஊன்பருகு நேமியா யுள்ளு.

---

மிறே; உபகாரமறியாத பசுக்களுக்குதவுமவர் கிஙர் நமக்கு உதவாதொழிகிறார். (நெஞ்சே a புடைதான் பெரிதே புவி) அவர்க்கு நீர்மையில்லை யென்னப்போகாதிறே; அவர் நீர்மை ஏறிப்பாயாததோரிடந்தேடி எங்கே கிடந்தோம்? 74

---

யாக எடுத்துப் பசுக்களைக் காத்த கோபாலனல்லவோ இவர். இவர் யாருக்கும் தன்னைக் காட்டாதவராயிருந்தால், நமக்கும் தன்னைக்காட்டவில்லை என்று ஆறியிருக்கலாம்; செய்த உபகாரத்தை அறியவும் மாட்டாத பசுக்களுக்கும் தன்னைக் காட்டி உதவினவரன்றோ நமக்குத் தன்னைக்காட்டி உதவாதொழிகிறார்! (நெஞ்சே புடை தான் பெரிதே புவி) நெஞ்சே! இப்படி ஆகாத்த கோவலனாரகையாலே அவருக்கு நீர்மையில்லை என்று சொல்லமுடியாது. அவரது நீர்மை ஏறிப்பாயாத இடம் தேடி நாம் கிடக்கின்றோமென்று தோன்றுகிறது. "புவி" என்று தாம் இருக்குமிடத்தையும் "புடை பெரிதே" என்று அது மிகவும் மேட்டு நிலமாயிருப்பதையும் கூறுகிறார். 74

---

அரு:— எழுபத்துநாலாம் பாட்டு. a "புவி புடைதான் பெரிது" *புடையென்று குஹையாய் அவன் கடாக்ஷ குஹையிலே கிடந்தோமென்றபடி. 74

---

* இந்த அரும்பதம் வ்யாக்யானத்தோடு பொருந்தவில்லை.

பதவுரை:— ஊன் பருகு நேமியாய் — எதிரிகளின் ரத்தத்தைக் குடிக்கிற சக்ராயுதத்தை யுடையவனே!, புவியும் – (ப்ராக்ருதமான) இந்த உலகமும், இருவிசும்பும் — மிகப் பரந்ததான அந்த அப்ராக்ருத தேசமும், நின் அகத்த – உன் ஸங்கல்பத்திலே கிடக்கின்றன; நீ – (இப்படிப்பட்ட) நீ, என் செவியின் வழி புகுந்து — என்னுடைய காது வழியாகப் புகுந்து, அவிவு இன்றி – இடையறாது, என் உள்ளாய் — என்னுள்ளேயிருந்து ஸத்தை பெறுகிறாய்; நான் பெரியன் — (நம் இருவரில்) நான் பெரியவனா? நீ பெரியை — நீ பெரியவனா? என்பதனை — என்கிற விஷயத்தை, யார் அறிவார் — யார் அறியமுடியும்? உள்ளு — (நீயே) நினைத்துப்பார்.

---

அவ:— எழுபத்தைந்தாம் பாட்டில்; (புவியும்) "உமக்கு என்றும் உதவிலோமாக நீர் சொல்லுவானென்? 'உருக் காட்டிற்றில்லையே' என்று வெறுக்கும்படி உம்மைப் பண்ணினோமே" என்ன; அத்தையநுஸந்தித்து "என்னோடொப் பாருண்டோ?" என்கிறார்.

---

75. அவ:— 'எம்பெருமான் இரங்கவில்லை, உருக்காட்ட வில்லை' என்று வருந்தினார் சென்றபாட்டில். அதைக்கேட்ட எம்பெருமான் "இப்படி வருந்தலாமோ? 'நீ உருக்காட்டவில்லையே' என்று தவிக்கும்படியான ஓர் ஆர்த்தியை உமக்கு உண்டாக்கினோமே" என்று திருவுள்ளமாக, அதைக்கேட்டு "என்னோடு ஒப்பார் எவருமில்லை" என்று பெருமிதமடைகிறார் இப்பாட்டில்.

வ்யா:- (புவியும் இரு விசும்பும் நின்னகத்த) உப₄ய விபூ₄தியும் நின் ஸங்கல்பத்திலேகிடக்கின்றன. (நீ இத்யாதி₃) உப₄ய விபூ₄தியுக்தனான நீ என்னுடைய ஶ்ரோத்ரேந்த்₃ரியத்தின் வழியேபுகுந்து விச்சே₂த₃மின்றிக்கே என் ஹ்ருத₃யத்திலே உளேயாகாநின்றாய். (யானித்யாதி₃) உப₄யவிபூ₄தியை யுடையநீயோ, விபூ₄திமானையுடைய நானோ பெரியாரார் என்றறிவாரார்? ௯ (ஊனித்யாதி₃) அப்ரதிஹத ஶக்தியான நீ அறிவுதியாகிற் சொல்லு. 75

---

வ்யா:— (புவியும் இருவிசும்பும் நின் அகத்த) லீலா விபூ₄தியும் நித்ய விபூ₄தியும் உன் ஸங்கல்பத்தாலே ஸத்தை பெற்றிருக்கின்றன. "புவி" என்று இந்த லீலாவிபூ₄தி முழுவதையும், 'இருவிசும்பு" என்று பரமாகாசமான பரம பதத்தையும் சொல்லுகிறது. (நீ என் செவியின் வழி புகுந்து அவிவின்றி என் உள்ளாய்) உப₄யவிபூ₄திகளோடு கூடியவனான நீ என்னுடைய காதின் வழியே புகுந்து இடைவிடாது என் நெஞ்சிலேயிருந்து ஸத்தை பெறுகின்றாய். (யான் பெரியன் நீ பெரியை என்பதனை யார் அறிவார்) உப₄ய விபூ₄திகளையும் உன்னுள் அடக்கிய நீ பெரியவனா? அவ் விபூ₄திகளை உள்ளடக்கிய உன்னையே என்னுள் அடக்கிய நான்பெரியவனா? என்பதனை யார் அறிவார்? (ஊன் பருகு நேமியாய் உள்ளு) எதிரிகளின் ரத்தத்தைக் குடிக்கும் சக்கரத்தாழ்வானைக் கையில் கொண்டவனானையாலே தடையற்ற ஶக்தியையுடைய நீயே அறிவாயாகில் சொல்லுவாயாக. இப்பாட்டின் பிற்பகுதிக்கு வேறொருவிதமாகவும் அந் வயித்துப் பொருள் கொள்வர் ரசிகர்கள். அதாவது—(அவி வின்றி யான் பெரியன்) உப₄யவிபூ₄தியையும் உள்ளே அடக்கிய உன்னையே உள்ளே அடக்கியவனானையாலே ஸந்தே₃ஹமில்லாமல் யானே பெரியவன்; (நீ பெரியன் என் பதனை யார் அறிவார்?) இப்படி இருக்கும்போது நீ பெரிய வன் என்பதனை யாரால் அறியமுடியும்? என்கை. இப்பாட்

---

அரு:— எழுபத்தைந்தாம் பாட்டு ௯ "ஊன் பருகு நேமி" ஶத்ருசரீரங்களைப் பருகுகிறதிருவாழி. 75

76. உள்ளிலு முள்ளம் தடிக்கும் வினைப்படலம்
விள்ள விழிந்துன்னை மெய்யுற்றால்—உள்ள
உலகளவு யானு முளனாவ னென்கொலோ
உலகளந்த மூர்த்தி யுரை.

பதவுரை:— உலகு அளந்த மூர்த்தி—உலகையெல்லாம் அளந்தருளிய எம்பிரானே!, உள்ளிலும்—உன்னை நினைத்தாலும், உள்ளம் தடிக்கும்—என் மனம் பெரிதாகின்றது; வினைப்படலம்—பாபங்களின் கூட்டம், விள்ள—(என்னை விட்டு) நீங்கும்படி, விழித்து—(நீ) கடாக்ஷித்து, உன்னை மெய்யுற்றால்—உன்னை (நான்) ஸாக்ஷாத்கரித்தால், யானும்—நானும், உள்ள உலகளவும் உளனாவன்—எங்குமுள்ள உலகங்களெல்லாவற்றிலும் வியாபித்து விடுவேன்போல இருக்கிறது; என்கொலோ—இது எப்படி? உரை—(நீயே) சொல்லுவாயாக.

---

அவ:— எழுபத்தாறும் பாட்டில்; (உள்ளிலும்) ஶ்ரவண ஜ்ஞாநாநந்தர பாவியான மநநத்தைச்சொல்லுகிறது.

---

டில் "யான் பெரியன்" என்று தம்மைப்பற்றி அருளிச் செய்துள்ளமையாலே ஆழ்வாருக்குப் "பெரியன்" என்னும் வழக்கு ஆழ்வார் திருநகரியில் உள்ளது. எண்பத்தேழு பாட்டுக்கள் கொண்டு அளவில் சிறியதானாலும் இத்திருவந்தாதிக்குப் "பெரிய திருவந்தாதி" என்று பெயர் வந்ததற்கு இதுவே காரணமென்பர். 75

76. அவ:— சென்றபாட்டில் "செவியின் வழி புகுந்து" என்று ஶ்ரவண (கேள்வி) ஜ்ஞாநத்தைச் சொன்னார், "உள்ளிலும்" என்று தொடங்கும் இப்பாட்டில் கேள்வி ஞானத்திற்கு அடுத்தபடி உண்டாகும் மநநரூபமான அறிவைச் சொல்லுகிறார்.

வ்யா:— (உள்ளிலு முள்ளந்தடிக்கும்) உன்னை அநுஸந்திக்கில் ஸ்தூலமான தேஹம்போலே அமூர்த்தமான ஹ்ருதயம் தடியாநின்றது. a (வினையித்யாதி) பாபஸமூஹம் விண்டுபோம்படி நீ பார்த்து. உன்னை ஸாக்ஷாத்கரித்தென்றுமாம். b (உள்ள உலகித்யாதி) வ்யாபகதத்வமிரண்டாகிறதுபோலே. c (உலகளந்த மூர்த்தியுன்ற) சிறிய வடிவைக்கொண்டு லோகத்தையெல்லாம் வ்யாபித்திருக்கிற நீயே சொல்லு. 76

---

வ்யா:— (உள்ளிலும் உள்ளம் தடிக்கும்) உன்னை நினைக்கத்தொடங்கினால் உருவமுடைய தேஹத்தைப்போலே உருவமில்லாத நெஞ்சமும் பூரிப்படைகிறது. 'இப்படி இவ்வுலகில் உன்னை நினைக்கும்போதே என்னுடைய நெஞ்சு விரிவடையுமானால் என்னுடைய கர்மங்களெல்லாம் கழிந்து பரமபதத்தில் உன் கடாக்ஷத்தாலே உன்னைக் காணப்பெற்ற பிறகு நானும் உன்னைப்போலே எங்கும் விரிவடைந்து விடுவேன் போல் இருக்கிறதே' என்கிறார் மேலே— (வினைப்படலம் விள்ள விழித்து உன்னை மெய்யுற்றால்) என்னுடைய பாபக்கூட்டம் நீங்கும்படியாக நீ கடாக்ஷித்து உன்னை நான் கண்டால், அன்றிக்கே 'உன்னை விழித்து மெய்யுற்றால்' என்று கூட்டி 'உன்னை இங்குமனத்தாலுப பரமபதத்தில் கண்ணாலும் நான் கண்டால்' என்றும் பொருள் கொள்ளலாம், (உள்ள உலகளவும்யானும் உளனாவன் என்கொலோ) நானும் எந்த முள்ள உலகங்களனைத்திலும் வியாபித்து விடுவேன் போல் உள்ளது. எம்பெருமானைப்போலே தனக்கும் வ்யாப்தி உண்டாகுமோ என்று இங்குகேட்டிருந்தபோதிலும் விபுவான எம்பெருமானுக்கு ஸ்வரூப வ்யாப்தி என்பதும், அணுவான ஆழ்வாருக்கு தர்மபூத ஜ்ஞானமாத்ரத்தில் வ்யாப்தி என்பதும் அறியத்தக்கது. (உலகளந்த மூர்த்தி உரை) சிறிய வடிவைக்கொண்டு உலகையெல்லாம் வியாபித்த நீயே என்னுடைய இந்த வ்யாப்தியைப்பற்றிப் பேசவேண்டும். 76

---

அரு:— எழுபத்தாறும் பாட்டு. a ''மெய்யுற்றால்'' ஸாக்ஷாத்கரித்தால். இங்கே மாநஸ ஸாக்ஷாத்காரமாதல், அங்கே பாஹ்யஸாக்ஷாத்காரமாதல். b ஜ்ஞாநவ்யாப்தி இவரது. c இந்த ஆச்சர்யத்தை நீ சொல்லென்றபடி. 76

77. உரைக்கிலோர் சுற்றத்தா ருற்றாரென் றாரே
இரைக்குங் கடற்கிடந்த வெந்தாய் — உரைப்பெல்லாம்
நின்னன்றி மற்றிலேன் கண்டாய் எனதுயிர்க்கோர்
சொல்நன்றி யாகும் துணை.

பதவுரை; — உரைக்கில் — சொல்லப்புக்கால், ஓர் சுற்றத்தார் — தாயாதிகள், உற்றார் — மற்ற உறவினர்கள், என்று —, என்று சொல்லப்பட்ட பந்துக்கள், ஆரே — உன்னையொழிய வேறு யார் (எனக்கு) உளர்? இரைக்கும் — ஒலிக்கிற, கடல் கிடந்த — திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுகிற, எந்தாய் — என் ஸ்வாமி! எனது உயிர்க்கு — என்னுடைய ஆத்மாவுக்கு நன்றியாகும் — நன்மையைக்கொடுக்கும், ஓர் சொல் — ஒப்பற்றசொல்லாகவும், துணை — துணையாகவும், உரைப்பு எல்லாம் — சொல்லப்படும் உறவு எல்லாமாகவும், நீன் அன்றி — உன்னைத்தவிர, மற்று இலேன் கண்டாய் — வேறொன்று இல்லாதவனாய் இருக்கிறேன் காண்.

அவ: — எழுபத்தேழாம்பாட்டில்; (உரைக்கில்) அறியாதே "நன்று" என்று ப்ரமித்து வேறே சிலர் உற்றாரென்றிருக்குமத்தனையிறே; உவிமர்த்த ஸஹரான பந்துக்கள் வேறுண்டோ? என்கிறது.

77. அவ: — "உலகளந்த மூர்த்தி" என்று சென்ற பாட்டில் தானே உயிர்களுக்கு எல்லா உறவுமாயிருப்பவன் என்பது தோற்ற உலகளந்தச் செயலை அநுஸந்தித்தார். உன்னைத்தவிர எனக்கு உறவுடையார் வேறு யாரேனும் உண்டோ? என்கிறார் இப்பாட்டில். உலகில் காணப்படும் உறவினர்களெல்லாம் உண்மையில் நம்முடைய மயக்கத்தாலே உறவினர்களாகக் கொள்ளப்படுகிறவர்களேயொழிய எக்காலத்திலும் எத்துயர்வந்தபோதும் ரக்ஷிக்கும் உறவினன் எம்பெருமானைத் தவிர வேறுயாரும் இல்லை என்கிறார்.

அரு: — எழுபத்தேழாம் பாட்டு. உ (விமர்த்த ஸஹர்) பூதஸஹர் உன்னையொழிய இல்லையென்றபடி

வ்யா:— (உரைக்கிலித்யாதி₃) b "ஆரே" என்று கேட்டால் "வேறு சிலரில்லை, நானேயுள்ளேன்" என்று அவன் தனக்குச்சொல்ல வேணும்போலே. (இரைக்குமித்யாதி₃) நித்யஸூரிகள் ஸதா₃நுப₄வம் பண்ணுநிற்கச்செய்தே திருப்பாற்கடலிலே அவஸரப்ரதீக்ஷனாய் வந்து கிடக்கிறவனே! c (உரைப்பித்யாதி₃) து₃ர்த்த₃சையில் (21) "மா ஶுச:" (மாஶுச:) என்று நற்சொல்லு சொல்லுமத்தனே. d உரைக்கப்படுவதெல்லாம உன்னையொழிய வேறொருவரில்லை. 77

---

வ்யா:— (உரைக்கில் ஓர் சுற்றத்தார் உற்றாரென்று ஆரே) பேசப்புக்கால் சுற்றத்தார் உற்றாரென்று சொல்லத் தகுதியுள்ளவர்கள் யாருளர்? 'சுற்றத்தார' என்று தா₃யாதி₃களையும் 'உற்றார்' என்று மற்ற உறவினர்களையும் கொள்ளலாம். 'சுற்றத்தார்' என்று எல்லா உறவினர்களையும் 'உற்றார்' என்று நண்பர்களையும் கொள்ளலாம். 'சுற்றத்தார் உற்றார் என்று ஒருவருமில்லை' என்று சொல்லாமல் 'சுற்றத்தார் உற்றார் என்று ஆரே?" என்று எம்பெருமானைக் கேள்வி கேட்பதனால், "வேறுயாருமில்லை நானே" என்று அவன் சொல்லக் கேட்க விரும்புகிறாரென்று தோற்றுகிறது. (இரைக்கும் கடல் கிடந்த எந்தாய்) நித்ய ஸூரிகள் பரமபத₃த்தில் காலமெல்லாம் தன்னையனுப₄வித்துக்கொண்டிருந்தபோதிலும் லீலாவிபூ₄தியில் உள்ளவர்களைப் பெறவிரும்பி 'யாரேனும் நம்மிடம் வரமாட்டார்களா' என்று எதிர்பார்த்துக் கொண்டு திருப்பாற்கடலில் சயனித்திருப்பவனே! "எந்தாய்" என்கையாலே தன்னைப்பெறுகைக்குத் திருப்பாற்கடலிலே ஸாத₄நாநுஷ்டா₂நம் செய்தவனென்று உணர்த்துகிறார். "இரைக்கும் கடல்" என்று எம்பெருமானைக் கண்ட உகப்

---

b சுற்றத்தார் ஆரென்று உரைக்கில் "நானுள்ளேன்" என்று உன்னையொழியச்சொல்லுவார் ஆரென்றபடி c, d "உரைப்பெல்லாம்" துணையாக உரைக்கப்படுவதெல்லாவற்றிலும் உன்னையொழியத் துணையில்லையென்றபடி. 77

78. துணைநாள் பெருங்கிளையும் தொல்குலமும் சுற்றத்
திணைநாளு மின்புடைத்தா மேலும் — கணைநாணில்
ஓவாத் தொழில்சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே
ஓவாத வூணாக வுண்.

பதவுரை:— துணை நாள் — (நண்பர்களின்) துணையும் ஆயுஸ்ஸும், பெருங்கிளையும் – பெரிய உறவினரும், தொல் குலமும் — பழைமையான குலத்தில் பிறப்பும், சுற்றத்து இணை — பந்துக்களுடைய சேர்க்கையுமாகிய இவை, நாளும் — எப்பொழுதும், இன்பு உடைத்தாமேலும் — இனியவையாய் இருந்தனவாகிலும், கணைநாணில் ஓவாதொழில்-(ஆஸ்ரிதரின் ரக்ஷணத்தின் பொருட்டு) எப்பொழுதும் நாணில் சேர்க்கப்பட்டுச்செயல்புரியும் பாணங்களையுடைய, சார்ங்கன் – சார்ங்கமென்னும் வில்லையாள்பவனுடைய: தொல் சீரை — அநாதியான கல்யாணகுணங்களை, நல் நெஞ்சே — என் அநுகூலமான மனஸ்ஸே!, ஓவாத — தடையொன்றுமற்ற, ஊணாக — போக்ய பதார்த்தமாகக்கொண்டு, உண் — அநுபவிப்பாயாக.

---

அவ:— எழுபத்தெட்டாம் பாட்டில்; (துணை) கீழ் "உற்றாரிலை" என்றது; உற்றாருண்டாகிலும் ஸம்ஸாரமினிதாகிலும் உன்னநுபவத்தையொழியப் புறம்புண்டோ? என்கிறார்.

---

பாலே கடல் ஆரவாரம் செய்வதைக் குறிக்கிறது. (உரைப் பெல்லாம் நின்னன்றி மற்றிலேன் கண்டாய்) துணையாகச் சொல்லப்படும் சுற்றத்தார் உற்றார் முதலிய அனைவரும் எனக்கு உன்னையொழிய வேறு எவரும் இல்லை. (எனதுயிர்க்கோர் சொல்லென்றியாகும் துணை நின்னன்றி மற்றிலேன் கண்டாய்) என்னுடைய ஆத்மாவுக்குக் கஷ்டம் வந்த காலத்தில் 44 வது பக்கத்திலுள்ள 21 வது ப்ரமாணமான சரமச்லோகத்தின் படி "மாசுச:" என்று நல்லவார்த்தை சொல்லக் கூடிய துணை உன்னைத்தவிர வேறு எவருமில்லை. 77

வ்யா:— (துணை நாளித்யாதி) துணை, ஆயுஸ்ஸு, a பெருங்கிளை, ஆபிஜாத்யம், பந்துகளோட்டைச் சேர்த்தி. இவை நித்யமுமாய் இனிதாயிற்றேயாகிலும். b (கணையித்யாதி) என்றும் ஆஸ்ரிதர் கார்யம் பாருதே செய்துபோருமவருடைய கல்யாண குணங்களை. (நல் நெஞ்சே) ஸோபாதிக பந்துக்களுக்கும் நிருபாதிக பந்துக்களுக்கும் வாசியறியும நெஞ்சே! "எம்பெருமானைப்பற்று" என்று சொல்லப்பாங்கான நெஞ்சென்னவுமாம், (ஓவாதவூணாகவுண்) விச்சேதமில்லாத போகமாகபுஜி. 78

---

78. அவ:— சென்றபாட்டில் உன்னைத்தவிர உற்றார் சுற்றத்தார் வேறு எவருமில்லையென்றார். 'அப்படிச் சிலர் உண்டானாலும், இந்த ஸம்ஸாரமே இனிதானாலும், உன்னை அனுபவிப்பதையொழிய வேறில்லை' என்று நெஞ்சுக்கு உபதேசிப்பதைப்போலே எம்பெருமானிடம் கூறுகிறார்.

வ்யா:— (துணைநாள் பெருங்கிளையும் தொல்குலமும் சுற்றத்து இணை நாளும் இன்புடைத்தாமேலும்) நண்பர்களின் துணையும், ஆயுளும், பெருகி நிற்கும் உறவினர்களும், பழமையான நற்குடியில் பிறப்பும், உறவினரோடு சேர்த்தியும் எப்போதும் உள்ளவையாய், இனியவையாயிருப்பனவேயாயினும் (கணைநாணில் ஓவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை) அடியார்களை ரக்ஷிப்பதற்காக எப்போதும் நாணில் கோக்கப்பட்டுச் செயல்புரியும் பாணங்களையுடைய "சார்ங்கம்" என்னும் வில்லையான்பவனுடைய அநாதியான கல்யாண குணங்களை. (நல்நெஞ்சே) செயற்கை உறவினர்களுக்கும் இயற்கை உறவினனுக்கும் வேற்றுமை அறியும் நெஞ்சே! "எம்பெருமானைப்பற்று" என்று சொன்னால் அதன்படி கேட்கும் நெஞ்சே! என்றும் பொருள் கொள்ளலாம். (ஓவாத ஊணாக உண்) இடையறாது உன்னும் இனிய உணவாக அநுபவிப்பாயாக. 78

---

அரு:— எழுபத்தெட்டாம்பாட்டு. a "கிளை" பந்துக்கள். b "கணை நாணில்" அம்பானது நாணிலே இடைவிடாதே வ்யாபரிக்கிற வில்லையுடையவன். 78

79. உண்ணாட்டுத் தேசன்றே யூழ்வினையை யஞ்சுமே
விண்ணாட்டை யொன்றாக மெச்சுமே — மண்ணாட்டில்
ஆராகி யெவ்விழி விற்றானாலும், ஆழியங்கைப்
பேராயற்கு காளாம் பிறப்பு.

பதவுரை: — மண்ணாட்டில் — இப்புவியில், ஆராகி — மிகக் கீழான சாதியினராயினும், எவ்விழி வற்றானாலும் — மிகக் கீழ்மையான இழிதொழிலையுடையவராயினும், ஆழி அம் கை பேர் ஆயற்கு — திருவாழியை அழகிய திருக்கையில் ஏந்திய ஸர்வேஶ்வரனான கண்ணனுக்கு, ஆள் ஆம் பிறப்பு — அடிமை செய்யத் தகுதியான ஜந்மம், உள் நாட்டு தேசு அன்றே — (பகவானுக்கு) அந்தரங்கதேசமான பரமபத₃த்திலிருக்கும் ஒளிபோலே பரிசுத்தமானதன்றோ? ஊழ் வினையை — அநாதி₃யான பாபத்தை நினைத்து, அஞ்சுமே — அஞ்சுமோ? விண் நாட்டை — ஸ்வர்க்கத்தை, ஒன்றாக மெச்சுமே ஒருபொருளாக எண்ணுமோ?

---

வ்யா: — எழுபத்தொன்பதாம் பாட்டில்; a (உள்நாடு) (ஆழியங்கை இத்யாதி₃) ஸர்வேஶ்வரனாய்வைத்து இதர ஸஜாதீயனாய்ப் பிறந்தவனுக்குக் கைங்கர்யம் பண்ணு

---

79. அவ: — எப்போதும் ப₄க₃வத்₃கு₃ணாநுப₄வமே யாத்திரையாய் வாழும்படி நெஞ்சுக்கு உபதேசித்தார் சென்ற பாட்டில். இப்படியிருப்பவர்களுடைய வைப₄வத்தைப் பேசுகிறார் இப்பாட்டில்.

வ்யா: — (ஆழியங்கைப் பேராயற்கு ஆளாம் பிறப்பு உள்நாட்டுத் தேசு அன்றே) திருச்சக்கரத்தை அழகிய திருக்கையில் ஏந்திய ஸர்வேஶ்வரனாயிருந்தபோதிலும் மற்ற மனிதர்களோடு ஒக்கப்பிறந்தவனுக்குக் கைங்கர்யம் பண்ணுவதையே யாத்திரையாகக் கொண்ட பிறப்பு

---

அரு: — எழுபத்தொன்பதாம் பாட்டு. b ''தேசன்றே'' — தேசன்றோ? என்றபடி a, c, e ''உள்நாடு'' பரமபத₃மாதல்,

கைக்கு யோக்₂யமான ஜந்மம், பரமபத₃த்திலிருக்கும் b தேஜஸ்ஸை யுடைத்தன்றே என்று₂மாம். c உள்நாடென்று பரமபத₃மாகக் கொள்ளுகிறது-ப₄க₃வத₃பி₄ப்ராயத்தாலே. பேராயனெ(ர)ன்று-அல்லாத இடையர் நித்யஸூரிக

---

பரமபதத்திலிருக்கும் தேஜஸ்ஸை உடையதல்லவா. ஆழ்வார் இந்த லீலாவிபூ₄தியிலிருந்த போதிலும் எம்பெருமானுடைய திருவுள்ளத்தாலே பரமபத₃த்தை "உள்நாடு" என்கிறார். வ்யாக்₂யானத்தில் இதை இரண்டாவது அர்த்த₂மாகக் குறிப்பிட்டிருக்கையாலே லீலாவ்பூ₄தியையே "உளநாடு" என்று குறிப்பதாய், லீலாவிபூ₄தியில் இப்பிறப்பு மிகவும் தேஜஸ்ஸை உடையது எனினும் அர்த்த₂த்தையும திருவுள்ளம பற்றியிருக்கிறார் என்று விளங்குகிறது. வியாக்கியானத்தின் இறுதியில் இதுதெளிவுபடுத்தப்படும். இவ்விடத்தில் ஆசார்ய ஹ்ருத₃யம் 81 வது சூர்ணிகையில் 'பண்டை நாளிற் பிறவி உண்ணாட்டுத் தேசிறே" என்றவிடத்துக்கு வ்யாக்யானம செய்யும்போது "ஆழியங்கைப்பேராயற காளாம் பிறப்பு—உண்ணாட்டுத் தேசன்றே' என்கிறபடியே ப₄க₃வத்₃ விமுக₂ ப்ரசுரமாகையாலே புறநாடான லீலாவிபூ₄தி போலன்றிக்கே ப₄க₃வத₃நுகூல்யைக பே₄ாக₃ரஸத்திலே நெருங்கி பே₄ாக₃ விபூ₄தியாய் அவனுக்கு அந்தரங்கமாயிருக்கிற பரமபத₃த்தில் வர்த்திக்கிற தேஜஸ்ஸையுடையதிறேயென்கை. பரமபத₃த்தில் ப₄க₃வத்கைங்கர்யாநுகு₃ணமாகப் பரிக்₃ரஹிக்கும் தே₃ஹத்தோபாதி ஶேஷவஸ்துவான ஆத்மாவுக்கு இதுவும் தேஜஸ்கரமென்று கருத்து" என்று மணவாளமாமுனிகள் அருளியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. "பேராயன்" என்று கண்ணனைச் சொன்னது இவனோடு ஒப்பிடும்போது மற்ற இடையர்கள் நித்யஸூரிகளோ என்று சொல்லலாம்படி இவன் இடைத்தனத்தில் முதிர்ந்திருப்பதைக் காட்டு

---

ஸம்ஸாரமாதல், c தாமிங்கேயிருக்க அத்தை உள்நாடென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (உள்நாடென்று)

னென்னும்படி இவனுடைய இடைத்தனத்தில் முதிர்ச்சி சொல்லுகிறது, (ஊழ்வினை இத்யாதி3) தான் பண்ணின பாபத்துக்கு d அஞ்சுமோ? (விண்ணாட்டை இத்யாதி3) ப்3ரஹ்மாதி3கள் குடியிருப்பை ஒன்ருக எண்ணுமோ? (48) "सुरपुरी यद्गच्छतो दुर्गतिः" (ஸுரபுரீ யத்3க3ச்ச2தோ து3ர்க3தி:) ஸ்வர்க்கத்துக்குப் போம் வழி தண்ணிதென்கிறது. (49)

---

கிறது. (ஊழ்வினையை அஞ்சுமே) இந்தப் பிறப்பை உடையவர்கள் தாம் பண்ணின பாபத்துக்கு அஞ்சுவார்களோ? (விண்ணாட்டை ஒன்ருக மெச்சுமே) பிரமன் முதலான தேவர்களின் லோகங்களை இவர்கள் ஒரு பொருளாக எண்ணுவர்களோ?

48. யத்தூ3ரே மனஸோ யதே3வ தமஸ: பாரே யத3த்யத்3பு4தம்
யத் காலாத் அபசேளிமம் ஸுரபுரீ யத்3க3ச்ச2தோ
து3ர்க்க3தி: |
ஸாயுஜ்யஸ்ய யதே3வ ஸூதிர த3வா யத்3து3ராக்3ரஹம
மத்3கி3ராம்
தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம் தவ க்ருதே மாத:
ஸமாம்நாஸிஷு: [ஸ்ரீகுணரத்னகோசம் 21]

[தாயே! எவருடைய மனத்திற்கும் எட்டாததாய், ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டதாய், மிக அற்புதமாய், காலத்தால் மாறுபடாததாய். தன்னை அடைய விரும்புபவர்களை தேவலோகத்தையும் துர்க்கதியாக நினைக்கச்செய்வதாய் ஸாயுஜ்யத்தை அளிப்பதாய், என்னுடைய வாக்கிற்கு எட்டாததாய். விஷ்ணுவினுடையதான யாதொரு பரமபதம் உள்ளதோ, அது உனக்காகவே விளங்குகிறது என்று வேதங்கள் விளம்புகின்றன.] என்று ஸ்வர்க்கத்திற்குச் செல்லுவது இவர்களுக்கு மிகத்தாழ்ந்தது என்று சொல்லப்பட்டதன்ருே.

---

இத்யாதி3. d "அஞ்சுமே"-அஞ்சானென்றபடி.

''न देवलोकाक्रमणं'' (ந தே₃வலோகாக்ரமணம்) பறைச்சேரியில் அடியிடுமாபோலே ஸ்வர்க்கத்திலடியிடுகை வேண்டேனென்கிறார். (50) ''तस्यान्तरायो मैत्रेय! देवेन्द्रत्वादिकं फलम्'' (தஸ்யாந்தராயோ மைத்ரேய தே₃வேந்த்₃ரத்வாதி₃கம் ப₂லம்) ப₄க₃வத்₃ விஷயத்திலே கைவைத்தவனுக்கு அந்தராயமாவது இந்த்₃ர

---

49. ந தே₃வலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே
ஐஸ்வர்யம் வாऽபி லோகாநாம் காமயே ந த்வயா விநா||
[ரா—அ 3-5]

[நித்யஸூரிகள் வாழும் உலகான ஸ்ரீவைகுண்டத்தில் வாழ்ச்சியையும், கைவல்யத்தையும், உலகங்களிலுள்ள ஐச்வர்யத்தையும உன்னைப் பிரிந்த நான் விரும்பமாட்டேன்.] என்று இளையபெருமாளும் ஸ்வர்க்கத்திற்குச் செல்வதைத் தகாத இடத்திற்குச் செல்வதுபோலே வார்த்தை சொன்னாரன்றோ.

50. வாஸுதே₃வே மநோ யஸ்ய ஜபஹோமார்ச்சநாதி₃ஷு
தஸ்யாந்தராயோ மைத்ரேய! தே₃வேந்த்₃ரத்வாதி₃கம்
ப₂த₂(ல)ம் || [வி பு 2-6-41]

[மைத்ரேயனே! ஜபம், ஹோமம், அர்ச்சனம் முதலியவைகளில் எவனுடைய மனம் வாஸுதேவனிடம் லயித்திருக்கிறதோ, அவனுக்கு தேவேந்திரனாயிருக்கை முதலிய பலங்கள் இடையூறாகவே ஆகின்றன] என்று ஸ்ரீ பராசரரும் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் எம்பெருமானிடம் ஈடுபட்டவனுக்கு இந்திரபதவியும் இடையூறாகும் என்று பேசினார். (விண்ணுடனே ஒன்றாக மெச்சுவே) 'உள்நாடு' என்பது இந்த லீலா விபூதியையே குறிக்கிறது என்று பொருள் கொள்ளும் போது ''விண்ணாடு'' என்பதைப் பரமபதம் என்றே பொருள் கொள்ளவேண்டும். இந்தலீலாவிபூதியில் எம்பெருமா

---

f 'ஆராகி'-எந்த ஜந்மமாகிலுமாம். g ''எவ்விழிவில்'' எந்த

80. பிறப்பிறப்பு மூப்புப் பிணிதுறந்து பின்னும்
இறக்கவு மின்புடைத்தா மேலும் — மறப்பெல்லாம்
ஏதமே யென்றல்லா லெண்ணுவனே மண்ணளந்தான்
பாதமே யேத்தாப் பகல்.

பதவுரை:— பிறப்பு இறப்பு மூப்பு பிணி துறந்து — பிறப்பது, இறப்பது, கிழத்தனம், நோய் இவைகளைக் கழித்து, பின்னும் — அதற்குமேல், இறக்கவும் இன்பு உடைத்தாமேலும் — அளவில்லாத ஸுகரூபமான கைவல்ய மோக்ஷம் உண்டாயிற்றாகிலும், மண் அளந்தான் — பூமியை அளந்த ஸர்வேச்வரனுடைய, பாதம் — திருவடிகளை,

---

ஞயிருக்குமிருப்பிறே. e உள்நாடென்று ஸம்ஸாரமாகக் கொண்ட பக்ஷத்தில், விண்ணாடென்று பரமபதமாகக்கடவது (மண்ணாட்டிலித்யாதி) ஸம்ஸாரந்தானே தண்ணிது. f அதிலே நிஹீந ஜந்மமாகவுமமையும்; g எல்லா இழிவையுமுடைத்தாகவுமமையும்; பகவதநுபவயோக்யமான ஜந்மமே வேண்டுவது. இதுக்குப் புறம்பான ஜந்ம வ்ருத்தங்கள் அப்ரயோஜநங்கள். 79

---

னுக்குக் கைங்கர்யம் செய்வதைவிட பரமபதம் செல்வதும் பெரிதல்ல என்று இவர்கள் நினைத்திருப்பார்கள் என்று கருத்து. (மண்ணாட்டில் ஆராகி எவ்விழிவிற்றாலும் ...பிறப்பு) மண்ணாடாகிற ஸம்ஸாரமண்டலமே மிகத்தாழ்ந்தது; அதிலும் மிகத்தாழ்ந்த பிறப்பில் பிறந்திருந்தவர்களாயிருந்தாலும், ஜ்ஞானத்தாலும் ஆசாரத்தாலும் எல்லாவிதமான தாழ்வுகளை உடையவர்களாயிருந்தாலும், எம்பெருமானை அநுபவித்துக் கைங்கர்யம் செய்யும் பிறப்பே வேண்டியது. இப்படியல்லாத பிறப்பும் ஒழுக்கமும் ஜ்ஞானமும் பயனற்றவை 79

---

வ்யாபாரமாகிலுமாம். [மண்ணாடு தொடங்கி ஒன்றாக வெண்ணுமே] என்று க்ரியை, 79

ஏத்தா—துதி செய்யாத, பகல்—காலத்தில் ஏற்படும், மறப்பு எல்லாம்— நினைவற்றிருக்கை அனைத்தையும், ஏதமே என்றல்லால் எண்ணுவனே—து:க்கரூபமே என்றல்லது வேறொருபடியாக நினைப்பேனோ?

---

வ்யா:— எண்பதாம் பாட்டில்; (பிறப்பித்யாதி) ஸம்ஸார ஸம்பந்தமற்று a அளவிறந்த ஆத்மாநுபவமுண்டாயிற்றுகிலும். (மண்ணளந்தான் பாதமே யேத்தாப்பகல்

---

80, அவ:— 'இவ்வுலகில் இழிபிறப்பில் பிறந்தாலும் அவனுக்கு ஆட்செய்யும் ஜன்மம் மிகச் சிறந்தது' என்றார் சென்றபாட்டில். 'மோக்ஷமே கிடைப்பதானாலும் அவனை மறந்திருக்கும் அந்த மோக்ஷம் துன்பமென்றே கொள்வேன்' என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (பிறப்பு இறப்பு மூப்புப் பிணிதுறந்து பின்னும் இறக்கவும் இன்பு உடைத்தாமேலும்) ஸம்ஸாரமண்டலத்தில் உண்டாகும் பிறப்பு மரணம் கிழத்தனம் நோய் ஆகியவற்றை முற்றிலும் கழித்து, அதற்குமேலே அளவிறந்த இன்பம் உண்டானாலும்; "ஜராமரண மோக்ஷாய" [கீதை 7—29] "பிறவித்துயரற" [திருவாய் 1—7—1] "மரணம் தோற்றம் வான்பிணி மூப்பென்றிவை மாய்த்தோம்" [திருவாய் 8-3-2] முதலானவிடங்களில் சொல்லப்பட்டபடியே பிறப்பு, மரணம், கிழத்தனம், நோய் ஆகியவற்றைத் துறந்திருக்குமிடமாய்,

"குறுகாநீளா இறுதிகூடா எனையூழி
சிறுகா பெருகா அளவிலின்பம் சேர்ந்தாலும்
மறுகாலின்றி மாயோன்! உனக்கேயாளாகும்
சிறுகாலத்தையுறுமோ? அந்தோ! தெரியிலே"
[திருவாய் 6—9—10]

---

அரு:— எண்பதாம் பாட்டு. a "பின்னுமிறக்கவும்" இறக்கை - அளவிறக்கையாய், மிகவுமென்றபடி, 80

81. பகலிரா வென்பதுவும் பாவியாது எம்மை
இகல்செய் திருபொழுது மாள்வர்—தகவாத்
தொழும்பரிவர் சீர்க்குந் துணையிலரென் றோரார்
செழும்பரவை மேயார் தெரிந்து.

பதவுரை:— தெரிந்து செழு பரவை மேயார்—ஆராய்ந்து அழகிய திருப்பாற்கடலிலேகண்துயில்பவர், இவர்-இவ்வாழ்வார், தகவா தொழும்பர்—(நம் கருணைக்குத்) தகுதியற்ற தாழ்மையையுடையவர், சீர்க்கும்—(மேலான நம்) குணங்களை அநுஸந்திப்பதற்கும், துணை இலர்—ஸஹாயமற்றவர், என்று ஓரார்—என்று ஆராயாதவராய், பகல் இரா என்பதுவும்—பகற்காலமென்பதையும், இராக்காலமென்பதையும் (குணாநுபவத்திற்குயோக்யதையையும், அயோக்யதையையும்), பாவியாது—விசாரியாமல், எம்மை—அடியேனை, இகல் செய்து—யுத்தம் பண்ணி (ஆட்கொண்டு), இருபொழுதும்—இரண்டு காலங்களிலும், ஆள்வர்—(தம் குணங்களில்) ஈடுபடுத்துவர்.

---

மறப்பெல்லாம் ஏதமேயென்றல்லாலெண்ணுவனே) திருவுலகளந்தருளின நீர்மையையுடையவன் திருவடிகளை ஏத்தாத பகலில் மறப்பெல்லாம் து:க்கமே என்றல்லது மநோரதிப்பனோ? 80

---

முதலானவிடங்களில் சொல்லப்பட்டபடியே அளவிறந்த ஆத்மாநுபவரூபமான கைவல்யமோக்ஷம் உண்டானாலும் என்று கருத்து. (இறக்கவும் இன்புடைத்தாமேலும்) அளவிறந்த இன்பம் உண்டானாலும் என்று பொருள். (மண்ணளந்தான் பாதமே ஏத்தாப்பகல் மறப்பெல்லாம் ஏதமே என்றல்லால் எண்ணுவனோ) உலகளைத்தும் அளந்தருளிய ஸௌசீல்யத்தை உடையவனான எம்பெருமானுடைய திருவடிகளை ஏத்தாமல் அந்த ஸுகம் அநுபவிக்குங் காலத்தில் ஏற்படும் எம்பெருமானைப்பற்றிய மறப்பெலாம் துன்பமே என்று நினைப்பேனே யல்லது அதை ஒரு இன்பமாக எண்ணுவேனோ அடியேன். 80

வ்யா:-எண்பத்தோராம் பாட்டில்; a பகலித்யாதி b பகற்போது போக்குவதொன்று இரா வைதும்போது போக்குவதொன்று என்று பாராதே எல்லாப்போதுமொருபோகியாகத் தம்முடைய குணங்களாலே எடுப்பும் சாய்ப்புமாக b₂ யுத்₃த₄ம்பண்ணி இரண்டு போதுமாள்வர். c அம்புபட்ட புண்ணுக்கு மருந்துண்டு; குணத்தாலே ஈடுபட்ட புண்ணுக்கு மருந்தில்லையிறே. (தகவித்யாதி₂) தம்முடைய க்ருபைக்கும் அவிஷயமான சிறிதென்றும் தம்முடைய குணங்களைக்கொண்டு (51) 'बोधयन्तः परस्परं' (போ₃த₄யந்த: பரஸ்பரம்) பண்ணுகைக்குக் கூட்டுமில்லையென்றும் விசாரியார், (தெரிந்தித்யாதி₂) ஆஶ்ரிதரோடு ஸம்ஶ்லேஷிக்கும் தேசமாராய்ந்து திருப்பாற்கடலிலே மேவினவர். 81

---

81. அவ:— எம்பெருமானை மறந்திருக்கும் காலம் மோக்ஷமேயாகிலும் துன்பமே என்றார் சென்றபாட்டில். இரவு பகல் என்னும் வேற்றுமை இல்லாமல் தம்மை எம்பெருமான் ஆட்கொண்டபடியைப் பேசுகிறார் இப்பாட்டில்.

வ்யா:— (பகல் இரா என்பதுவும் பாவியாது எம்மை இகல் செய்து இருபொழுதும் ஆள்வர்) 'பகற்பொழுது காரியங்களைச்செய்வதற்கு உரியது. இராப்பொழுது ஓய்வுகொண்டு தூங்குவதற்கு உரியது என்று நினையாமல், இரண்டு பொழுதிலும் ஒருபடியாகத் தம்முடைய குணங்களைக்கொண்டு என்னைச்சேர்த்து குணுநுபவம் மிகவும் கிடைத்தபோது இன்புற்றும், அதில் போதுமானவளவு கிடைக்காதபோது வருந்தியும் போம்படியாக என்னோடு போர்செய்து இரண்டுபோதிலும் தம் குணங்களிலே ஈடுபடுத்துவர். அம்பினால் உண்டான புண்ணுக்கு மருந்துண்டு. குணத்திலே ஈடுபட்டதால் விளைந்த புண்ணுக்கு மருந்தில்லையன்றோ. (தகவாத் தொழும்பர் இவர் சீர்க்கும் துணையிலர் என்று ஓரார்) 'தம்முடைய கருணைக்குத் தகுதியில்லாத தாழ்மையுடையவர் இவர்' என்றும், 12 வது பக்கத்திலுள்ள 3 வது ப்ரமாணத்தின்படி தம்முடைய குணங்களைப் பேசி ஒருவர்க்கொருவர் போது போக்குவதற்குக் கூட்டாவார் ஒருவரும் இல்லாதவர் என்றும் ஆராயாமல் இருக்கிறார். இபபடிப்பட்டவர் யாரெனில்— (தெரிந்து செழும் பரவை மேயார்) அடியார்களைப் பெற்று அநுப₄விப்பதற்கு உறுப்பான இடத்தை ஆராய்ந்து திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளியவர், 81

82 தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் வாளா
இருந்தொழிந்தேன் கீழ்நாள்க ளெல்லாம்-கரந்துருவின்
அம்மானை யஞ்ஞான்று பின்றொடர்ந்த ஆழியங்கை
அம்மானை யேத்தா தயர்த்து.

பதவுரை: — தெரிந்து உணர்வு-'அறிவு' என்றுசொல்லத் தக்க ஜ்ஞாநம, ஒன்று இன்மையால்— சிறிதும் இல்லாமை யால், தீவினையேன் —கொடிய பாபத்தையுடைய நான், அஞ்ஞான்று — அக்காலத்தில், கரந்த உருவின் — மறைந் துள்ள (ராக்ஷஸ) வேஷத்தையுடைய, அம் மானை — அந்த மாய மானை பின் தொடர்ந்த—பின் பற்றியவராய், ஆழி அம் கை அம்மானை—அறுகாழியை அழகிய கையிலேயுடைய பெருமானை, ஏத்தாது— துதி செய்யாமல், அயர்த்து — அறிவு கெட்டு, கீழ்நாள்களெல்லாம்—கீழ்க்கழிந்த நாட்களெல் லாம், வாளா இருந்தொழிந்தேன்—பாழாகக் கழித்து விட்டேன்.

---

82. அவ:— இரவு பகல் என்னும் வேற்றுமையில்லா மல் பகவதநுபவத்தைப் பெற்றதைக் கூறினார் சென்ற பாட்டில். அதை இழந்து போந்த அநாதி காலத் திற்கு வருந்துகிறார் இப்பாட்டில்.

---

அரு:— எண்பத்தோராம் பாட்டு, a, b ''போதுபோக்கு வர் போது போக்கமாட்டாரென்று விசாரியாதே என்றபடி. b ''இகல்'' யுத்தம். c குணமீடுபடுத்துமோவென்ன அருளிச் செய்கிறார் (அம்புபட்டபுண் இத்யாதி) [தெரிந்து செழும் பரவை மேயார் - தகவாத்தொழும்பரிவர் சீர்க்கும் துணை யிலரென்றோரார் பகலிராவென்பதுவும் பாவியாதெம்மை இகல்செய்து இருபொழுதுமாள்வர்] என்றந்வயம்.

வ்யா:— எண்பத்திரண்டாம் பாட்டில்; (தெரிந்துணர்வு) "அது பத்து இது எட்டு" என்னும் ஜ்ஞாநமித்தனையல்லது ப₄க₃வத்₃விஷயத்தை ஆராயும் ஜ்ஞாநமொன்றில்லாமையால்; (52, "तत् ज्ञानमज्ञानमतोन्यदुक्तं" (தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யது₃க்தம்) 53 "विद्यान्या शिल्पनैपुणम्" (வித்₃யாந்யா ஶில்பநைபுணம்) என்னும் ஜ்ஞாநமுண்டாகாமையால். (தீவினையேன்) ப₄க₃வத₃நுப₄வ யோக்₃யமான காலத்தைப்

---

வ்யா:— (தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால்) அறிவு என்று சொல்லத்தக்க அறிவு இல்லாமையாலே; "அது பத்து இது எட்டு" என்னும் கலைக்குதவாத அறிவுகள் இருந்தவையொழிய 'அறிவு' என்று சொல்லத்தக்க ப₄க₃வத்₃ விஷயத்தை ஆராயும் அறிவு சிறிதுமில்லாமையால் என்று கருத்து.

52. ஸஂஜ்ஞாயதே யேந தத₃ஸ்ததோ₃ஷம்
ஶுத்₃த₄ம் பரம் நிர்மலமேகரூபம்।
ஸந்த்₃ருஶ்யதே வாப்யதி₄க₃ம்யதே வா
தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது₃க்தம் ॥
[வி பு 6-5-87]

[எந்த அறிவினால், தோஷமற்றதும், சுத்தமானதும், மிகவும் மலமற்றதும், ஒருபடிப்பட்டதுமான அப்பரவஸ்து அறியப்படுகிறதோ, காணப்படுகிறதோ, அடையப்படுகிறதோ. அதுவே ஜ்ஞானம்; அதைக்காட்டிலும் வேறானது அஜ்ஞானம்]

53, தத் கர்ம யந்ந ப₃ந்த₄ாய ஸா வித்₃யா யா விமுக்தயே।
ஆயாஸாயாபரம கர்ம வித்₃யாந்யா ஶில்பநைபுணம்॥
[வி பு 1-19-41]

[எந்தக் கர்மம் பந்தத்திற்குக் காரணமல்லவோ, அதுவே கர்மம்; எது முக்திக்குக் காரணமோ அதுவே வித்யை. மற்ற கர்மம் சிரமத்திற்கே. மற்ற வித்யை சிற்பபாண்டித்யம் போன்றதே.] என்று ப₄க₃வத்₃விஷயத்தைப்பற்றிய அறிவே அறிவென்றும் மற்ற அறிவுகள் அறியாமையை ஒக்கும் என்றும் சொல்லப்பட்டதன்றோ. (தீவினையேன்)

பாழே போக்கின பாபத்தைப்பண்ணினேன். (வாளாவித்யாதி₃) a குனியக்குறுணி பற்றுங்காலமெல்லாம வ்யர்த்த₂மேயிருந்தேன். (கரந்துருவித்யாதி₃) கைகேயி வரத்திலகப்படாவிட்டது பெருமாள் திருக்கையிலறுகாழியொன்றுமேயாகாதே! வடிவைக் கரந்து வர்த்திக்கிற அம்மாயமானை அன்று தொடர்ந்த, அறுகாழியைக் கையிலேயுடைய ஸர்வேஶ்வரனை இளையபெருமாளும் உதவாத தசையிலே ஏத்தப்பெறுவது; அறிவுகெட்டுக்கிடந்த நான் பாழே போக்கினேன். b 'பெருமாள் மாயமானையெய்து மீண்டெழுந்

---

எம்பெருமானை அனுபவிக்கத் தகுதியுள்ள காலத்தை வீணே போக்கின பாபத்தைச்செய்த அடியேன் (வாளா இருந்தொழிந்தேன் கீழ் நாள்களெல்லாம்.) பயிர் நிறைய விளைந்து கிடக்கும் வயலிலே, குனிந்தால் குறுணி நெல் கிடைக்கக்கூடிய காலம்போலே, எம்பெருமான் அவதரித்து, சிறிது ஆனுகூல்யம் இருந்தாலும் அவனது கடாக்ஷத்திற்கு இலக்காகக் கூடிய காலத்தையெல்லாம் வீணே போக்கினேன். (கரந்துருவின் அம்மானை ஏத்தாது அயர்த்து) ராக்ஷஸ வடிவை மறைத்துக்கொண்டு மாயமானாக உருக்கொண்ட மாரீசனை அன்று பின்தொடர்ந்தவனாய், கணையாழி மோதிரத்தைக் கையிலே உடையவனான எம்பெருமானை, இளையபெருமாளும் உதவாத காலத்திலே, துதித்துப் பணிசெய்திருக்கவேண்டுமே. அப்படிச் செய்யாமல் அத்தகைய விப₄வாவதார காலங்களிலெல்லாம் அறிவுகெட்டுக்கிடந்த நான் வீணே கழித்தேன். மனுஷ்யாவதாரம் எடுத்த சக்ரவர்த்தித்திருமகனைப் பற்றிப் பேசுகையாலே, இங்கு "ஆழியங்கை அம்மான்" என்றது கணையாழியைக் கையிலே தரித்த பெருமானைக் குறிக்கிறது.

---

அரு:— எண்பத்திரண்டாம் பாட்டு. a (குனியக்குறுணி) அவதரித்து அல்பாநுகூல்யத்திலே விஷயீகரிக்கும்காலம் போயிற்றென்று தாத்பர்யம். b ஏத்துகை-அடிமையாய்,

தருளுகிறபோது அடிக்கொதித்து நடக்கமாட்டாமை தளிர்களை முறித்திட்டு அதின்மேலே எழுந்தருளினார்" என்று ஒருவன் கவிபாடவும், எம்பெருமானார் கேட்டருளி, "மாறியிடுகிற திருவடிகளிலே என் தலையை வைக்கப்பெற்றிலேன்" என்றருளிச்செய்தார். 82.

---

கைகேயி வரத்தின்படி அரசர்க்குரிய எல்லா ஆபரணங்களையும் விட்டுக் காட்டுக்குச் செல்லும்போதும், அந்த வரத்திற்குத் தப்பி. பெருமாள் கையில் கணையாழியொன்றே அவருடன் காடு சென்றதன்றோ. அதுவே பிராட்டிக்கு அடையாளமாக அனுமன் மூலம் அனுப்பப்படும் பேறும் பெற்றதன்றோ. அந்தப்பெருமையைக் கருதி "ஆழியங்கை அம்மான்" என்கிறார். (ஏத்தாது அயர்த்து) இங்கு 'ஏத்துதல்' என்னும் பதமும் துதிப்பதையும் அதனால் விளையும் பணிசெய்தலையும் குறிக்கிறது. ஆழ்வார் வனவாஸத்தில் பெருமாளுக்குப் பணிசெய்ய ஆசைப்பட்டது போலே எம்பெருமானாரும் ஆசைப்பட்டார் என்பதைக் காட்டும் பின்வரும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது:— "ஸ்ரீராமபிரான் மாயமானை அம்பெய்தி வீழ்த்தித் திரும்பி எழுந்தருளும்போது, கடும் பகலாகையாலே அடிக்கொதித்து வெய்யிலில் நடக்க முடியாமல் இளந்தளிர்களை முறித்துப் பாதையிலிட்டு அதன் மேலே அடியிட்டு எழுந்தருளினான்" என்று ஒரு புலவன் கவிபாடினான். இதைக்கேட்ட எம்பெருமானார் "மாறி மாறி இடுகிற திருவடிகளைத் தாங்கும்படி என் தலையில் வைக்கப் பெற்றிலேனே" என்று அருளிச்செய்தாராம். 82

---

இப்படி அடிமைசெய்யப் பெற்றிலேனென்று இழவுபட்ட பேருண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (பெருமாள்) இத்யாதி. 82

83. அயர்ப்பா யயராப்பாய் நெஞ்சமே சொன்னேன்
உயப்போம் நெறியிதுவே கண்டாய் — செயற்பால
வல்லவே செய்கிறுதி நெஞ்சமே யஞ்சினேன்
மல்லர்நாள் வவ்வினனை வாழ்த்து.

பதவுரை:— நெஞ்சமே — மனமே!, செயற்பால அல்ல — செய்யத்தகாதவற்றை. செய்கிறுதி — செய்கிறாய்; அஞ்சினேன் — (நான்) பயப்படுகிறேன்; மல்லர்நாள் — மல்லர்களுடைய ஆயுளை, வவ்வினனை — போக்கினவனை, வாழ்த்து — வாழ்த்துவாயாக; உயப்போம் நெறி — உஜ்ஜீவிக்கும் வழி, இதுவே கண்டாய் — இதுவன்றோ? நெஞ்சமே — என் மனமே!, அயர்ப்பாய் — (அவனை) மறந்து அழிவைத் தேடிலும் தேடு, அயராப்பாய் மறவாமல் உஜ்ஜீவித்தாலும் உஜ்ஜீவி; சொன்னேன — (உனக்கு நன்மையே) சொன்னேன்.

---

வ்யா — எண்பத்துமூன்றும் பாட்டில் (அயர்ப்பாயயராப்பாய்) அவனை மறந்த அநர்த்தப்படிலும் படு: நினைத்து வாழிலும் வாழ். (நெஞ்சமே சொன்னேன்) ஒருத்தன் கிணற்றிலே விழா நின்றால் கரையிலே நின்றவனுக்குக் கூப்பிட வேணுமிறே அவ்வோபாதி சொன்னேன்.

---

83. அ:— அநாதிகாலமாக இந்த நெஞ்சு இருந்த நிலைவுக்கு வருகையாலே, மறுபடியும் அந்த நிலை வந்து விடக்கூடாது என்று நெஞ்சை பரிகஷிக்கிறார்.

வ்யா:— (அயர்ப்பாய் அயராப்பாய்) முற்காலத்திற் போலே அவனை மறந்து அழிந்தாலும் அழி; மறவாமல் நினைத்து வாழ்ந்தாலும் வாழ். (நெஞ்சமே சொன்னேன்)

(உய்யப்போம் நெறியிதுவே கண்டாய்) அல்லாததெல்லாம் விநாசத்துக்குக்கண்ட வழி; உஜ்ஜீவிக்கக் கண்ட வழி இதுவே. (செயற்பாலவல்லவே செய்கிறுதி) நான் தப்பச் செய்கிறதுண்டோ? என்னில்: செய்யப்படாதவை செய்யா நின்ருய். செய்யப்படாதவையாவது-அயோக்₃யனென்று அகலுகை; தே₃வதாந்தர ப₄ஜனங்கள். a (நெஞ்சமேயஞ்சினேன்) b "புகழ்வோம் பழிப்போம்" என்கிற இத்தை அஞ்சினேன். (மல்லரித்யாதி₃) நம்முடைய விரோதி₄கள்

---

ஒருவன் கிணற்றில் விழப் போகையில் இருந்தால் கரையிலே தள்ளி நிற்பவன் "கிணற்றில் விழுந்து விடாதே" என்று கூப்பிடவேண்டுமன்றே; அதுபோலே உனக்குச் சொன்னேன். (உய்யப்போம நெறியிதுவே கண்டாய்) நான் இப்போது சொல்லப் போகின்ற இதுவே உய்வதற்கு வழி, மற்ற தெல்லாம் அழிவதற்கு வழி. 'நான் என்ன தப்பு செய்தேன்?' என்று நெஞ்சு கேட்கக் கூறுகிருர்—(செயற் பால வல்லவே செய்கிறுதி) 'அநாதிகாலமாக நீ செய்த தகாத காரியங்களுக்குக் கணக்குண்டோ? மற்ற தெய்வங்களைத் தொழுகை. மற்ற விஷயங்களிலே ஈடுபடுகை முதலான எத்தனை தகாத காரியங்களைச் செய்தாய்? இப்போதும் "நான் அயோக்₃யன்" என்று அகலுகையாகிற தகாத காரியத்தை அடிக்கடி செய்கிருயே. (நெஞ்சமே அஞ்சினேன்) "புகழ் வோம் பழிப்போம்" [2] என்று தொடங்கி நீ அடிக்கடி "அயோக்₃யன்" என்று அகல்வதைக் கண்டு நான் அஞ்சினேன். 'அவனை அடைவதற்குத் தடையாகவும், தகுதியின்

---

அரு:— எண்பத்துமூன்ரும் பாட்டு. a, b "அஞ்சினேன்" புகழ்வோமோ பழித்தோமாவுதோமென்று அயோக்₃யதாநுஸந்தா₄நம் பண்ணின இத்தை அஞ்சினேனென்கையாலே, அயோக்₃யதாநுஸந்தா₄நம் பண்ணி அகலவேண்டா; பயப் படாமல் வாழ்த்து என்றபடி. 83

84. வாழ்த்தி யவனடியைப் பூப்புனைந்து நின்தலையைத்
தாழ்த்திருகை கூப்பென்றால் கூப்பாத— பாழ்த்தவிதி
எங்குற்றா யென்றவனை யேத்தாதென் னெஞ்சமே
தங்கத்தா னாமேலும் தங்கு,

பதவுரை:— அவன் அடியை— அந்த ஸர்வேச்வரனுடைய திருவடிகளை, வாழ்த்தி—மங்களாசாஸனம் செய்து, பூ புனைந்து— புஷ்பங்களைச் சாத்தி. நின் தலையை தாழ்த்து— உன் தலையை (அவன் திருவடிகளிலே) தாழ்த்து, இரு கை கூப்பு என்றால்— இருகைகளையும் கூப்பு என்றால், கூப்பாத என் நெஞ்சமே —கூப்பாத என் மனமே! அவனை — அந்த ஸர்வேச்வரனை எங்குற்றாய் ; என்று— 'எங்கு சென்றாய்' என்று, ஏத்தாது—(அன்புடன்) ஸ்தோத்ரம் பண்ணாமல், தங்கத்தானாமேலும்-தரிக்கக்கூடுமாகில், தங்கு—தரித்திரு, பாழ்த்த விதி—என்னே பாபத்தின் கனம்?

---

செய்வதென்னென்னில், மல்லரிற்காட்டில் மிடுக்குண்டோ? அவற்றுக்கு மல்லருடைய ஆயுஸ்ஸை க்ரஸித்தவனை வாழ்த்து. 83

---

மையை விளைப்பனவாயும் நம்மிடம் பலதோஷங்கள் உள்ளனவே? எனில்; (மல்லர் நாள் வவ்வினனை வாழ்த்து) சாணூர முஷ்டிகர்களாகிற மல்லர்களை அழிந்துபோம்படி செய்தவனை வாழ்த்துவாயாக; மல்லர்களைக் காட்டிலும் நம்முடைய தோஷங்களுக்கு பலம் உண்டோ? அந்த தோஷங்களைப் போக்குவதற்கு மல்லர்களுடைய ஆயுளை அழித்தவனை வாழ்த்து. 83

84. அவ:— நெஞ்சை மேலும் பரிக்ஷிக்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— என்பத்துநாலாம் பாட்டில்; (வாழ்த்தியித்யாதி) எங்குற்றாயென்றவனை ஏந்தாதென நெஞ்சமே தங்கத்தானுமேலும் தங்கு; பாழ்த்த விதி) பகவத்விஷயத்திலொன்றுஞ் செய்யாத நெஞ்சே! 'அவனை வாழ்த்தி அவன் திருவடிகளிலே பூக்களைப் புனைந்து உன் தலையை அவன் திருவடிகளிலே தாழ்த்து' இரண்டு திருக்கையையுங் கூப்ப என்றால் கூப்பாதே; "எங்குச் சென்றாகிலும் கண்டு" என்னும்படி ஆதரத்தோடே அவனை ஏத்தாத நெஞ்சமே! அவனைப் பற்றாதே கால் பாவலாமாகில் தங்கு

---

வ்யா:— (வாழ்த்தி அவனடியைப் பூப்புனைந்து நின் தலையைத் தாழ்த்து இருகை கூப்பென்றால் கூப்பாத என் நெஞ்சமே! எங்குற்றாய் என்று அவனை ஏத்தாது தங்கத் தானுமேலும் தங்கு, பாழ்த்த விதி) என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். (என் நெஞ்சமே) பகவத்விஷயத்தில் ஒன்றும் செய்யாத என் நெஞ்சமே! "முந்துற்ற நெஞ்சே" [பெரிய திரு 1] என்று பகவத்விஷயத்தில் தன்னிலும் முற்பட்டிருந்த நிலைக்கு முன்னால், அநாதிகாலமாக பகவத்விஷயத்தில் ஈடுபடாதிருந்த நிலையைக் கருத்தில் கொண்டு பேசுகிறார். (வாழ்த்தி அவனடியைப் பூப்புனைந்து நின் தலையைத் தாழ்த்து, இருகை கூப்பென்றால் கூப்பாத என் நெஞ்சமே) 'எம்பெருமானை வாழ்த்தி அவன் திருவடிகளிலே பூக்களைச் சாத்தி, உன் தலையை அவன் திருவடிகளிலே தாழச்செய்து இரண்டு கைகளையும் கூப்பு' என்றால் கூப்பாமல் இருக்கும் என் நெஞ்சே! தம்முடைய தலைகளும் கைகளும் அநாதிகாலமாகத் தம் நெஞ்சிட்ட வழக்காய் இருந்தமையாலே அவற்றை நெஞ்சின் தலையாகவும் கைகளாகவும் கூறுகிறார். (அவனை எங்குற்றாய் என்று ஏத்தாது தங்கத்தானுமேலும் தங்கு) "எங்குச் சென்றாகிலும் கண்டு" [திருவாய்மொழி 6—8—5] என்னும்படி, மிக்க ஆர்வத்தோடு தேடிச்சென்று அவனை ஏத்தாமல் ஏதேனும் ஓரிடத்தில் நிலையாகத் தங்கலாமாகில் தங்குவாய்.

85. தங்கா முயற்றியவாய்த் தாழ்விசும்பின் மீதுபாய்ந்து
எங்கேபுக் கெதத்வம செய் திட்டனகொல் – பொங்கோதத்
தண்ணம்பால் வேலைவாய்க் கண்வளரும் என்னுடைய
கண்ணன்பால் நன்னிறங்கொள் கார்.

பதவுரை:— பொங்கு ஓதம்— கிளர்ந்த அலைகளையுடைய, தண் அம் பால் வேலைவாய்-குளிர்ந்து அழகியதான திருப்பாற் கடலில், கண்வளரும் — கண்வளர்ந்தருளுகிறவனும், என்னுடைய — எனக்கு ஸ்வாமியான, கண்ணன்பால் — கண்ணனிடத்திலுண்டான, நல் நிறம் கொள் — அழகிய நிறத்தைக் கைக்கொண்ட, கார் — மேகங்கள், தங்கா முயற்றியவாய் —

---

'பாழ்த்தவிதி' என்று தம்முடைய அகலுகையைச் சொல்லி வெறுக்கவுமாம்; ப்ராப்திப்ரதிபந்தகமான கர்மவைகல்யத்தைச் சொல்லவுமாம். 84

---

(பாழ்த்தவிதி) இப்படிப் பாழாய்ப்போன விதியொன்று நமக்கு விளைவதே! இதனால் "அயோக்யன்" என்று தாம் அடிக்கடி அகல்வதைக்கூறி வெறுப்பதாகவும் கொள்ளலாம் அல்லது அவனை அடைவதற்குத் தடையாயிருந்த இருவினைகளாகிற தோஷத்தைச் சொல்லி வெறுப்பதாகவும் கொள்ளலாம். 'வாழ்த்தி' 'ஏத்தாது' என்றதால் வாக்காகிற மொழியைக்கொண்டும், 'பூப்புனைந்து' 'தலையைத் தாழ்த்து' என்றதால் காயமாகிற மெய்யைக் கொண்டும் எம்பெருமானிடம் ஈடுபடும்படி நெஞ்சுக்கு உபதேசிக்கிறுராகையாலே மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் அவனிடம் ஈடுபடாமல் தரித்து நிற்பது இயலாது என்பது இப்பாட்டின் தாத்பர்யம். 84

---

அரு:— எண்பத்துநாலாம் பாட்டு. [நெஞ்சமே! அவனடியிலே பூப்புனைந்து வாழ்த்தி நின்தலையைத் தாழ்த்து. இருகைகூப்பென்றால் கூப்பாதே, எங்குற்றாயென்றவனை யேத்தாதே தங்கத்தானுமேலும் தங்கு] என்றந்வயம். 84

(அந்நிறத்தைப் பெறுகைக்கு) விடாத முயற்சியை உடையனவாய்க்கொண்டு, தாழ் விசும்பின்மீது — பரந்த ஆகாசத்திலே, பாய்ந்து — உலாவி, எங்கே புக்கு — எங்கேபோய், எத்தவம் செய்திட்டன கொல் — எப்படிப்பட்ட தபஸ்ஸை அனுஷ்டித்தனவோ?

---

அவ:— எண்பத்தைந்தாம் பாட்டில்; (தங்கா முயற்றிய வாய்) பகவத்விஷயத்திலே எடுப்பும் சாய்ப்புமாய் a இன்னுதாகா, b லோகயாத்ரையை அநுஸந்தித்து அங்கும் அதுவேயாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது.

வ்யா:— (தங்கா முயற்றியவாய்) உத்யோகித்த உத்யோகம் மாறாதே c ஆகாசாவகாசமெல்லாமுலாவி எங்கே புக்கு என்ன தபஸ்ஸு பண்ணிற்றினவோ? (பொங்கித்யாதி) கிளர்ந்த திரையையுடைத்தாய்க் குளிர்ந்திருந்த

---

85. அவ:— இதுவரையில் எம்பெருமானை அநுபவிப்பதில் த்ருப்தியும் அத்ருப்தியும் மாறிமாறிச் சென்று வருந்திய ஆழ்வார் உலகத்தைப்பார்த்தார். ஆகாயத்தில் திரியும் மேகத்தைக்கண்டு "என்ன தவம் செய்து எம்பெருமானின் நிறத்தை இந்த மேகம் பெற்றதோ?" என்று ஈடுபடுகிறார்.

வ்யா:— (தங்கா முயற்றியவாய்த் தாழ் விசும்பின் மீது பாய்ந்து எங்கே புக்கு எத்தவம் செய்திட்டன கொல்) கொண்ட முயற்சியைக் கைவிடாமல் ஆகாயத்தில் உள்ள இடமெல்லாம் உலாவி, இந்த மேகங்கள் எந்த புண்ய க்ஷேத்ரத்திலே புகுந்து என்ன தவத்தைப்பண்ணினவோ? இப்படி ஐயமுறுவதற்குக் காரணத்தைப் பாட்டின் பிறபகுதியிலே காட்டுகிறார். (பொங்கு ஓதம் தண் அம் பால் வேலைவாய்க் கண் வளரும் என்னுடைய கண்ணன் பால் நல் நிறங்கொள் கார்) பொங்கிவரும் அலைகளை உடையதாய், குளிர்ந்து அழ

---

அரு: எண்பத்தைந்தாம் பாட்டு. a (இன்னுதாகா) இன்னுதாகா நிற்கச் செய்தே. b (லோகயாத்ரை) மேகத்திலே கண்வைக்கை. c "தாழ்விசும்பு" - எங்குமொக்க ஒத்து ஏகரூபமாயிருக்கை.

86 கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான்
பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான் – சீர்கலந்த
சொல்நினைந்து போககாரேல் சூழ்வினையினாழ்துயரை
எனநினைந்து போக்குவரிப் போது.

பதவுரை: - கார்கலந்த மேனியான்—மேக்த்தோடொத்த திருமேனியையுடையவனும், கைகலந்த ஆழியான்— திருக்கையிலே பொருந்தின திருவாழியையுடையவனும், பார் கலந்த (ப்ரளயகாலத்தில்) பூமிபொருந்தியிருக்கும்படியான, வல் வயிற்றான் —வலிமை பொருந்திய திருவுதரத்தை யுடையவனும், பாம்பு அணையான் – திருவநந்தாழ்வானைப் படுக்கையாயுடையவனுமான எம்பெருமானின், சீர் கலந்த – மேலான குணங்களுடன் சேர்ந்திருக்கிற, சொல் நினைந்து – திருநாமங்களை அனுஸந்தித்து, சூழ்வினை

* திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற என் கண்ணனுடைய விலக்ஷண நிறத்தைக் கொள்ளுகிற மேகங்கள் எவ்விடத்தே புக்கு என்ன தபஸ்ஸைபண்ணிற்றினவோ? 85

கியதாய் இருக்கும் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுகிற என் கண்ணனிடம் உள்ள சிறந்த நீல நிறத்தைக் கைக்கொண்டிருக்கும் மேகங்கள் எங்கு புகுந்து என்ன தவத்தைச் செய்தனவோ? என்று பாட்டின் முற்பகுதியோடு சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டும். (எங்கே புக்கு எத்தவம்) இதே கருத்தைத் திருவிருத்தம் முப்பத்திரண்டாம்பாட்டில்

"மேகங்களோ உரையீர்-திருமால் திருமேனியொக்கும்
யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு பெற்றீர்"

என்று கேள்விகேட்டுக்கொண்டு

" உயிரளிப்பான் மாகங்களெல்லாம் திரிந்து நன்னீர்கள்
சுமந்துநுந்தம்
ஆகங்கள் நோவ வருத்தும் தவமாம் அருள் பெற்றதே''

என்னும் பிற்பகுதியில் "உலகெங்கும் திரிந்து உடம்பு நோவ நீரைச்சுமந்துசென்று மழைபெய்து கைம்மாறுகருதாமல் உயிர்களை ரக்ஷித்த தவத்தின் பலனே இது" என்று பதிலுரைத்து விவரித்திருப்பதும் இங்கு நோக்கத்தக்கது. 85

யின்—(நம்மைச்) சூழ்ந்துகொண்டிருக்கிற பாபத்தினாலுண்டான. ஆழ்துயரை—மிகுந்த துன்பத்தை, போக்காரேல்—போக்கிக்கொள்ளார்களேயாகில். இப்போது—இந்தக்காலத்தைத்தான், என் நினைந்து—(வேறு) எதை அநுஸந்தி₄த்து, போக்குவர்—போக்கிக்கொள்வார்கள்?

---

வ்யா:— எண்பத்தாறும் பாட்டில்; (கார்கலந்த மேனியான்) ஸர்வதா₃ ஸத்₃ருஶமான மேக₄த்தோடொத்த திருமேனியையுடையவன். (கைகலந்தவாழியான்) திருக்கையிலே வேர்விழுந்த திருவாழியையுடையவன். (பார்கலந்த வல்வயிற்றான்) ப்ரளயம் தேடிவந்தாலும் தோற்றாதபடி கலந்த பூ₄மியையுடையவனுமாய், வயிற்றில் புக்கவற்றுக்கு

---

86. அவ:-எண்பத்துநாலாம் பாட்டில் 'முக்கரணங்களாலும் எம்பெருமானிடம் ஈடுபடாமல் உயிர்வாழ இயலாது' என்றார். எண்பத்து ஐந்தாம் பாட்டில் லோகயாத்ரையைப் பார்க்கும் போது வானில் உலாவும் மேக₄ம் போன்ற நிறமுடைய திருமேனியழகு நினைவுக்கு வந்தது. இப்பாட்டில் 'அத்தகைய அழகனை எம்பெருமானிடம் ஈடுபடாமல் த₄ரித்து நிற்பது அரிது என்பது இருக்கட்டும்.போது போக்கவும் இயலாதே' என்கிறார்.

வ்யா:— (கார்கலந்த மேனியான்) சென்ற பாட்டில் அநுஸந்தி₄த்தபடி எல்லாப்படியாலும் மேக₄த்தை ஒத்திருக்கும் திருமேனியை உடையவன. 'கலந்த' என்று எல்லாப் படியாலும் ஒத்திருக்கைச் சொல்லுகிறது. (கைகலந்த ஆழியான்) திருக்கையிலே உறுதியாகக்கொண்டிருக்கும் திருவாழியை உடையவன். "கலந்த" என்று 'திருக்கையாகிற நிலத்திலே வேரூன்றியிருக்கும் செடியோ இது' என்றும், திருக்கையாகிற கிளையிலே பூத்தபூவோ இது' என்றும் சொல்லலாம்படி கையோடு பொருந்தியிருக்கையைச் சொல்லுகிறது. (பார்கலந்த வல் வயிற்றான்) பிரளய காலத்திலே உட்புகுந்து கலந்த பூ₄மியைக் கொண்ட திருவயிற்றை உடையவன். "கலந்த" என்றதால் பிரளய ஜலம் தேடிவந்தாலும் அதற்கு

ரக்ஷகமான வயிற்றையுடையவன். (பாம்பணையான் சீர் கலந்த இத்யாதி₂) வடிவழகுக்கும் கு₃ணங்களுக்கும் வாசகமாய், பசுங்கூட்டான சொற்களை நினைத்து அநுப₄வவிநாஶ்ய

---

அகப்படாதபடி திருவயிற்றில் இரண்டறக்கலந்தது என்று தோற்றுகிறது. "வல் வயிற்றான்" என்றதால் "நளிர்மதிச் சடையனும்" [திருவாசிரியம் 7] என்று சொன்ன ரீதியில் எத்தனை பொருள்கள் உட்புகுந்தாலும் அவற்றை ரக்ஷிக்கக் கூடிய திருவயிறு என்று காட்டுகிறது. (பாம்பணையான்) திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவன். (சீர் கலந்த சொல்) அவனுடைய வடிவழகையும் கு₃ணங்களையும் சொல்லும் பசுங்கூட்டான சொற்கள். பலவகைப்புஷ்பங்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட கதம்பமாலைபோலவும், பலவகைப் பதார்த்தங்களைக்கொண்டு சமைத்த கூட்டு போலவும் கு₃ணங்களைக்கொண்டே தொடுத்து ஆக்கப்பெற்ற ப₄க₃வத்₃விஷயமான இதிஹாஸபுராணங்களையும் அருளிச்செயலையும் உணர்த்துகிறது. "கார்கலந்த மேனியான் சொல்" என்று "மேக₄ஶ்யாமம் மஹாபா₃ஹும்" [மேகம் போல் கருநிறமுடையவனும் நீண்ட கைகளையுடையவனும்] என்று ஸ்ரீராமனைப் பேசும் ஸ்ரீராமாயணத்தையும், "கைகலந்த ஆழியான் சொல்" என்று பிறக்கும்போதே சங்கு சக்கரங்களோடு பிறந்த கண்ணனைப்பற்றிப் பேசும் ஸ்ரீமகாபாரதம், ஸ்ரீவிஷ்ணு புராணம், ஸ்ரீபாகவதம் முதலானவற்றையும் "பார்கலந்த வல்வயிற்றான சீர்கலந்த சொல" என்று ப்ரளயகாலத்தில் எம்பெருமான் உலகனைத்தையும் திருவயிற்றினுள்ளே வைத்து ரக்ஷித்ததைப் பேசும் புராணங்களையும் "பாம்பணையான சீர்கலந்த சொல" என்று அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனான பெரிய பெருமாளின் குணப்பெருமையைப் பேசும் திருவாய்மொழி முதலான அருளிச்செயல்களையும் குறிப்பதாக ரஸிகர்கள் விவரிப்பர். 'சொல்' என்று திருநாமமாகவுமாம். (சொல் நினைந்து சூழ்வினையின் ஆழ்துயரைப் போக்காரேல்) இப்படிப்பட்ட எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லும் திருநாமங்

87. இப்போது மின்னு மினிச் சிறிது நின்றாலும்
எப்போது மீதேசொல் லென்னெஞ்சே—எப்போதும்
கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்
மொய்கழலே யேத்த முயல்.

பதவுரை:— என் நெஞ்சே— எனக்கு அனுகூலமான மனமே!. நம்மேல் வினைகடிவான்—நம்மிடமுள்ள பாபத்தைப் போக்குகைக்காக, எப்போதும்—எல்லாக் காலங்களிலும், கை கழலா நேமியான்—திருக்கையைவிட்டு அகலாத திருவாழியையுடைய எம்பெருமானின், மொய் கழலே—அழகிய திருவடிகளையே, ஏத்த முயல்—ஸ்தோத்ரம் செய்ய முயலுவாயாக; இப்போதும்—இக்காலத்திலும். இனி—இதுக்குமேல, இன்னும் சிறிது நின்றாலும்—மேலும் சிறிது காலம் சென்றாலும், எப்போதும் எல்லாப்போதிலும், ஈதே சொல்-இத்திருநாமங்களையே சொல்விப்போருவாயாக.

---

மான பாபபடலமான துஃக்கத்தைப்போக்காராகில், (என்னினைந்து போக்குவர் a இப்போது) பாபம் போக்கவேண்டாவாகில் b காலத்தைச் செல்லவிடும்படி யெங்ஙனே? 86

---

களை நினைத்து, அநுபவித்தே தீரவேண்டிய பாபத்தினால் உண்டாகும் மிகுந்த துக்கத்தைப் போக்கிக்கொள்வது நியாயம். அப்படிப் போக்கிக்கொள்ளாமல் இருந்தாலும் இருக்கட்டும். (என நினைந்து போக்குவர் இப்போது) முன் கூறிய சொற்களை நினைத்துப் பாபத்தைப் போக்குவதில் ஶ்ரத்தையில்லாவிட்டாலும் பொழுதை வேறு எப்படிச் செலவிடுவது? தம்மைப்போலவே உலகிலுள்ள அனைவரையும் நினைக்கும் தர்மபுத்திரரைப்போன்றவராகையாலே, ஆழ்வார் இப்படி அருளிச்செய்கிறார். 86

---

அரு:— எண்பத்தாறும் பாட்டு. a. b ''இப்போது'' இப்போதை-இக்காலத்தை என்றபடி. 86

அவ:—எண்பத்தேழாம் பாட்டில்(இப்போதும்) "லோகத்தாரைக்கொண்டு கார்யமில்லையிறே. நீ முன்னம் எப்போதுமித்தையே சொல்" என்று நெஞ்சுக்கு உபதேசிக்கிறார்.

வ்யா:— (இப்போது மித்யாதி) இக்காலத்திலும், வருங்காலத்திலும் மற்றுமெல்லாக்காலத்திலும் இதுதன்னையே சொல்லு (என்நெஞ்சே) நான் புக்கவிடத்தே புகக்கடவ நெஞ்சே! (எப்போது மித்யாதி) எல்லாக்காலத்திலும் கையை விட்டகலாத திருவாழியையுடையவன் நம்பக்கல்

---

87. அவ:—"என் நினைந்து போக்குவர் இப்போது" என்று சென்ற பாட்டில் சொன்ன ஆழ்வாரைப் பார்த்து "உலகில் பலர் பலவிதமாகப்பொழுது போக்குவதைக் காண்கிறோம்" என்று நெஞ்சு சொல்ல, அந்த நெஞ்சைப் பார்த்து "உலகில் எவர் எப்படி வேண்டுமானாலும் போது போக்கட்டும்; நமக்கு அதனால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை, நீ முதன்முதலில் எல்லாக் காலத்திலும் இத்திருநாமங்களையே அநுஸந்திப்பாய்" என்கிறார்.

வ்யா:—(இப்போதும் இன்னும் இனிச் சிறிது நின்றாலும் எப்போதும்) இக்காலத்திலும் இனி வரும் காலத்திலும் ஒரு கணம் விடாமல் எல்லாப்போதிலும். (ஈதே சொல்) எம்பெருமானுடைய திருநாமங்களையே சொல்லிப் போது போக்குவாயாக. (என் நெஞ்சே) அநாதிகாலமாக, கைகூப்பென்றால் கூப்பாமலும் அவனை ஏத்தாமலும் இருந்த நிலை தவிர்ந்து நான் சொன்னதையெல்லாம் கேட்கும் நிலையிலிருக்கும் என்னுடைய நெஞ்சே! (எப்போதும் கைகழலா நேமியான்) எல்லாக்காலத்திலும் தன் கையைவிட்டுப் பிரியாதிருக்கும் சக்கரத்தாழ்வானை உடையவன். எதற்காகவென்றால் (நம்மேல் வினைகடிவான்) நம்மிடமுள்ள பாவங்களையும் தடைகளையும் நீக்குவதற்காகவே இப்படிக் கையும் திருவாழியுமாக ஸேவை ஸாதிக்கிறான் என்று கருத்து. (மொய்கழலே ஏத்த முயல்) 'மொய்' என்று அழகைச் சொல்லுவதாய், 'இனிய திருவடிகளைத் துதிக்க முயல்வாயாக" என்கிறார். "மொய்" என்று பலத்தைச் சொல்லுவதாய், "தன்னைப்பற்றினவர்களைக

பாபத்தைப்போக்குவான். a (மொய்கழலே யேத்தமு b பேராக்யமான திருவடிகளை ஏத்த உத்ஸாஹி. c பரிஞரை விட்டுக்கெடாத திருவடிகளை என்றுமாம். (ஈதே சொல்)

பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்த
பெரியதிருவந்தாதிவ்யாக்யானம் முற்றிற்று.
ஆழ்வார் திருவடிகளே சரணம்
பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

---

கைவிடாத பலமுடைய திருவடிகளைத்துதிக்க முயல்வாயாக" என்றும் பொருள்கொள்ளலாம். "ஈதே சொல்" என்று முன் பாட்டில்சொன்ன சீர்கலந்தசொற்களைச் சொல என்று சொல்லுவதாகவும் சொள்ளலாம். அவனுடைய "மொய்கழலே ஏத்த முயல" என்ற இந்த வார்த்தையையே எப்போதும் சொல என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
பெரிய திருவந்தாதி வியாக்கியான விவரணம்
முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்
ஜீயர் திருவடிகளே சரணம்

Released by Maaran's Dog ,Toronto , Canada

---

அரு:—எண்பத்தேழாம் பாட்டு. a. b, c "மொய்கழல்" அழகாதல், மிடுக்காதல்.

அப்பிள்ளை திருவடிகளே சரணம்

